# சித்த வயித்தியத் திரட்டு

சென்னை இறையாட்சி
இந்திய மருத்துவக் கலாசாலை மாணவர்களின்
வேண்டுகோளுக்கிணங்கி

டாக்டர் N. வாசுதேவராவ், L. I. M.
டாக்டர் சி. என். குப்புசாமி முதலியார், L. I. M.
இவர்களால் தொகுக்கப்பட்டு



சென்னை
க. சம்பந்த முதலியாரால்
பிரசுரம் செய்யப்பட்டது.
*1933.*



# பொருளடக்கம்.

# சித்த வயித்தியத் திரட்டு

—— : ——

## அமுர்தாதி குளிகை

### எண்சீர் விருத்தம்

இதனைப்பா ரதிமதுரங் கோஷ்ட மேலம்
  இனியகோ ரோசனையுஞ் சாத்திர பேதி
இதனைப்பார் சண்பகப்பூ மாசிக் காயும்
  இலவங்கப் பூவுடனே வகைக்குக் கால்தான்
இதனைப்பா ரிவையெல்லாங் கல்வத் திட்டே
  யெழில்வெட்டி வேர்மாசிப் பத்திரி வேரும்
இதனைப்பார் கருந்துளசி விலாமிச் சோடு
  இன்பமதாய் நால்வகையுஞ் சாற்றி ழிந்தே.

பிழிந்துமே கல்வத்தில் வார்த்த ரைத்துப்
  பிலமாக விருசாமம் விடாம லாட்டுக்
கழிந்துமே குன்றிபோ லுண்டை செய்து
  கண்மணியே நிழலுலர்த்திச் செப்பில் வைத்து
வழித்துமே வாலைமனோன் மணியைப் போற்றி
  வகையான மாசிபத்திரிக் கியாழந் தன்னில்
அழிந்துமே குளிகையொன்று கொடுத்துப் போடு
  அரகரா முன்சொன்ன மாந்தம் போமே.

மாந்தம்போம் லவங்கப்பூக் கியாழந் தன்னில்
  மகத்தான மாந்தசுரம் வாந்தி தீரும்
மாந்தம்போம் முலைப்பாலில் கொடுப்பீ ராகில்
  வதைத்துவரும் குடற்படுவன் நீர்ப்பாடு தீரும்
மாந்தம்போம் கரப்பன்நா வரட்சி தீரும்
  வயிற்றெரிவு வன்னிவிடாச் சுரமுந் தீரும்
மாந்தம்போ முப்பிசமு மிருமல் போகும்
  மகத்துவமா மமுர்தமெனுங் குளிகை பாரே.

———

## அஷ்ட பயிரவ குளிகை

### எண்சீர் விருத்தம்

தானான வாளமரைப் பலந்தா னப்பா தாக்கான பூரமுடன் லிங்கங் கந்தி
வானான வீரமுட ஞபி சூதம் வளமாக வித்தனையுஞ் சுத்தி செய்து
மானான விவையாறும் வராக னென்று மகத்தான திரிகடுகு சாதிக்
[காயும்
தேனான பத்திரியும் லவங்கந் தானும் திறமாக விவையெல்லாங் கல்வத்
[திட்டே.
இட்டுமே பழச்சாற்றிற் சாமம் ரண்டு இதமான முலைப்பாலிற் சாமம்
[ரண்டு
கட்டுமே பொடுதலையின் சாற்றிற் சாமம் கருவான பொற்கையான்
[சாற்றிற் சாமம்
நட்டுமே நாவற்பட் டைச்சாறு சாமம் நலமாகச் சாமமஃ தேழு மாட்டி
வட்டுமே வழித்தெடுத்து மிளகு போல வளமாக வுலர்த்தியதைச்
[செப்பில் வையே.
வையப்பா முலைப்பாலிற் கொடுத்தா யானல் வகையாக வறுபத்து
நான்கும் போகும்
செய்யப்பா தேனிலே கொடுத்தா யானல் தீராத தோடமெல்லாந்
[தீருந் தீரும்
பையப்பா லவங்கப்பூக் கியாழத் திற்றான் பகரவே கொண்டுவிட விட
[தோ டங்கள்
நையப்பா தீர்ந்துவிடு நோய்க ளெல்லா நலமாகக் கொண்டுவிட. வெல்
லாம் போமே.

## ஆநந்த பயிரவம்

### எழுசீர் விருத்தம்

மாறிலாநந்தவயிரவமுரைக்கில் வங்கங்காரீயம்வெங்காரம்
வீறிலாலிங்கம்கந்தகமிரதம் மிக்கதாம்பிரமரிதாரம்
கூறிலாச்சாந்தலோகமோர்சமனுய்க் கூட்டியேதிரிபலைக் குடிநீர்
தீறிலாவின்பம்பெறவரைத்திப்பால் தீயினிற்பட்சமேகாய்ந்தால்.
காய்ந்திடுகஷாயத்தோர்தினந்தோலா யந்திரமாயுறக்கூட்டித்
தோய்ந்திடவெரித்துத்துகளற்வாங்கித் தொடர்பணிப்பிச்சினலரைத்து
வாய்ந்திடக்குன்றியளவுறுகுளிகை மருவியநிழறனிலுலர்த்தி
ஆய்ந்திடுமனுபானங்களிற்கொடுக்க அகற்றிடுஞ்சீதாங்கனைத்தானே.

## இரச பூபதி

### எழுசீர் விருத்தம்

கர்மமாஞ் சந்நி வினையெலா மொழியக்
கழறுவன் குளிகையின் வகைகள்
வர்மமாம் ரசத்தின் பூபதி யுரைக்கில்
மாசிலாச் சுத்தித்த ரசந்தான்
கர்மமில் லாத கந்தகத் தோடு
கறுக்கின்ற நாபியு முருக்கும்
அர்மமா மராவும் பொடிசம னாக்கி
யவைநிறை வகைவகைச் சமனே.

வகைவகைச் சமனாய்க் கல்வமே யிட்டு
வளம்பெறு செருப்படிச் சாற்றில்
தகையவே மூன்று நாளரைத் திட்டுத்
தக்கதாம் ரவியினி லுலர்த்திப்
புகையவே பொடித்துக் காசியாங் குப்பிப்
புகழ்கின்ற சீலைமண் செய்தே
இகையவே வாலுகா யந்திரம் மதனி
லெரித்திடு பனிரண்டு சாமம்.

பனிரண்டு சாமமுத் தீயுமே யெரித்துப்
பதனமா யாறின பின்பு
முனியவே யெடுத் திஞ்சியின் சாற்றில்
முடுகியே யரைத்தொரு சாமம்
உனியவே யுழுந்து மிளகது போல
வுண்டைசெய் திட்டுமே யுலர்த்திப்
பனியவே யனுபா னத்திலிக் குளிகை
பயின்றிட மூன்றுநாள் தானே.

மூன்றுநாள் கொள்ளத் திலமொடு கடுகு
முரிந்திடும் புளியொடு மாம்சம்
தான்றொடு கைப்புத் தள்ளியே யுப்பு
தன்னொடு வற்றலு மாகும்
தோன்றுமோ சந்நி சுரமொடு குளிரும்
சூலையுங் கடுப்புமுப் பிசமும்

பான்ருெடு விஷங்கள் பல்பல கடியும்
பறக்குமே பாரினிற் ருனே.

## இராம பாணம்

### எண்சீர்ச் சந்த விருத்தம்

சுத்திசெய் வன்னிக் கர்ப்பம திரண்டுசுக
சுத்தியெலி கொல்லி மூன்றுமா மருளு
மத்தநீர் தனின்மூன்று நாளரைத் ததனை
மணிசிறிய பயறளவி லமுத மதிலிடவே
சர்க்கரையி லிட்டிட வெதுப்புச்சுர மாறும்
தனிப்பாலி லேகஞ்சி பத்தியமு மாகும்
உற்றதொழில் சுரராம பாணமிது வாகும்
உண்டையது பழகியிட வோடும்வெகு சுரமே.

## இராஜராஜேஸ்வரம்

### எழுசீர் விருத்தம்

காத்திடு ராசரா சந்தனைக் கூறில் கழறிய பாரதந் துத்தம்
ஏத்திடு லிங்கம் கந்தக நாபி யியல்சிலை யிவைசம ளுகச்
சேர்த்திடு வேப்பீர்க் குக்குடி நீரில் அரைத்தபின் திரட்டியே குகை
[யில்
கூர்த்திட வடைத்துச் சீலைமண் பூசிக் குக்குட புடமொரு புடமே.
புடம்பெற வைத்தங் காறியே யெடுத்துப் புகழுறு சாகத்தின் பிச்சும்
தடம்பெறு கடாவின் பிச்சினு மிருநாள் தனித்தனி யரைத்தபின்
[வாங்கித்
திடம்பெறு குன்றி யளவுற வருத்துத் திரிகடு கஷாயநீர் தன்னில்
படம்பெற வுரைத்துக் கரைத்திடு மளவிற் பறந்திடுஞ் சந்நிபன்
மூன்றும்.

## இலிங்க பூபதி

### அறுசீர் விருத்தம்

லவங்க மோம நற்காவி ரசசெந் தூரம் ரசபூரம்
செவந்த லிங்க மெடைசரியாய்ச் சிறக்க வரைத்துத் தண்ணீரால்
உவந்த பயறு போற்றிரட்டி யுரைத்தா லுயர்ந்த மருந்தெதிலும்
இவர்ந்த பிணிகள் பலவகலு மிதன்பேர் லிங்க பூபதியே.

## எமதண்டக் குளிகை

கட்டளைக் கலிப்பா

~~எண்சீர்ச் சந்த விருத்தம்~~

நாபி சூத மனோசிலை கந்தகம் நல்ல ரோசனம் வீரமும் பூரமும்
காவிக் கல்லுடன் லிங்கமும் வெள்ளையும் கண்டரி தாரமு மேலங்கி [ராம்புடன்
மேவு காமனுஞ் சுக்குட னக்கரா விண்ணு டன்கூட்டி யேரச செந்தூரம்
ஆவி யேவருங் கோஷ்டமும் ரோகணி யடைவு பால்துத்தஞ் சோம்பது கூட்டியே.

கூட்டியே யீஸ்வரி ரசிதங் காரமுங் குற்றமில் லாமலே குழிக்கல்லி [விட்டரை
மாட்டியே கோகன மூலியின் சாற்றினால் மைந்தனே சாமமு நான்க [தாகவே
நாட்டி யேயரை பயறள வுண்டைசெய் நமனார் வந்திடு போதேரீ [யீந்திட
ஓட்டு மேபக டேறிவந் தோனையே உத்தம எம தண்ட குளிகையே.

குளிகை யொன்றது பூரச மேகொடு கொல்லு மெண்பது வாயு சுரங் [களும்
அளிவு செய்திடு தோஷமும் விக்கலு மப்பனே பக்க வாதகுன் மங் [களும்
சுளி சுளித்திடுங் கோழை யிருமலும் சொல்ல வொண்ணாப் பதின் [மூன்று சந்நியும்
பளிவு செய்திடு வெகுரோகந் தானுமே பறக்கு மென்று [illegible] [செய்தே.

## கண்காச மாத்திரை

### எழுசீர்ச் சந்த விருத்தம்

சங்கு சுக்கொடு மிளகு திப்பிலி தாரமோ டதி மதுரமும்
புங்கம் வித்தொடு பீத ரோகணி புதிய துத்த மனோசிலை
அங்க ரைப்பது நந்தி பத்திரி யான தேனொ டளாவியே
கங்குல் பற்றிய கண்ணி லிட்டிடு காச படலமு நாசமே.

## கணேச குளிகை

### அறுசீர் விருத்தம்

இரதமொரு கழஞ்சுடனே நாபியாறு
மிங்குலிக மிரண்டுகந் தகமுமூன்று
சதுராய்ப்பொன் னூமத்தைச் சாறுவிட்டுச்
சாமமரை யுழுந்தளவு வுண்டைசெய்து
சிதறாத சகலசுரந் தமக்குமாத்திரை
திப்பிலியுந் தேன்கூட்டிக் கொடுக்கத்தீரும்
பதறாமல் முன்னூலில் யோகப்பேரும்
பருகணேச குளிகையெனப் பகருந்தானே.

## கபாட மாத்திரை

### அகவல்

ஆதிக் கிராணி யதிசார பந்தனம்
சாதிக்காய் மேற்பத்திரி காயநற்சீரி
விடையங் கிராம்பு அபினியும் வெந்தயம்
கடைவன்னிக் கர்ப்பங் கழற்சிப் பருப்பொடு
குராசானி யோமங் கூட்டிச் சமன்கொண்டு
ஆனந்த மூலிச்சா றடைவரைத் துண்டை செய்
மேலு மிலந்தையின் விரைப் பிரமாணம்
நிழலி லுலர்த்தி மதுவிலிடு மூன்றுநாள்
தாக்கக் கழிச்ச லாறுற் றணிவாம்
பூந்தாது நற்கனி நீர்தனி விடவே
இரத்தக் கடுப்பு மூலத்துட் கடுப்பு
இரத்தஞ் சீக்கிரா ணிசலக் கிராணி
சங்கா கிராணி சலமலக் கிராணி
தொங்குவாயுக் கிராணி சோறுக் கழிகிராணித்
திறமறுங் கிராணிக் கபாடம துண்மையே.

## கரவால வயிரவம்

### எழுசீர் விருத்தம்

அதிகர வால வயிரவ முரைக்கில்
அரன்விந்து சத்தியெவாச் சாரம்

கொதிபடி காரந் திரிகடு திரிபலை
கொடிவேலி பஞ்சமார் லவணம்
துதியெவாச் சார கந்தக நாபி
சுடர்ப்பெருங் காயமும் பிரண்டை
கதிவனக் கருணை மாவெருக் கின்வேர்
கருதியே சமனுறக் கூட்டி.

கூட்டிய வெருக்கம் வேர்க்கஷா யத்தில்
குழைத்திரு தினமுற வரைத்தே
வாட்டிய தெடுத்து வாலுகேந் திரத்தில்
வைத்திரு யாமமே யெரித்துக்
காட்டிய சுணங்கன் பிச்சினி லரைத்துக்
காய்ந்திடு நாரிகே ளத்தில்
சூட்டிய குன்றி யளவிடி லபிநியா
சனைத்துரத் திடுமது காண்க.

## கலியாண வயிரவம்

### எழுசீர் விருத்தம்

உற்ற கல்யாண வயிரவ முரைக்கில்
உருத்திரன் விந்துகந் தகஞ்சீர்த்
துத்த காரீயந் திப்பிலி லவங்கம்
சுவேதபா ஷாணமை நாபி
பெற்றதோர் சமனுக் கூட்டியே பொடித்துப்
பின்கொடி வேலியின் தண்ணீர்
வற்றநா லொன்றுய்ச் செய்தபாக் கியத்தை
வார்த்தொரு நாளரைத் துருட்டி

உடையாக் குகையில் வைத்து மண்பூசி
உயர்வாலு கேந்திரத் தொருநாள்
தொடர்கம லம்போ லெரித்தபின் வாங்கித்
துய்யசேற் பிச்சினு லரைத்துக்
கடைபெறுங் குறிப்பிற் சணவிதை யளவே
கழறனு பானத்தி லூட்டித்
தடையுற விளநீர் சருக்கரை பால்சேர்த்
தளித்திடக் கர்ணிகன் னாடான்.

## கத்தூரி மாத்திரை

### நேரிசை வெண்பா

கத்தூரி யொன்று கமழ்துருக்கம் பூவிரண்டு
சத்தாவின் கோரோ சனமூன்று—முத்தார
மெல்லியர்க டம்முலைப்பால் விட்டரைத்துக் குன்றியெடை
சொல்லுருண்டை செய்வாய் துணிந்து.

துணிந்துருண்டை வைத்திருக்கிற் றோடசந்நி பாதம்
பணிந்தபித் தஞ்சேத்மம் வாய்வுர்—தணிந்துவிடு
முத்தாரம் பூண்ட முகிழ்முலையீர் யோகப்பேர்
கத்தூரி மாத்திரையாங் காண்.

## காருண்ய வயிரவம்

### எழுசீர் விருத்தம்

செய்யதாங் காருண்ய வயிரவ முரைக்கில்
திகழுறு மிரதமப் பிரகம்
துய்யதற் சமனய்க் கூட்டியே பொடித்துத்
துதிகையார் தகரையின் சாற்றால்
உய்யதா யரைத்துத் திரட்டியே குளிகை
உற்றதை வாலுகேந் திரத்தில்
வையவே யாமம் வைத்தெரித் தெடுத்துப்
பன்றி மாயூரமார் பிச்சில்

பிறித்திடு மிரண்டு தினமுற வரைத்துப்
பெரிதுற வேணுவி லடைத்துக்
குறித்திடு நலங்கள் தேசகா லங்கள்
கோலிய குணங்களை நோக்கி
மறித்திடு மதற்கு மாடமாத் திரமே
வருத்தனு பானத்தி லூட்ட
வெறுத்திடு பிரலா பம்மறும் பத்தியம்
மிக்கதக் கிரோதன மிடுவார்.

## கோடாசூரி குளிகை

### எண்சீர் விருத்தம்

தானேதான் கோடாசூரி சாற்றக் கேளாய்!
தாளகமுஞ் சூதம்வசு வாசி சந்தம்

தேனேதான் சீனகாரம பச்சை நாபி
 தேவதாரு கோஷ்டிலவம் கடுகு லிங்கம்
மானேதான் ரோகணியுஞ் சித்ர மூல
 மகத்தான குரோசானி கஞ்சா வித்து
நானேதான் பேரீச்சு முந்தி ரிகை
 நலமான பச்சைக்கற் பூரங் கூட்டே.

கூட்டு திரிபலை சவர்க்காரம் காரம்
 கொள்ளன்ன பேதிதுரு சோமங் கந்தி
நீட்டியதோர் மஞ்சிட்டி சுக்கு திப்பிலி
 நேர்ந்தவபின் மடறுத்தங் கௌரி தொட்டி
தாட்டியே சாதிக்காய் சிலைசவ் வீரம்
 சார்வான பெருங்காயம் வலம்பு ரிக்காய்
வீட்டியே நேர்வாளங் கரிநாபி யுப்பு
 வெள்ளைப்பா ஷாணமுள்ளி நாற்பத் தஞ்சே.

அஞ்சான மருந்தெல்லாம் கழஞ்சு வீதம்
 அப்பனே யேழுநாள் கையான் சாற்றால்
மிஞ்சாம லரைமைபோல் வார மொன்று
 விட்டபின் னொச்சிச்சா றேழ்நா ளப்பால்
கஞ்சாம லரைத்துவிடி னுளீ ரேழு
 கடந்தபின் கொட்டைக் கரந்தை யேழ்நா
டுஞ்சாமல் மூவேழுந் தான ரைத்துச்
 சுகிர்தமுடன் சிறுபயறு யுண்டை யாக்கே.

ஆக்கியே நிழலுலர்த்தி வைத்துக் கொள்பின்
 அறுகம்வேர்க் கியாழத்தீ வெட்டை போகும்
நோக்கியே காசநோய் கமலச் சாற்றில்
 நுகரவே தீருமடா விடத்துக் கெல்லாம்
பாக்கியே சம்பழச்சா றரைத்துப் பூசு
 பறக்குமடா விடங்களறு பத்து நான்கும்
தாக்கியே தேள்காலி விடத்துக் கெல்லாந்
 தடவுவாய் கடிவாயிற் றீருங் காணே.

தீருமே தேளுக்குக் கண்ணிற் போட்டால்
 தீராத சந்நிகளுக் கிஞ்சிச் சாறு

மாறுமே சர்க்கரையிற் சுரதா கம்போ
மப்பனே மோரிலதி சார சுரம்போம்
ஈறுமே பித்தசிலேத் துமங்க ளெல்லா
மிஞ்சியிலே தாக்கிவிட வேகு மேகும்
மூருமே நாலுநாள் மாறற் காய்ச்சல்
முடக்கற்றான் கியாழத்தில் முழுதும் போமே.

போகவே வேப்பிலைச்சார் தான்றிக் காயும்
புகழான மிளகுடனே சுக்குங் கூட்டி
ஆகவே யாவின்கோ மயமுஞ் சேர்த்தங்
கருந்திடவே விடபாக மணுகா தப்பா
ஏகவே காமாலை சோகை பித்த
மியம்பியமுற் பாகஞ்செய் யேகு மேகும்
சாகவே யெதிரிவைத்த பில்லி சூன்யம்
தண்ணீரிற் குளிகையிட்டுக் குளிக்கப் போமே.

குளித்தபின்பு குளிகையொன்று குளிசம் போலக்
குருமுள்ளிப் பழத்திட்டுக் கையி லிட்டால்
விளித்தபில்லி சூனியமு மோடிப் போகும்
மிகுபூலா விருட்சத்தோல் தூள தாக்கி
யளித்தபின் னமுக்காரத் தூளுங் கூட்டி
யருந்திடவே யண்டத்தின் வாதந் தீரும்
முளித்தடுத்த மாலைக்கண் குருடு காச
முக்கியாரைச் சாற்றிலஞ் சனத்தைத் தீட்டே.

தீட்டவே சம்பழச்சாற் றரைத்துத் தீட்டு
சீர்சாதிக் காயுஞ்சர்க் கரையுஞ் சேர்த்து
மூட்டவே மூலவகைக் கிராணி தீரு
முகந்தகரியூ மத்தைச்சாற்றி னைச்சேர்த்
தூட்டவே நஞ்சுதின்ற பேர்கட் குத்தாக்
குடன்மீளு நஞ்சது தானுலகத் தோரே
நாட்டவே மாவிலிங்கச் சாற்றிற் கொள்ள
நாற்பத்தி ரண்டிரட்டி வாய்வுந் தீரும்.

தீருமடா கொம்மட்டிக் காய்ச்சாறு தன்னிற்
றீக்கிரந்தி யஷ்டகுன்ம மெட்டுந் தீரும்

தீருமடா மேற்படிச்சா றநுபா னத்திற்
றசைவாயு விப்புருதி சுவாச காசந்
தீருமடா பீலிகை நீராம்பற் கோளந்
திரும்பாச்சித் தப்பிரமை விகாரத் தோடு
தீருமடா கவிசிரைப்பு மந்தார காசஞ்
சிலேத்துமந்தொண் ணூற்றாறுந் தீர்ந்து போகுந்
தீருமடா முசல்வலிக்குக் கரியூ மத்தைச்
சேர்சாற்றி னசியமிடத் தீரும் பாரே.

பாரப்பா மிளகுசுக்கு திப்பிலி யோடும்
பண்பாகப் பொடித்துண்ணக் கபால குஷ்டஞ்
சீரப்பா பறக்குமடா கிரந்தி சூலை
சிலவிடமுங் கடிவிடமு மோடித் தீரும்
ஆரப்பா வறிந்தவர்கள் வாய்நீ ரோடே
யநுபான மறிந்திடவே தீருந் தீரும்
சாரப்பா பதசக்கரம் பாதப் புற்று
சாதிக்காய்த் தயிலத்தி லுறைத்துப் போடே.

போடவே கொடுங்கோடா சூரி யுண்டை
புண்ணுன கண்டமா லைக்குப் பூச
ஆடவே பசுவெண்ணெய் கலந்து மர்த்தி
அழிவான பிளவைப்புண் ணுன தற்கும்
கூடவே யெந்தெந்தப் புண்க ளுக்குங்
குழைத்திடுவா யாவெண்ணெய் கூறக் கேளாய்
நாடவே யஞ்சுருண்டை யரத்தை நீரி
னடக்கையிலே யுள்ளங்கால் வைத்துப் பூசே.

பூசினல் முக்காத முடனே யோடிப்
போய்மீண்டு முக்காதம் வரவே செய்வாய்
ஆசுவாய் பறித்தகட்டிற் குளிச மாக்கி
அபிஷேகம் பூசைபண்ணித் தேவ ருக்கு
வாசிகலை யுள்ளடங்கும் வசிய மாகும்
வாதமுதல் ஞானசித்தி வணங்குந் தானே
தேசிகனர் சுப்பிரமணிய ரெனக்குத் தானுஞ்
செப்பியகோ டாசூரி யுரைத்தேன் முற்றே.

## கோரோசன மாத்திரை

### பதினான்குசீர் விருத்தம்

கோரோச னஞ்சிவப் பாமல ரசிதளங் குலக்காய் லவங்க மேலம்
குஷ்டக்க ராகாரஞ் சசியிரத செந்தூரங் குலவுமப் பிரக பற்பம்
நேரோது பன்னொன்று முக்கழஞ் சொன்றினிறை நிலவான் றிவைகள்
[பொடிசெய்
நிகழ்சந்த னத்துகட் சண்பகப் பூவிவைக ணீதனிக் குடிநீர்
[புரீஇ
யோரோச னையின்றி நந்நான்கு சாமமரை யுண்டபின் குங்கு மப்பூ
யுண்மையாய்க் கியாழமிட் டரைசெயீ திருசாம முண்டையது
[குன்றி மணிசெய்
காரோதி மங்கையர் முலைப்பாலி லீயொன்று காணுறாஉ மயக்கம் வளி
கபரோக சலதோஷ சந்நிமண் டைச்சூலை கதிர்கண்ட பணியா
[மரோ.

### நேரிசை வெண்பா

கோரோச னக்குளிகை கொள்ளினண் டத்தைலத்
தேறு வருத்து மிசிவுவளி—நேராகும்
அள்ளுமுக்கு மாந்த மகலுங் கியாழமதில்
கொள்ளுமுன் றைந்துநாள் கோள்.

## சங்கரவயிரவம்

### எழுசீர் விருத்தம்

கொடுத்திடு சங்கர வயிரவ முரைக்கில்
கூறிய தாம்பிர பற்பம்
அடுத்திடு மிரத மிரும்பெவாச் சாரம்
அரியதாஞ் சத்தியின் சாரம்
எடுத்திடு படிகா ரத்துட னுறும்
இவைசம பாகமாய்க் கூட்டித்
தடுத்திடு பஞ்ச கோலமாங் குடிநீர்
தன்னிலோர் நாளுற வரைத்தே.

அரைத்தபின் தோளா யந்திரத் ததனை
அமைத்தொரு சாமமே யெரித்து

நிரைத்தது வாங்கிக் கபப்பிசி னென்ன
நெகிழ்ந்திட வரைத்திரு மாட்:
கரைத்திடு மனுபா னங்கண மதுவிற்
கலந்திடக் கணத்தினிற் றுனே
உரைத்திடுங் கொடிய குணவுருத் தாகன்
உடற்புகுந் தொளித்திடா தகல்வான்.

## சஞ்சீவி மாத்திரை

### அறுசீர் விருத்தம்

இருவி நாபி யரிதார மிரதங் கந்தகம் வெங்காரம்
வருமே தான்றிக் காய்சுக்கு வருந்து மிளகு திப்பிலியும்
தருமே வகையொன் றோர்கழஞ்சு தானே வாள மைங்கழஞ்சு
அருமைச் சுத்தி செய்திலக்க மான கழஞ்சு பதினைந்தும்.

கையாந்த கரையின் சாற்றால் கணக்கா யேழு நாட்களிலும்
மெய்யா யொருநாட் கொருசாமம் விடாம னன்றாய்த் தானரைத்து
உய்யக் குன்றிப் பிரமாண முண்டை செய்து நிழலிலுலர்த்
தையா சஞ்சீ விக்குளிகை யருளிச் செய்தா ரகத்தியனார்.

மூல வாயு சாதிக்காய் முனிபல் வாயு சிறுநீரில்
ஆலந் தரித்த பாம்புகடிக் கறிந்து தேசிப் பழச்சாற்றில்
மூல வியாதி வலிகுன்ம மூளைத்த நொச்சிச் சாற்றினிலும்
சூலை வலிக்கு முருங்கைமரத்துற்ற பட்டைச் சாற்றினிலும்.

கயத்து வகைகள் பத்துக்கும் காண்வெள் ளாட்டுப் பாலினிலும்
வயத்த நோய்க டாந்தீர வருந்திப் பத்திய மாகக்கொள்
மயத்துச் சாம்பல் பூசினி மகிழ்ந்தே யாடு மரன்பாதம்
முயல்சஞ் சீவிக் குளிகைக்கு முதலநு பான மிவை யன்றே.

## சந்நிபாத வயிரவம்

### எழுசீர் விருத்தம்

நாட்டிய சந்நி பாதவை ரவந்தான்
நவின்றிடி லிரதமப் பிரகம்
காட்டிய கந்த கங்கரு நாபி
கருதுகா ரீயம்வெங் காரம்
கூட்டிய தற்சம மாப்பெறப் பொடித்துக்
குலவிட வெருக்கமார் பாலில்

ஊட்டிய தினந்தா னேழுநா ளரைத்தே
யுற்றதோ ளாந்திரத் தோர்நாள்.
ஓங்குற மூட்டி யெரித்தபின் வாங்கி
உயர்கடா மஞ்ஞைமீன் பிச்சில்
தேங்குற மூன்று தினமுமே யரைத்துச்
செப்பிய வேணுவி லடைத்துப்
பாங்குற வுளுந்து மாத்திர மெடுத்துப்
பரவிய குணங்களை நாடித்
தாங்குறு கணத்திற் கஷாயமே யிட்டால்
தனிரக்திஷ் டீவியைச் சயிக்கும்.

## சாந்த சந்திரோதயம்

### கலி நிலைத்துறை

காந்த ரிப்பகை பொரிபூ ரந்தொடி கடையாதி
சாந்த மொன்றரை யொன்றரை யொன்றரை சம்பீரத்
தாய்ந்த ரைத்தழன் மணியென மணிபுரி யதனுமஞ்
சாந்த சந்திரோ தயமென வழனோய் தரியாதே.

## சாம்பிராணிப்பூக் குளிகை

### எண்சீர் விருத்தம்

போமப்பா வின்னமொரு குளிகை கேளாய்
புண்ணியனே சாம்பிராணி முதற்ற ரந்தான்
நாமப்பா பளிங்காக நாலுபலம் வாங்கி
நன்றாகப் பொடிசெய்து சட்டி யிட்டு
ஓமப்பா மேற்சட்டிக் குள்ளே நீயும்
உத்தமனே காகிதத்தை யுருப்போ லொட்டி
நாமப்பா மேன்மூடிச் சீலை செய்து
நன்மையுள்ள வடுப்பேற்றித் தீபம் வையே.

வைத்தக்கால் பசுநெய்யாற் றீப மேற்றி
மைந்தனே யடிச்சட்டித் தூறிற் சூடு
தைத்தக்கா ளுற்சாமஞ் சென்றபின்பு
தண்மையுடன் றணிறக்கிப் படுக்கப் போடு
செய்தொரு சீலைமண் ணவிழ்த்து மெள்ளத்
திறமான மேற்சட்டிக் காகி தத்து

ணைத்ததொரு வப்பிரக பற்பம் போலே
  நன்மையுள்ள வாசமதாய் மணக்கும் பாரே.

பாரப்பா வப்பூவை யெடுத்து நீயும்
  பாங்கான வெற்றிலைபாக் குண்ணும் போது
நேரப்பா மிளகளவு தின்று வந்தால்
  நேர்மையுள்ள தாதுவிர்த்தி நிலைக்கும் பாரு
காரப்பா வப்பூவுங் கழஞ்சி ரண்டு
  கனமான கிராம்புமோ கழஞ்சு மூன்று
கூறப்பா கோரோசனை கழஞ்ச தொன்று
  கூட்டியரை வெற்றிலையின் சாற்றி னாலே

சாற்றினு லிருநாழி யரைத்து மைந்தா
  தண்மையுள்ள குன்றிபோற் குளிகை கட்டி
ஆற்றிநன்றாய் நிழல்தனிலே பதனம் பண்ணி
  அப்பனே தேனிலொரு குளிகை யீந்தால்
போற்றியே மூன்றுநா ளாறு போதில்
  பொல்லாத சூதகத்தின் சுரங்கள் தீரும்
பார்த்திபனே நெய்மிளகி லீந்தா யானால்
  பறந்துபோஞ் சூதகத்தின் சயங்க டானே.

சயமான சர்க்கரையி லேழு நாள்தான்
  தண்மையுடன் றன்கொடுக்கத் தயவாய்க் கேளு
மயமான சூதகத்தின் வாய்வி னோடு
  மைந்தனே யுதிரத்தின் கட்டு தீரும்
நயமான வெற்றிலையில் மென்று தின்ன
  நன்மையில்லாச் சுகசந்நி நாடா தோடும்
பயமென்ன பத்தியங்கள் பயமோ வில்லை
  பரமான பூரணத்தின் பதிவு தானே

## சித்த வயிரவம்

### எழுசீர் விருத்தம்

இனிதரு சித்த வயிரவ மிசைக்கில்
  இரதங்கந் தகமரி தாரம்
தனிதரு சமனாய்க் கூட்டியே பொடித்துத்
  தளருறுக் குமரிநீர் விடுத்து

கனிதரு யாம மரைத்தவங் வளவே
கண்ணுதோ ளாந்திரத் தெரித்து
முனிதரு முத்தீ மீன்பெறு பிச்சின்
முதிர்ந்திட வரைத்த பினெண்ணே.

எண்ணிய கழையி லடைத்துவைத் ததனை
இருசண விதைப்பிர மாணம்
நண்ணிய கால பலமறிந் தெடுத்து
நண்மது திப்பிலி கூட்டிப்
பண்ணிய வனுபா னம்பெறக் கரைத்துப்
பரவிய குணந்தரக் கொடுக்கில்
திண்ணிய ஜிம்மகன் றன்னையே தீர்க்கும்
திக்கெலா மிக்கதாய்ப் புகழ.

சுவச்சந்த வயிரவம்

எழுசீர் விருத்தம்

தீதில்சு வச்சந்த வயிரவ முரைக்கின்
திகழ்வங்க பற்பம்வெங் காரம்
கோதில்நற் கந்தகம் வச்ச நாபங்
குலவிர தம்மிவை சுத்தி
ஓதில்மிக் குறவே சமன்பெறக் கூட்டி
உதகமாந் திரிபலைக் குடிநீர்
போதிலங் கதனு லிரண்டுநா ளரைத்துப்
பொற்புறத் திரட்டியந் நீர்க்கே.

நீடிய தோளா யந்திர மாகத்
தூக்கியே நிகரிரு யாமம்
கூடியவ் வளவு மெரித்தபின் வாங்கிக்
கோலத்தின் பிச்சினு லரைத்துத்
தேடிய குன்றி யளவுற வுலர்த்தித்
திகழிஞ்சிச் சாற்றினி லிடவே
ஓடிய கண்ட குப்சன்விட் டகலும்
ஓதனந் ததிதண்ணீ ருண்ணே.

## சூலைக் குடாரம்

### அகவல்

இரதம் வெங்காரம் இசைந்த கந்தகம்
திரிபலை திரிகடு தாளக நாபி
தாம்பிரம் வாளம் தற்சமன் கூட்டி
ஆங்கரி சாலை நீரரை மூன்னாள்
குன்றி யளவு கூட்டிடு மாத்திரை
யொன்றை யிஞ்சியி னுயரிய சாற்றில்
நன்றிடு சூலை குன்மமு நாடா.

## சூலை பூபதி

### அகவல்

இரசந் தொடி மூன்றிரவி பற்பம்
கரிய நாபி கந்தகம் வாளம்
வகைக்கோர் தொடியாம் வைத்திடு குழிக்கல்
தகவரை திருகு கள்ளிச் சாற்றில்
எருக்கம் பாலி லியலொவ் வோர்நாள்
சிறுமாத் திரையாய்ச் செய்து நிழலில்
உலர்த்து பின்குப்பி யுள்ளிட் டதனை
நல்மணற் பொறியில் நாட்டி யெரிப்பது
பன்னிரு சாமம் பகர்விளக் கைப்போல்
நன்று யாறின் நாபிகால் கூட்டித்
திருகு கள்ளி செழுமயில் மீனரா
காட்டுப் பன்றி யெருமைக் கடாப்பிச்
சரைத்துக் குன்றி யளவு செய்து
விரைந் தொன்றீய வெருவுஞ் சூலை
ஆதலிற் சூலைபூ பதியென வறைக.

## தாழம்பூ மாத்திரை

### எழுசீர் விருத்தம்

மாமகனி லிங்காரச செந்தூர கந்தகம் வாளமிவை யான தொடியும்
காமகனி லத்தேக மொன்றொன்று திரியுபய நற்கைந்த மலரா மலை

சாமமா லானபின் கறிபுளையு மணிசெய்து ஊத்திரா று பானத் திட
வாமமுறு வளிகுடல் வாயுமுத லேகுறும் வன்கைதை மலர்மணி யிதே

## திரிலோக ரட்சாமணி

### அறுசீர் விருத்தம்

பொன்வெள்ளி செம்பு காந்தம்
புகல் லோகம் நாபி துத்தம்
மின்வஜ்ஜிரம் வங்க பற்பம்
வெங்காரம் சிலையுங் கந்தி
தன்னவாச் சாரஞ் சரிபாய்ச்
சார்நொச்சி வேளை சாலை
இன்னிவை யொவ்வோர் நாளா
மியன்றரை சங்குட் சேரே.

சேர்த்துமண் சீலை நன்றாய்ச்
செய்தானைப்புடஞ் செய் நீக்கிச்
சேர்த்தனங் கூடன் பொடித்து
செவ்வெடைக் கிரதங் காலும்
ஆர்த்தரைக் கந்தியுஞ் சேர்த்
தரைசெருப் பண்டமுச் சூலி
கார்த்தலூ மத்தைக் காற்றில்
கணக்கொரு நாளு மரையே.

அரைத்துமாத் திரைகள் செய்தே
அடைகுப்பி மண்ணின் சீலை
மறைத்ததை மாக்கல் மூடி
மணற்பொறி நான்கு சாமம்
எரித்தது குளிர்ந்த பின்னர்
எடுத்தெடை நாலி லொன்று
இருப்பு செந்தூர மரைக்கால்
ஏமபற் பந்தான் சேரே.

சேர்த்திடு நாபி வீசம்
நீர்விட மரைய தற்கு
வார்த்திடு நாகதாளி
வளர் தேவதாளிச் சாறு

சேர்த்தவெண் காக்க ணந்தான்
திகழும்படி பாக லிஞ்சி
ஆர்த்தமண் பனை யரைத்தே
யதுபுரி குன்றி யளவே.

## நவலோகாக்கினி குமாரன்

### எழுசீர் விருத்தம்

ஓடிடு நவலோ காக்கினிக் குமாரனை உரைத்திடச் சுத்தித்த சூதம்
தேடிடு பொன்னும் வெள்ளிசெம் பிரும்பு திகழ்ந்தகா ரீயம்வெள்
[ளீயம்
சேடிடுங் காந்தம் வெண்கலத் தோடு திகழ்ந்தஅப் பிரகமொன் பதுமே
பாடிடும் பற்பம தாக்கியோர் நிறையாய்ப் பணத்திடு மெருக்கம்வே
[ரமே.
எருக்கம்வேர்க் கியாழந் தன்னினு லரைத்தே இயல்பெற அஞ்சுநாள்
[தானும்
மருக்கமாங் காசிக் குப்பியி லடைத்து மண்செய்து வாலுகை வைத்துப்
பருக்க வீராறு சாமந்தீ யிட்டுப் பண்புட னாறின பிறகே
பெருக்கமாங் கல்வத் திட்டுமே பொடியாய்ப் பெருமையக்
[கியாழத்தி லாட்டே.
ஆட்டியே குன்றி நிறையள வாக அடர்ந்ததோர் நிழல்தனி லுலர்த்திப்
பாட்டிய அனுபா னந்தனிற் குளிகை பருகிடச் சகலமாஞ் சுரங்கள்
நாட்டிய சந்நி நடுக்கலுங் குளிரும் நாவினில் வாட்சியுந் திமிரும்
காட்டிய யரிதி முன்பனி போலக் கலங்கியே நடுங்கிடுந் தானே.

## பச்சைக் கர்ப்பூர மாத்திரை

### பதினான்கு சீர்க்கழிநெடிலடிவிருத்தம்

சீர்பெருகு பசியகர்ப் பூரமில வங்கமுஞ் செம்மையா குங்கு லக்காய்
தேசுதிகழ் ரசபற்பங் கந்தகஞ் சுத்தியாய்ச் செப்புமல பந்தாரியும்
நீர்பெருகு தொடிசமன் கொண்டரை சுற்றுழை நீரினாற் சிக்குமளவே
நேர்மையாய் மாடநிறை மணிபுரிந் தநுபான நிர்மலப் பிரசமிஞ்சி

ஏர்பெருகு சாறுகளி லீந்திடோர்மணிவேளை யிரண் டலிநா ளினில்
இயமனெப்பு வெப்புச்சு ரந்தாப சுரமுடனே யிகல்வாத மெண்ப
[தோடும்

பார்பெருகு பித்தமீ ரிருபானுஞ் சேத்துமம் பகர்தொணூற் றுறு
[முடனே
பாற்றிடும் பாம்பின்வாய்த் தேரைபோ லிஃதுண்மை பச்சைக்கர்ப்
[பூர மணியே

## பால சஞ்சீவி

### எண்சீர் விருத்தம்

திரிகடுகு வெங்காரஞ் சாதி லிங்கஞ் சிறந்திடவே யைம்மருந்துஞ்
[சமன தாக
நெறிபடவே யெலுமிச்சம் பழத்தின் சாற்றால் நெகிழவரைத் தொருசா
[ம நிறைய தாகக்
குறியுடனே யுண்டைதனைப் பயற்றிற் பாதி குளிர்நீழ றனிலுலர்த்திக்
[குழவிக் கீய
மறிபடவே பாலசஞ் சீவி யென்று வகுத்துரைத்தார் மலைமுனிவர்
[மண்ணு ளோர்க்கே

மலைமுனிவர் தானுரைத்த வகையே தென்னில் மாந்தகண சுரதோடம்
[வயிற்றி னோட்டம்
கொலைசெய்யும் பித்தமுத லிருமல் வாந்தி குலைந்திடுநோ யுள்ளதுவுங்
[குடிதான் போக
நிலைபெறவே பத்திரியைப் பிட்ட தாக்கி நீர்வாங்கித் திரிகடுகு கற்க
[மாக்கி
உலையுயர்த்த கியாழமதில் கற்க மோடு உண்டையொன்று தானெடுத்
[துரைத்தி டாயே.

உரைத்திடுமே சுரவிருமல் கணநா முள்ளு உவந்தகோ ரோசனமு
[மொக்கக் கூட்டிக்
கரைத்திடுங்கா லிரத்தகண மூலங் கண்டால் கடுகவே சாதிக்காய்
[புளிவித் தோடு

அரைத்திடுமே யுண்டையொன்று சுக்குங் கூட்டி யருந்திடவே வில்வ
[பழச் சதைக்குள் வைத்து
வரைத்திடுமென் றருள்முனிவர் விபரஞ் சொன்ன வாலசஞ் சீவியெ
[ன்றே வகுக்க லாமே.

வகுக்குங்கால் பத்திரிதன் வகையைக் கேளு மணித்துளசி செம்
[முள்ளி யாடா தோடை
பகுத்திடுவாய் தூதுவளை விட்ணு காந்தி பண்புசெறி கண்டங்கத்
[தரியி னோடு
நிகழ்த்திடுமே வெதுப்படக்கி பேய்ப்பு டோலும் நின்றசங்க ளிலைகொ
[ச்சில் நிறைதான் கூட்டிச்
செகுத்திடுமே சுவாசசுர கணதோ டங்கள் தெரிந்துரைத்தார் மாமு
[னிசஞ் சீவி யென்றே

## பாஷாண மாத்திரை

### அகவல்

பாஷாண மாத்திரைப்பேர் பாண்டிதோத் தமகிரீடை
பாசுப தாத்திரப்பேர்ப் பாணமாம் பிணிப்படைக்கே
பாழான காத்திரத்தைப் பாலரு ளாயிற்போற்றும்
பாதாதி கேசமட்டும் பாய்ச்சிய கவசமாகும்
பாவக மாஞ்சுரத்தைப் பாறமோதிடு தண்டாகும்
பாஷாண மொருதொடிக்குப் பாவிரி யறவிரண்டு
பாய்ச்சிமத் தித்துமேலொன் பான்றினம் வெயிலிற்சீலை
பார்த்திபத் தொருபுடஞ்செய் பாடலத்தினு மவ்வாறே
பாசரை யினுமவ்வாறே பான்மையிற் பருப்பஞ்செய்த
பாண்டுவை லிருசச்சாற்றால் பாவிரு நாளரைத்துப்
பால்பிரித் தரை மாவூரில் பாங்குற வுருட்டி யீரம்
பாறுமாத் திரையைத்தேனில் பாரணித் திடக்குன்மம்போம்
பானீயத் துண்ணிற்சீத பாவக வெப்பமாயும்
பாவைய ரமுதிலுண்ணிற் பாண்டுரோ கங்கள்நீங்கும்
பாசாங்கு சேந்த்ரபத்திர பானீயத் தினிலேயுண்ணிற்

பாஷாண்ட காங்கள்சன்னி பாதங்கள் வலிகள்போகும்
பாஷாண மாத்திரைப்பேர்ப் பாக்கிய வலிழ்தமீதே

## பிரதாபாக்கினி குமாரன்

### எழுசீர் விருத்தம்

பாரினிற் ப்ரதா பாக்கினிக் குமாரன் பகர்ந்திடச் சுத்தித்த ரசந்தான்
தாரினிற் ரும்பிர பற்பமு நாபி தனித்திடு மிளகுசுக் கோடே
சீரினி லெவாச்சா ரஞ்சுத்தி சாரம் இயல்சின காரமு மாகும்
நீரினிற் கடலீர் காய்ச்சிய வுப்பு கனமிலா வட்டுப்பு மாமே

ஆமென்ற விளையலி னுப்பொடு சிவந்த அமிர்தமா முப்போடு சாக்கும்
தாமென்ற சமனுய்க் கல்வத்தி லிட்டுத் தனித்திடு மிஞ்சியின் சாற்றில்
ஓமென்ற வொருநா ளரைத்துமே யுலர்த்தி உறுதியாங் குப்பியி லடைத்து
வாமென்ற வாலுகா யந்திரத் தொருநாள் மந்தமா மக்கினியிற் போடே.

போட்டுமே யெரித்து விட்டான பின்பு பொடித்துமே நாபியோர் பங்கு
வாட்டுமே யிஞ்சிச் சாற்றினி லரைத்து வகைக்குன்றி யளவதா யுருட்டி
ஊட்டுமே யிஞ்சிச் சாற்றிலோ ருண்டை யுரைத்திட மூன்று நாள்தானும்
பாற்றுமே சகல சன்னியுஞ் சுரமும் பலபல குணமதும் பேசே.

## பிரமாதந்த வயிரவம்

### எழுசீர்ச் சந்த விருத்தம்

டங்க ணம்பரை நாத கண்டிபம் தாரமாம் விட நாகரம்
தங்க ளுக்கெடை தான்ச றைச்சரி ஜாதி லிங்கமோ டேழுமே
அங்கதுள் விட மாற்றி யல்லரீ ராட்ட நற்றின மாமணி
சங்க ரித்திடு மிஞ்சி நீர்மது சாற்றச் சந்நிசு ரங்களே.

## பூதவயிரவம்

### எழுசீர் விருத்தம்

எண்ணிடு வயிர வம்பதின் மூன்றும் இதனிற் பூத வைரவந்தான்
பண்ணிடி லிரதங் கந்தகந் தாம்பிர பற்பமுஞ் சமனுறக் கூட்டி

நண்ணிடு கொடிவே லிக்குடி நீரால் நன்றுற வரைத்தபி னெடுத்தே
மண்ணிடு குகையி லடைத்து மண் பூசி வாலுகா யந்திரத் தொருநாள்
ஒழித்திடா தெரித்துத் தணிந்தபின் வாங்கி ஓங்கிய வெருகுறு பிசினின்
வழித்திடா திரண்டு யாமமே யரைத்து வளம்பெறக் குன்றிபி னளவே
அழித்திடா தினிய பானமாம் விசேடத் தலைமத்திடிற் றுந்திரி கன்கண்
விழித்திடா னின்பம் விளைத்தகங் களிக்க முனிவர் வேண்டிய தனிப்
[பார்

## பூர மாத்திரை

### எழுசீர் விருத்தம்

இரதகர்ப் பூரமைந் கிட்டமசை யேலமலர்
 இன்வசம் புக்கரி யொடே
சரதமதி விடயமா சிக்காயி வாறினிறை
 தனித்தனிக் காற்றொடிய தாய்
விரதமொடு விஷ்ணுக்க ரந்தைமா சிப்பத்திரி
 வேர்கள்சாற் றெவ்வொர் சாமம்
பரவியரை கொத்துமலி யளவுருண் டைபுரிவை
 பகர்பூர மாத்திரை யிதே.

எல்லாமாந் தங்கட்கு மேற்றகியா மூஞ்சுரசத்
தெல்லானை நேசியொன் றீயவே—நல்லாய்கேள்
பொன்போற் சரீரத்தைப் பூவுலகி லேமாற்று
மன்மாந்த மில்லையெனு மால்.

## மஹா ஏலாதி குளிகை

### பதினான்குசீர்க்கழி நெடிலடி விருத்தம்

ஏலமில வங்கமும் வால்மிளகு சந்தனம் மிருவேலி விலாமிச் சகில்
 எழுபதும கேசரம தன்வளை மதுரமும் மெழுகார மசுவ கந்தி
வாலகுங் குமசாந்தி கர்ப்பூரங் கஸ்தூரி வன்கலைக் கோடு மாஞ்சில்
 மகிழும்ருத் திராக்கமொடு கோரோசனை யம்பரும் வகைவகைக்
[கிருகழஞ் சாய்
சாலசாம் பிராணிபொன் னப்பிரகம் வெள்ளிபுந் தண்டாள பவள மோடு
 சாற்றுமிப் பற்பங்கள் வெவ்வேறு சேர்த்ததிற் றென்கழஞ் சிட்ட
[ரைத்தே

மேலுமா துளையுமிள நீர்முலைப் பாலென்னு மிவையளைத் துண்டை
[குன்றி
விசுவா சம்மிதை யநுபான விதியினால் விசுவாச முடனுண் பரே.
உண்பரவு வநுபான மிளநீர்பால் சர்க்கரை யோதுநேதன் கனிவர்க்
[கமும்
ஒளிர்முகத் தழகுதவு முந்தமத் தானமுட னொருமண்டலங் கொள்
[ளவே
பண்பரவு சங்கீத சாயித்திய வித்தையும் பகருமவ தான நினைவும்
பாவையர்க் கநுகூல மதனெனவே யாயுசும் பாருலகில் பெற்று
[வாழ்வர்
கண்பரவு பிணிதாப தாகச்சு ரங்கள்போங் களைகாசங் கல்லெரிவு
[போம்
காமாலை நீரிழிவு சோபைரோ கம்முழலை கைத்தெடுத் திடுவாந்தி
[போம்
எண்பரவு புவிராசர் மெச்சுமௌ ஷதமிது விமையோர்கள் போற்றி
செய்யு
மெண்டிசைக் கருள்வைத்திய சூடாம ணிக்குளரு ளோலாதிபுண்டை
[யிஃதே.

## மதன வயிரவம்

### எழுசீர் விருத்தம்

அணிதரு மதன வயிரவ முரைக்கில்
அரன்விந்து கந்தகத் துடனே
மணிதரு மினிய சயிந்தவ் லவணம்
மனோசிலை தாம்பிர பற்பம்
கணிதரு சமனாய்க் கூட்டியே கண்டங்
கத்தரி சிறுவழு தலைதான்
பணிதரு பழத்தின் சாற்றினா லரைத்துப்
பதம்பெறுந் தகையினில் வைத்தே
வைத்தபின் கலந்திடு மணல்நடு வாக
மருவுறச் சிறுபுடங் குழியில்
வைத்தபின் குளிர வாறியே யெடுத்து
வழுத்திடாப் பிச்சினி லரைத்து

வைத்தபின் சணபிர மாணமாங் குளிகை
வைத்திடு திரிகடுக் குடிநீர்
வைத்ததிற் கோத நீரினி லொன்றில்
வளர்சித்தப் பிரமனை மாற்றும்.

## மனோகர வயிரவம்

### எழுசீர் விருத்தம்

தாக்கிய மனோகர வயிரவ முரைக்கில்
தர்மமாஞ் சத்தியிட சாரம்
தேக்கிய விரதந் திகழ்படி காரம்
செப்புமை விதமுறு லவணம்
ஆக்கிய யவாச்சா ரஞ்சம பாகம்
ஆருறக் கூட்டியே பொடித்துத்
தூக்கிய எருக்கம் வேர்க்குடி நீரில்
துவண்டிட மூன்றுநா ளரைத்தே.

அரைத்திடு மினிய வஜ்ஜிரக் குகையில்
அடைத்திடு சீலைமண் பூசி
எடுத்திடு மதனை வாலுகேந் திரம்பண்
இருத்தியோர் நாளுற வெரித்து
விடுத்திடு மருந்தைக் காத்துறு பிச்சின்
மேவவே யரைத்துளுந் தளவாய்க்
கொடுத்திடு குளிகை மதுப்பெற வளிக்கின்
குலவு சந்திகளைத் தீர்க்கும்.

## முருக்கம்விரை மாத்திரை.

### எண்சீர் விருத்தம்

திரிகடுகுஞ் சீரகமுங் கடகரோ கணியும்
சேர்ந்தமுருக் கம்வித்துஞ் சமனாய்ச் சேர்த்து
நெறியுடைய நேர்வாள மிதற்குச் சமமாய்
நீர்வார்த்த ரைத்துண்டை சுண்டை போல
அரியபனை வெல்லமிள நீர்நெய் பாலும்
ஆனபழஞ் சீனிதனி லுள்ளே கொள்ள
கிருமியுடன் மந்தமுஞ் சீதக் கட்டும்
கெண்டைவயிற் றுப்பிசமுங் கழிலைக் யோமே.



## மேகநாதக் குளிகை

### எண்சீர் விருத்தம்

பொருந்தியதோர் மேகநாத குளிகை தன்னைப்
புகழ்ச்சியுடன் சொல்லுகிறேன் பெரியோர் முன்பில்
கருதியதோர் வெங்காரம் சாதி லிங்கம்
கனமான சிவதைவேர் வசம்பு சுக்கு
திருதியதோர் சயிந்தவமும் வாய்வி ளங்க
சேரான வோமமொடு பெருங்காய த்தான்
விருதியதோர் காட்டாம ணக்கம் வேரும்
விளவுடனே தானெடுப்பாய் பலமொன் றுமே.

பலமொன்றாய்ப் பார்த்தெடுத்துக் கல்வத் திட்டுப்
பண்புடனே தானரைத்து மைபோ லாக்கிப்
பெலமான நேர்வாளஞ் சரக்கி னெடைசேர்
பிரியமுடன் சேர்த்துச்சம் பழத்தின் சாற்றால்
கலமாக்கை விடாமல்தான் நன்று யாட்டிக்
கண்ணிலிடு மயனமதாய்க் கருதிப் பாரு
நலமாக வழித்தெடுத்துக் குன்றி யைப்போல்
நயனமென வுருட்டியொரு குழலில் வையே

குழல்தனிலே வைத்துகம தாதி யோடு
குணமான பராபரத்தைத் தியானஞ் செய்தீ
விழலான குன்மமொடு குளிர்சு ரங்கள்
விதிபொல்லா வயிற்றில்நிற்குந் திரைகள் வாதம்
உழலான பித்தநீர் சோகை பாண்டும்
உதித்தவித க்ஷயரோகம் வயிற்வ லித்தல்
தழலான அஜீரணங்கள் கனத்த நோய்கள்
தப்பாமல் நீக்கிவிடுந் தணிந்து பாரே.

## வசந்த குசுமாகரம்

### எழுசீர்ச் சந்த விருத்தம்

வனி டங்கண மலரம்பொலி வகை யக்கர மதுரம்
இன கஃஃசெடை யிடு வச்சல மணி காஸ்மீர மீசன்
தனி நிட்கம தள விஞ்சறல் சனு பாலை சதுநாள்
பனி யின்பய றள வாமது பகல் முன்பனி பிணியே.

பிணியெ னத்தெறி பேசு நூற்சுரம்
தணியு மேசுப காச தாகநீர்
துணியு மூத்திரம் தும்ம லேப்பமும்
அணுகி டாநிதை யன்பொடுண்ணவே.

## வாதராட்சசன்

### எண்சீர் விருத்தம்

போமப்பா வாதராட் சசனைக் கேளாய்
புதுமையாம் வேந்தனொடு நாற்றங் காந்தம்
சேமப்பா வப்பிரகம் தாம்பிர பற்பம்
திறமாக வஞ்சுவிதம் சமனாய்க் கூட்டிச்
சாமப்பா வெள்ளைச்சா ரணையின் சாற்றால்
தளமாக நாற்சாம மரைத்த பின்பு
வேமப்பா சீந்திலிட கியாழந் தன்னால்
வெகுசுருக்காய் நாற்சாம மரைத்தி டாயே

அரைத்திடுவாய் கொடிவேலிக் கியாழந் தன்னால்
அருந்துளசிச் சாறுநிரி பலைக்கி யாழம்
அரைத்திடுவாய் வெவ்வேறே சாமம் ரண்டு
அழகாக மொத்தையா யுருட்டிக் கொண்டு
அரைத்திடுவாய் சாரணையி னிலைய ரைத்து
அன்பாக மருந்தையுள்ளே வைத்து மூடி
அரைத்திட்ட விலைகருகப் புடத்தைப் போடு
ஆறினபின் னெடுத்ததனை லரைக்கக் கேளே

கேளப்பா சித்திரமூ லத்தின் கியாழம்
கிருபையாய் நாற்சாம மரைத்துக் கொண்டு
நாளப்பா மும்மூன்று வராகனெடை வீதம்
நலமாக வேயுருட்டி வைத்துக் கொண்டு
தாளப்பா நிழலுலர்த்திச் செப்பில் வைத்துத்
தளமான சன்னிவகை தோஷ மெல்லாம்
வேளப்பா வனுபான மறிந்து போடு
வெகுசுருக்காய் வாதமெல்லாம் விழலாய்ப் போமே.

## விதாரண வயிரவம்

### எழுசீர் விருத்தம்

புவிபெறு மினிய பிராணனை யளிக்கும்
விதாரண வயிரவ முறைக்கில்
குவிபெறு மிரதந் தாம்பிரம் வங்கம்
குருலிங்கந் தானுங் கூட்டித்
துவிபெறு மெருக்கம் பால்விட் டரைத்துத்
துய்யதோ ளாந்தர மதனில்
அவிபெறுங் கடிகை யாமமே யெரிப்ப
தாக்கியே யெடுத்துமான் பிச்சில்

பிலப்படு கல்வத் தரைத்துமே வெயிலில்
பெரிதுற வைத்தபின் னெடுத்துக்
குலப்படு சுக்கு மிளகுதிப் பிலிகள்
கூட்டிய கஷாயமேற் றுன்றி
நலப்படு மளவாய் வகுத்ததிற் கரைத்து
நண்ணிய குணமறிந் திடவே
புலப்பட மெய்யி லிதப்பட நடுங்கிப்
புக்னநேத் திரனகல் வானே.

## விரேசன பூபதி மாத்திரை

### அறுசீர் விருத்தம்

வேதி பூபதி வாலர்க்கு விளங்கிடும் வகையைக் கேளு
சோதிசே ரிரதஞ் சுக்கு சேர்ந்தவெண் காரங் கெந்தி
நீதிசேர் நாலுங் நேராம் நிறையின்நேர் வாளங் கூட்டி
ஆதியாஞ் சுத்தி யாச்செய் தறிந்துதண் ணீரைக் கூட்டே

கூட்டிடு மைந்துஞ் சுத்தி குளிர்ந்தநீர் விட்ட ரைத்துப்
பாட்டிடும் பனியின் பாசிப் பயற்றள வாக்கிக் கொண்டு
தீட்டிடு முறைத்து நீரில் சிறியவர் தமக்கே யீயப்
போட்டிடு மூது மாந்தப் பொருமலும் வாதம் போமே.

## விஜய வயிரவம்

### எழுசீர் விருத்தம்

அளிதரு விஜய வயிரவ முரைக்கில்
அரன்விந்து நாபியப் பிரகம்
ஒளிதரு வங்கங் காரீய பற்பம்
ஓர்சம பாகமாய்க் கூட்டித்
தெளிதரு சுக்கு திப்பிலி மிளகு
சேர்த்திடு குடிநீ ரதனால்
குளிதரு மிரண்டு யாமமே யரைத்துக்
குறுகிய குப்பியி லடைத்தே

அடைத்திடுங் குப்பிச் சீலைமண் செய்து
வாலுகா யந்திரத் தமைத்துப்
படைத்திடு மிரண்டு சாமமே யெரித்துப்
பண்புறக் குளிர்ந்தபி னெடுத்துக்
கிடைத்திடு சுணங்கன் பிச்சினி லரைத்துக்
கிளர்சண விதைப்பிர மாணம்
உடைத்திடு மிளநீர் காய்ச்சியந் தகற்கிட்
டுண்பதற் கிச்சையே கொடுப்பார்.

## விஷ்ணு சக்கர மாத்திரை

### சந்த விருத்தம்

ஆதிவிந்து சாதிலிங்க மானசத்தி நாபியும்
சோகிதுத்த தாரமுந் துலங்குகாந்த முஞ்சிலை
நீதிநிம்பச் சாறுவிட்டு நேரக்குன்றி நேரடை
பாதிமேனி யாயிருந்து பாரளந்தோன் சக்கரம்

சக்கரத்தி லோர்மணி தனித்திரி கடுகுடன்
மிக்கதேனு மிஞ்சிநீரும் விட்டுநீ யுரைத்திடப்
பக்கவாதம் விக்கல் சோகை பத்துமூன்று சந்நியும்
தக்கவேப்ப மிக்கமூர்ச்சை சகலவாய்வுந் தீருமே.

## வெங்கார மாத்திரை

### சந்த விருத்தம்

வெண்காரமுஞ் சிறுதிப்பிலி மிளகிந்தது சுக்கு
பண்பாகிய கேர்வாளமும் பணையாம்பொடிக் காந்தம்
தண்பாகவே பெருங்காயமு நன்றாங்கழல் விதையும்
தண்போறன மாதேயிவை யெடையானது சரியே

எடையானது சரியாகவே யெடுத்திந்த மருந்தை
யடைவாகவே தண்ணீரைவிட் டரைத்துண்டைகள் செய்து
படர்தாளற வெருக்கம்பழுப் பதினு லதைமூடிக்
குடைவாகிய வொருபானையைக் கொண்டேயெருப் புடமே

எருகோழியி னுயர்த்திடு வியல்பாகு மருந்தைக்
கருபோலுர மருவாகிய கடுநீர்தனி லரைத்துச்
சிறுதேற்றறு விதையாப்படி திரட்டாய்குளி கையைநீ
ஒருவாமலொன் றெடுஎண்ணெயி லுற்றேநனி யுண்ணே

உண்ணைக்கழி யும்மாலஃ தூற்றூலஃ தேகக்
கண்போன்மட ஙங்காய்நல தண்ணீரது கண்டே
பண்டாங்கரங் கால்வாய்முகங் கழுவாய் பின்புபலவாய்
விண்டேகுறு கொடிதாகிய வியாதிப்பெயர் கேளாய்

கேளாயட்ட குன்மஞ்சூலை கிளருங்குலை வாதம்
கோளாரண்ட வாதங்குலை முட்டுஞ்சல வாம்பல்
மாளாதவிப் புருதிகண பாண்டும்மகோ தரமும்
காளாங்கம்புள் ளடைவு தீரிப்பொரு ளுண்ணே.

## ஜலோதாரி மணி

### அகவல்

பெரியுந்திரி கடுகும்படி கியுநன்கட னுரையும்
புகழ்சூரையின் விரைபித்துவின் லவணம்மழல் காயம்

மருவும்பலம் வகையொன்றிடு முபயம்பல வாளம்
வகையோர்தச மிளநீர்தனி லரையுந்திரி சாமம்
இலவம்பெரு விரையங்ஙே தடையேயஃதை யுலர
இடவுங்கொட முதமும்பிடி பொடியந்தூ வாயு
பெருகும்புது மதுவுப்பல னமுமங்கதி லிட்டே
ஈரைஞ்சுர வாய்வோடிரு மலுநீங்கிடு மினிதே
விடுருஞ்சன மதிலங்கவை யடையும்பெருமடையோல்
உளதிங்கிவை முனிபுங்கவ னருளுஞ்சல மணியாம்
மலமுஞ்சரி சலமுஞ்சரி சலமஞ்சரிப் பயனும்
வகை மஞ்சரி சலோதாரியின் மணிகண்டிடு மாலோ.

## பிரளயகால ருத்திரன்

### நேரிசை வெண்பா

செம்புடனே தாளகமுஞ் சேர்குமெடை யொவ்வொன்றும்
வெம்பு மிருபூரம் வெங்காரம்— செம்பெடைக்குக்
காலாகக் கொண்டு கருமா னுலையிட்டு
மேலாக வூதியெடு மே

செய்த களங்கதனைத் தேனி லிழைத்தூட்ட
வெய்த விஷ சி விஷசுரமும்— பய்யவதி
சாரச் சுரமுடனே தாவசீர் ஐச்சுரமும்
பாறுமே பேருரைக்கிற் பார்

## ஊழி காலன்

### சந்த விருத்தம்

ஊழிகாலனை யாழிமேதினி யோதச்சூதமும் தாரமும்
ஓதுவீரமும் பூரகந்தி செந்தூர வெள்ளையும் கௌரியும்
வாழிகாந்தமும பினியிவ்வகை சுறுட்டகமும் ஆலதாம்
வந்தலிங்கமு மாறேகால்கர்ப் பூரவிதனமு மீர்தனி
ஆழுமோசனை யாய்க்கடை யிரண்டலைவகனிங்க மற்றவைகளை
ஆரத்தூள்புரி கடையிரண்டையும வைகள் போல்புரிந் திடையிடை
சூழவிட்டெரி யெண்ணெயின் கதி தொக்கதாயரை குன்றியாய்த்
தூக்கியேயவே வாந்திபேதியும் சோர்ந்துபோய் விடுந்திண்ணமே.

## கல்லுடை குடோரி

### அறுசீர் விருத்தம்

இரதமொன்று கந்தகமு மிரண்டதாகும்
   இவைவெள்ளைச் சாட்டரணை நீரிலரைசெய்
பிறகுகுகை யிடுசீலை செய்துமணலில்
   பின்புடமிட் டவ்வெடைபீ ளைத்தூளிட்டு
மறுமுறையுஞ் சத்திநீர் தன்னாலாட்டி
   மாடநிறை வெள்ளரிக் குடிநீர்காலை
சிறுமாலை நெருஞ்சிநீர் தன்னிலீயச்
   சேராது கல்லடைப்பு செய்துபாரே.

## ஊழி மாத்திரை

### அகவல்

ஊழி யுருண்டை யுரைக்கக் கேளாய்
பூரம் சூடன் புகல்பெருங் காயம்
ஆருநெல்லி யருங்குலக் காய்கறி
கிராம்பு வெந்தயம் கிளர்கரி வேற்பிசின்
அபின்பதும் சரியெடை யரைகஞ் சாநீர்
சாம மொன்று தாழ்ந்தாற் குன்றி
யாமென மாத்திரை யளவாய்ச் செய்து
தருதுணை மருந்திற் றுக்கிட வூழி
புருபல பேதிகள் போமென
மிகுமருத்துவர்கள் மிளிர்ந்துரைத் தனரே.

## இலவங்காதி மாத்திரை

### அகவல்

இலவங்காதி மாத்திரை யிசைக்கின்
இலவமாறு மெடுபொரி மூன்று
பூரமிரண்டு புகழ்லிங் கமுமொன்
றூரத்தொகையே யதிலிடு சோபி
பழச்சா றிரண்டு பாணி யிரண்டு
தழைத்த சாமந் தானரைகுன்றி

மாத்திரை செய்து மக்க ளுடலறிந்
தேத்தித் தினமு மிடின்மலம் போக்கி
நல்ல நிலையில் நாட்டிடு முடலை
அல்ல லகன்ற வகத்தியன் மொழியே.

## குங்குமப்பூ மாத்திரை

### அகவல்

குங்குமப் பூவிற் கூறு மாத்திரை
குங்கும மடைவெண் வால்கறி கணைமலர்
ஓம மேல மொலிவெங் காரம்
வாம லிங்கம் வளர்கோ ரோசனம்
குங்குமப் பூவுங் கூறுசாம் பிராணியிற்
றங்குறு பூவுஞ் சரியெடை கூட்டிக்
குங்குமப் பூவின் குடிநீர் தன்னில்
மங்கிடச் சாமம் மயனம் போல
அரைத்துப் பயறள வாக்கித் தேனில்
விரைத்த முலைப்பால் விரும்பி யிய
ஐய்த குன்மமு மாழ்மலச் சிக்கலும்
மெய்யில் வியர்வையும் விட்டகன் றிடுமே.

## இரதசிந்தாமணி மாத்திரை.

### இரட்டையாசிரிய விருத்தம்.

இரதசிந் தாமணியை யீண்டிசைப் பேன்பரம
னெங்கள்முத் துக்குமரவே
ளிணையடிக ளருதின்ந் துணைகொண்டு கேளணங்
கின்னிசைக் கொல்லிமொழியே!
இரதமுத் துச்செம்மை யரதனந் தங்கமுய
ரிரசிதமும் பவழலிங்கம்
எதிரியை வெல்லும்வில் கந்தகம் மப்பிரக
மிவைபது கழஞ்சுபயமே
சுரதவிளை யாட்டயர் குசப்பயசு கொடிவேலி
சூழ்ந்தெரித் திட்டநீரிற்

சொன்னவகைச் சாமமா லாட்டுபின் சதாபுட்பி
தூயபா றன்னிற்சாமந்
துவியசைப் பின்னர்வழி யெடுபிறுட னடையதைச்
சோகிகளிற் கொள்ளுமளவே
சூழ்ச்சியாய் மூலமு லிகைசமு லச்சாம்பர்
துகளில்மட் பாண்டத்தினில்
விரதமுட னேயடைபி னிடைமருந் துளசோகி
மேவவை வரிசைவரிசை
மேலும்மேலும் முனைச் சாம்பர்பெய் வலிவதா
மேன்மூடு சீலைமண்ணேழ்
மேவப்பு ரிந்தாத வன்னவகஜ புடமாக்கு
மிருதுகுளி ராயினெடுபின்
மிகுதியெடை சூதம்விடு முக்காற் கழஞ்சுநிறை
மெல்லப்பொ ருத்தியெல்லாம்
சாதமுடன் முக்கடுகு முக்கனிக் கியாழநீர்
சாற்றெருக் குரிசாறிவை
சதுர்துவித் துவியெனுஞ் சாமமாய் வகைவகை
சதுரிலரைசெய் விரல்போற்
றலைவனி லாதுலர்த் தெந்தையை வணங்கியே
தக்கவநு பானத்தினில்
தந்திடோர் குன்றிசுர சந்நிதிரி சத்ததோ
டங்கமை தூதருளவோ.

## அர்த்த நாரீஸ்வரம்.

### பதினறடி விருத்தம்

அண்ணலுமை யீஸ்வரனை வணங்கிப் போற்றி
யர்த்தநா ரீஸ்வரத்தை யறையக் கேண்மோ!
அரியவிர தங்கந்தி நாபி கார
மவைநான்குந் தொடிசரிநிற் குண்டிச் சாற்றால்
திண்ணமிரு சாமமரை குகையில் வைபின்
சீலையேழ் செய்பாண்ட மொன்றின் மேல்கீழ்
சேருப்பு கொட்டுவா யிடைகுகையை வைமேல்
செஞ்சட்டி மூடியேழ் சீலைபல மாச்செய்,

நண்ணடுப் பேற்றுதா மரைவன்னி நான்கு
நற்சாம மெரிசெய்து குளிரவிட் டதனை
நல்லசெங் கழுநீர்க்கி ழங்குநொச்சி பாகல்
காட்டுசா றிவ்வகையி னுற்சாம மாட்டி

வண்ணாரவி யுலரவைத் தொருபணமு நொச்சி
மழையிற் சுரங்களும் மாற்றிநசி யத்தை
மாட்டிலவ் வப்புறச் சுரமுமிலை யிதற்கே
மறிபாலிற் கஞ்சிகொளல் மறையோது விதியே.

## இருமல் மாத்திரை.

### கலி விருத்தம்

காத்திடும் பச்சைக் கர்ப்பூரஞ் சீரகம்
கோத்தி டுங்கலைக் கொம்புகோ ரோசனை
சாற்றிடுங் கந்தஞ் சாம்பிரா ணிமலர்
சேர்த்திடு வகைக்குக் கழஞ்சி யதிலிடே.

இட்டுப் பேய்ப்புட லும்பேய்ப் பீர்க்கனு
முட்டு நெருஞ்சிலு முள்ளி யின்விதை
நெட்டிடு மிளநீர் விட்டுக் காய்ச்சியே
தொட்டி டும்மரைத் தும்மெழு காக்கிடே.

ஆக்கிக் குன்றிபோ லாசக் குளிகையும்
நீக்கி நல்ல நிழலி லுலர்த்தியே
நோக்கி நாளிரு போதுமு வைந்துநாள்
தாக்கு மிருமல் க்ஷயம் விழச்சாடுமே.

## நவகண்ட பூபதி.

### (அறுசீர்க்கழி நெடில் விருத்தம்)

இரதங் கந்தகஞ் சாதிலிங்க மெஃகரப் பொடிதாரம் பிரமும்
விரத காந்த மரிதாரம் விளங்கு நாபி வெங்காரம்
சுரதப் பாக விலைச்சாறும் சொல்லும் செருப்படை வெற்றிலையி
லரிதா மிவைகள் சாறுவிட் டரைத்துத் தற்சம னுள்ரெண்டே

ரெண்டு நாளுங் குறையாம னேர வரைத்து வைத்தந்த
வுண்டைக் காசி குப்பிதனி லுலர்ந்த மருந்து தானடைத்துக்
கொண்டே வலப்பக் கல்லதனற் குப்பி மூடிச் சில்லிட்டு
அண்ட வேத்திச் சீலைமண்டா னடங்க வேழ்செய் யன்புறவே.

உறவே சட்டிக் குண்ணலங் குலத்தி னுயர மணலிட்டுப்
பிறகே குப்பி நடுநிறுத்திப் பின்னு நிரம்ப மணல்சொரிந்து
மறவாச் சட்டி படியவிட்டு மன்னு மூன்று மண்செய்து
துறவோர் புகழு மருந்துதன்னைச் சூட்டுநா ழிகை தோற்றெரியே.

எரியிடாய் தீபம் போலு மெழுந்ததா மரைப் பூப்போலும்
சரியிடாய் நாற்பத் தஞ்சு சாற்றுநா ழிகையே தோற்ற
தெரியிடாய் தீயைச் சாங்க சீதள மாகக் குன்றி
தெரிபட விஞ்சிச் சாற்றி லரைத்துண்டை செலுத்த லாமே.

செலுத்திட விஞ்சிச் சாற்றில் செலுத்துபூ பதிகோர் கொள்ளப்
பெலத்திடும் வலிய நோய்கள் போராத பிணிகள் தோடம்
அலுத்திடு வனுபா னத்தி னடைவறிந் தருந்த விந்தத்
தலத்து ளோர்க்கே வகண்ட பூபதி தனையு ரைத்தார்.

## நவக்கிரக பூபதி.

### அறுசீர் விருத்தம்

சுத்தி மனேசிலை யரிதாரஞ் சூட்டு மிரதங் கந்தகமு
முற்ற வெங்காரங் தற்சமனு யோரொன் ருய்த்தனி சுத்திபண்ணிப்
பெற்ற செருப்படைச் சாற்றரைத்துப் பேணி யுலர்த்திப் பின்னெடுத்
சித்த மகிழக் குப்பிதனிற் செலுத்திச் சீலை மண்டிருத்தி. [துச்

திருத்தமாய்ச் சீலை மண்டான் சிக்கென வேழுஞ் செய்து
பொருத்தியே குப்பிவாயின் புரையெலா மடங்கச் செய்து
கருத்துறப் பானைக் குள்ளாய்க் கனக்கநால் விரனோர் மண்மே
விருத்தியே குப்பி மூட விடுநிறை மணலென் பாரே.

### எண்சீர் விருத்தம்

என்பார்கள் வாயளவா மணல் நிரப்பி
 யெதிர்சட்டி படியவிட் டிறுக்கிச் செம்பி
வன்பார்த்துத் தீமுட்டி நாற்பத் தஞ்சு
 வகைநாழி தொகையறிந் தெரிதீ மாற்றி

இன்பார வெடுத்தபின் பிஞ்சிச் சாற்று
விறுகரைத்துக் கடலைபோ லிதமாய்ச் செய்து
முன்பார மாய்விளங்கு மநுபா னத்தில்
முனைந்திடத் தவிருநோய் முடுகச் சொல்வாம்.

அறுசீர் விருத்தம்.

முடுகுநீ ராம்பல் வல்லை முற்றிய வயிற்று நோதல்
படுகள மாகக் கொல்லும் பாதகக் காய்ச்சல் தோடம்
கெடுமுறைக் காய்ச்சல் சந்நி கிலேசம்வேர் விலையு மாண்டு
விடுமென மறைநூ லோதும் வேதவி யாசர் சொன்னர்.

## பிரதாபாக்கினி பூபதி.

சந்த ஆசிரிய விருத்தம்.

துய்ய தாம்பிர பற்ப நாபியுஞ் சுத்தி கந்தக சூதமுந்
தொடரும் பஞ்ச லவணஞ் சுத்திசெய் சத்தி சார நவாச்சாரமும்
எய்ய சுக்குவெங் கார மிளகுடன் யாவுந் தற்சமஞ் சுத்தியாய் [வாய்
இசைத்த விஞ்சியின் ரசத்தை விட்டரைத் தெடுத்து லர்த்தியுங் குப்பி

செய்ய மருந்தடை பலப்ப வாய்ப்புரை சேரவே யடைத் திறுக்கியே
செலுத்திச் சீலைமண் வருத்தி யேழுதரந் திருத்திச் சிக்கென விறுக்கியே
பையக் குடுவையி னுல்விர லுயர் பரிந்து மணலிடு குப்பிநேர்
பார்த்து மணணிறை யேத்தி யதிலெதிர் படிக மிடவுரை பன்னுமே.

பன்னி யறுபது நாழிகைதான் பதிந்த தாமரைப் பூப்போல
நன்று யெரித்து மாறியபின் நலஞ்சேர் மருந்தில் பத்திலொன்று
தின்னச் சீவ நாபியிட்டுச் சேரவிஞ்சிச் சாற்ற ரைத்துக்
குன்றி யளவு பிரமாணம் குளிகை பண்ணிக் கூட்டுவீரே.

கூட்டி வியாதி குணந்தெரிந்து கொடுவநு பானத் தடைவறிந்து
நாட்டிக் கொடுக்க வெண்பத்து நாலு வாத நவசுரமும்
பூட்டுஞ் சுவாசங் காமாலை பொல்லாப் பாண்டு க்ஷயம்பலவும்
ஓட்டும் பிரதாப வக்கினிபூ பதியி னுகந்த வுக்கிரமே.

## பூமணி மாத்திரை.

(எழுசீர்ச் சந்த விருத்தம்)

பூமணி மாத்திரை செயுமுறை யீண்டு புகல்கிறேன் கேண்மட மாதே
மாமணி வாளம் ரோகணி யிருப்பை மலர்திரி துவியொன் றென்று
தேமணி புனேகும ரிச்சா றேயரை செய்வது சாமநா லாமேல்
ஆமணி தூதுளங் காயது வாமள வருபா னம்மினி மேலே.

எண்சீர் விருத்தம்

இஞ்சிரசந் தேன்கூட்டி யொரு மாத்திரையை
யீயவே காலையில் சுரமுஞ் சந்நி
தஞ்சமாய் விடாச்சுரமும் விட்டே யேகுந்
தாரணியி லுள்ளியின் தைலத் தீயப்
பஞ்சுபோற் றூடமேழ் பறந்தே போகும்
பாவையே முத்தெண்ணெய் தன்னி லீய
விஞ்சுபுகழ் கொண்டதோர் வாயு வெல்லாம்
வெகுசுருக் காகவே விலகிப் போமே.

## பூரண சந்திரோதயம்.

குந்த னப்பொற் றகடதுதான் கொண்டே யொருபல மதனோடே
வந்த விரதம் பலமெட்டு மகிழ்ந்த சுத்த கெளரியெனுங்
கெந்தக மோர்பலம் பதினாறு குளிர்தருழிக் கல்லி லிவையிட்டுச்
சிந்தை மகிழ்ந்த மருந்துபலஞ் செழித்த திருபத் தைந்தாமே.

செம்ப ருத்திச் சாற்றொருநாள் திகழுங் குமரிச் சாற்றிருநாள்
அம்பு பெறவே தானரைத்தங் கான கடலைப் பிரமாணம்
உம்பர் புகழுஞ் சூரியனு ருகந்த புடத்திற் பொடிசெய்து
இன்பு ருக்குங் காசிதனி லியன்ற குப்பி யதனிலிடே.

இட்ட குப்பி வாய்தனக்கே யியன்ற வெண்கற் சுண்ணும்பு
அட்ட திக்கெண் வெல்லமுட னதைச்சில் மூடிப் பூசியிடு
திட்ட முடனே சீலைமண்டான் செய்தே யெழுநாள் தானுலர்த்தி
வட்ட மான பாண்டியிலே மணலை யிட்டுக் குப்பிவையே.

வைத்த குப்பி யதன்மேலே மணலை விட்டுச் சட்டியைக்கொண்
டித்தல மென்னத் தான்மூடி யேகச் சீலைமண் டான்கட்டி

அத்தி முகவன் தனைப்பணிந்தே யவன்றுட் பூசை தான்முடித்துச்
சத்தி யாம ஞற்சாமந் தாமரைப் பூப்போ லெரியிடவே.

எரியிடு காடாக் கினியாக விருபது சாம மெரித்துவிட
வரிநேர் குழலா யாறவிட்டு வயிரவன் கணபதி தூர்க்கையுடன்
பரிநே ராகப் பூசைபண்ணிப் பார்த்துமாங் துளிர் நிறமாக
இருக்கு மந்த மருந்தோடே யியன்ற பச்சைக் கர்ப்பூரம்.

குங்கு மப்பூ கத்தூரி குலவுஞ் சாதிக் காயாகும்
எங்கு மென்றிம் மருந்தோடே யியன்ற சாதி பத்திரியும்
பங்க மின்றி மத்தித்துப் பரணி தனிலே தானடைத்து
அங்க மதனைச் சுத்திபண்ணி யான பெரியோர் பூசைபண்ணே

தெய்வ பூசை தான்பண்ணித் தினமே பொருந்து நாளாகக்
கைய மருந்து பணவெடைதான் கதித்த பசுவின் வெண்ணெயுடன்
மெய்யாஞ் சர்க்கரை யிஞ்சியிலு மேவுங் குளிகை கொண்டிடவே
ஐய மில்லை களபமுட னத்திர பூடண மாம்பெண்ணே.

தீரும் வியாதி பதினென்று தியங்குங் கயமு மட்டகுன்மம்
போரே செய்யுஞ் சுவாசகாசம் புகழ்ந்த பாண்டு வீக்கமுடன்
பாருஞ் சன்னி பதின்மூன்றும் பரிந்திந் திரிய நட்டமது
தீருங் கண்டீர் நிசமாமத் திடமாம் பூரண சந்திரனே.

## காக்கண மாத்திரை

### அகவல்.

காக்கண மாத்திரை கழறக் கேண்மோ
காக்கண மூலம் களிபடை காரி
சோபி பூரம் தூயவி லிங்கம்
நீபிற கேழும் நாலொன் றென்றென்
றிரண்டிரண் டிரண்டா யெடுத்திடு முன்பின்
புரண்டி டாமல் போட்டரை மிச்சம்
பழநீர் சாமம் ஒன்றரை பயரும்
நிழலுலர்த் தொன்றி னேர்தே ரேமர்
குடிநீர் சுக்குக் குடிநீர் மாந்தம்
குடிபோ மென்று கூறினர் முனியே.

## சுவாச குடோரி

### வெண்பா.

வெள்ளெருக்கம் பூமிளகு வேண்டிச் சரிநிறையைத்
தள்ளா தரைத்துத் தனிக்குன்றி—விள்ளொன்று
தானிச்பத் திரிக்குடிநீர் தாக்கச்சு வாசமுடன்
கோளிருமல் காசமிலை கூறு.

## திரிதோட மாத்திரை.

### வெண்பா.

மிளகு நால் வீர மொன்று விழ்த்தரையக் காய் நீர்
மிளகளவா யுண்டை விரவித்—தளராமல்
முத்தோட முண்டானல் மூட்டொன்று தக்கபடி
.முத்தோட மாத்திரையா முன்.

## நீர்க்கோவை மாத்திரை.

### நேரிசை யாசிரி யப்பா.

கப்பு மஞ்சள் கஸ்தூரி மஞ்சள்
அப்பு காரம் அருஞ் சாம் பிராணி
மிளவு சுக்கு மேவு சாதிக் காய்
கழறு மோமம் மலர் கர்ப்பூரம்
பத்தும் ஒன்றொன் றரைபத் தில்லரை
பிற்று மூன்றும் பிரித்தொன் கால்காலே
அரை பழச் சாற்று லளவிரு சாமம்
தரையி லிலங்தை விரையள வாக்கி
உலர்த்திடு வங்நீருயர்முலைப் பாலில்
மலர்த்தித் தலையில் தடவிட வாங்கும்
தலைவலி சலதோ ஷங்கள்
நிலையறு மென்று நிகழ்த்தினர் மாதோ.

## கந்தி மாத்திரை.

### கலி விருத்தம்.

கந்தி நாபி கறிசூதம் பூசுணை
தந்த வித்து சமனெடை தாக்கியே
யந்த மாகப் பழச்சாற்றி லாட்டியே
பந்த மாகப் பணிப்பய றுண்டையே.

உண்டை செய்து நிழலி லுலர்த்திப்பின்
கொண்டி டாயநு பானங் குறித்ததில்
பண்டை யான பழஞ்சுரம் பாறுமே
கண்டி டாயிது கந்திக் குளிகையே.

## மகாராஜ மிருகாங்கம்.

### பதினன்கு சீர் முடுகு விருத்தம்.

தூரிய நீலமி ராஜ வர்த்தசிலை துப்பு மேகருடப் பச்சையும்
தூய வெள்ளிவை கிராந்த நாபிபொன் நிமிளை யோடுகரும்
[பொன்னதும்
அரிய பற்பமப் பிரக செம்மையிவை யான நிட்கமொவ் வொன்றதாய்
ஆணி முத்துகோ மேத கம்மிவைக ளாகு மொவ்வொரிரு நிட்க
[மாம்
உரிய விந்துபொடி மூன்று வைரவெளை நான்கு பசியபொன் னறதாம்
உற்ற ஞாழலே மொன்று சேர்த்துகலு வத்தி லொன்றுபட
[தாமரை
பரிவு பாசடையி னீரில் முத்திவசம் பைய வேயரைத் துண்டைசெய்
பாக மானபின் குப்பி யிட்டுமணல் பதிய வைத்தனலை மூட்டிடே.

மூட்டி யாறியபி னதனை யம்மிகுழி தன்னி லிட்டுமுறை யாகவே
மோக மானகத் தூரி யானதையோர் நிட்க மிட்டுபின் குங்குமங்
கூட்டி வைத்தகுடி நீரை விட்டுமதி கோள மாகபய ளவதாய்
கொண்டு நீழலி லுலர்த்தி தக்கவநு பான மொன்றிற் கொடுத்திட
கோட்ட மாமிநமல் சுவாச காசமொடு கொடுமை பீனசவி ராஜநோய்
குலவு மார்புநோய் கிரகணி வாதவளி சோபை பாண்டுகா மாலை
[நோய்
ஓட்ட மிட்டலற செய்து பின்னுடலை யுரம தாக்கியொளி தந்திடும்
உன்னு தற்கரிய பெயரை யோதிடிற் பெரிய ராஜமிரு காங்கமே.

## மகா வசந்த குசுமாகரம்.

### அறுசீர் விருத்தம்.

சீரா ரேமங் கரும்பொன்னுஞ் சிறந்த முத்தும் பவழமுடன்
சோரா மப்பி ரகங்காந்தம் நீடும் வங்கம் நிமிளையுடன்
காரங் கந்தி சீருணியின் நயந்த பற்பம் நாபியுமே
சோரங் கெல்லாஞ் சமனெடையாய்த் திருந்தக் கலுவந் தன்னிலிடே.

இட்டே குமரிச் சாறதனு லிழைப்பாய் மூன்று நாளளவுங்
கட்டே யான பின்பதனைக் கடிதே முத்துச் சிப்பிதனி
லூட்டோ யச்செய் ததைமூடி யுறவெங் காரங் குன்றியையும்
விட்டே பழச்சாற் றினிலரைத்தே மெள்ளமெளக் கவசமிடே. 2

இடுவா யாற்றி யாற்றியதை யிறுகி யுலர்ந்த பின்னதனை
யடுவாய் மணற்சட் டியிற்பின்ன ராரச் செய்சீ லையைநீக்கிக்
கொடுபோய் மருந்தைச் சிப்பியுடன் குலவக் கலுவத் தினிலிட்டு
விடுவாய் கழுநீர் கோங்கின்மலர் விரிந்த மரைப்பூ மாதுளம்பூ. 3

பூக்கட் சாறு தனித்தனியாய் புகவிட்டரைத்தே யதன் பின்னர்
தாக்கு வெட்டி விலாமிச்சந் தனித்த குடிநீ ரொவ்வொருநாள்
சேக்க வரைத்த மருந்தினுக்குச் சேரெட் டொன்றாய் நானமுடன்
சேக்குங் குமப்பூ விற்பாதி திறமாம் பச்சைப் பூரமுமே.

பூர்த்தி யாகக் குழிக்கல்லிற் பூட்டி வெட்டி வேர்க்கியாழம்
வார்த்தே மூன்று நாளரைத்து வகையாய்க் குன்றியளவாக
கூர்ந்தே யுருட்டுங் குளிகைதனைக் கொடுக்கும் விபரந் தனைக்கேளாய்
பார்த்தே குளிகை யதிலொன்றைப் பஞ்ச தாரை தனிலீயே. 5

தன்னி லீயப் பைத்தியமும் சதுரா யம்பிற் றேனிலிட
மன்னுங் கபங்க ளரத்தைசுக்கில் வாட்டு மசீரண வாய்வுகளும்
பின்னு மசுவ கந்திதனிற் பெருகு மிஞ்சிச் சாறதனி
லுன்னி யீயக் காசங்க ளோதரி சனமுந் திப்பிலியே. 6

திப்பிலி சுவாச காசங்கள் திகிரி யுப்பு லவங்கமதில்
கப்புங் கயநோய் மிரியல்சர்க் கரையில் சுரமும் தருமமதும்
செப்பும் பசுவின் நெய்யதனில் சேரு மசீரண பித்தமும்போம்
ஒப்பில் தேற்றான் நெல்லிவிதை யெலும்பை யுருக்கும் நோய்போமே.

பேரமே விளாம்பழத் தில்லீக்கம் புகல்கொடி வேலித் தியாழத்தில்
காமே விள்வோம் மூலமதும் நயந்து சீந்திற் சர்க்கரையில்
தாமே விளித்த பிரமேகம் சர்க்கரை வெள்ளரி விதையுடனே
தேமே வியால் கர்ப்பூர சிலாசத் திவையி னீர்க்கட்டே. 8

காட்டாத்திப்பூ வதிசாரம் கசகசாவி லூழியதும்
வாட்டிய சுக்கில் கிராணியதும் வாகாஞ் சிவதை நெல்லிவிதை
யோட்டங் கொள்ளும் வயிற்றுவலி யுயர்திப் பிலியிந் துப்பதனில்
கோட்டஞ் செய்மந் தாக்கினியுங் கோமூத் திரத்தில் சோபையுமே. 9

சோங்கும் முப்பாலை யிற்பாண்டு தூய கரிப்பனிற் காமாலை
யேங்கும் கார்போ கியிற்குட்ட மேகும் படிகா ரத்துரநோய்
தாங்கும் யவாக்ஷா ரங்குன்மம் சாகும் நொச்சில் மதில்சந்நி
நீங்கில் குடசப் பாலைவிரை சிகரஞ் சூதக வாயுவுமே. 10

மேதிப் பயசி லபஸ்மாரம் வெள்ளைக் காக்கணம் பூச்சாற்றில்
பேதித் திடுமுன் மாதங்கள் பிரிது முள்ள நோய்களெல்லாஞ்
சோதித் திதனைத் தருவீரேல் சுகங்கண் டின்புற்றி ருப்பீரால்
வார்த்தித் திட்ட பெயருமகா வசந்த குசுமா காமாமே. 11

## மதகஜ கண்டீரவம்.

### நேரிசை யாசிரியப்பா.

மதகஜ கண்டீ ரவத்தின் மாண்பு
இதமுட னுரைப்ப னினிதாக் கேண்மோ
இனிமை நாற்ற மிலிங்கமப் பிரகங்
கருந்தா துடனே கடனுரை நாபி
திரிகடு கடுக்காய் சித்திர மூலம்
அசம தாக மதிவிடை டங்கணங்
காட்டாத் திப்பூ கழற்சிப் பருப்பு
வில்வம் பழச்சதை விளாவில வம்பிசின்
மாதுளை யோடு மருவுசா திக்காய்
குடசப் பாலை கொடுமத் தன்விதை
யடைவா யிலைகட் கபினி சமனெடை
குழிக்கல் லதனிற் கூட்டியூ மத்தைச்

சாற்றினை யூற்றிச் சாடுவா யொருநாள்
கோரக்கர் மூலிச் சாற்றினைக் கொண்டு
அரைத்தோர் நாளி லழற்கா யளவு
மாத்திரை யாக்கி மகிழ்வாய் நீழலில்
ஆத்திப் பின்தகு மநுபா னத்தில்
ஊட்டக் கிரகணி யுதா சூலை
வாட்டதி சாரம் வாடிப் போமெனத்
தேட்ட மாகச் செப்பினர்
கோட்டமி லகத்தியர் கொள்கையி தென்றே.

## இலங்கேஸ்வரம்.

### எண்சீர் விருத்தம்.

பாதரச மப்பிரக பற்பமது கந்தி
பாபியெனு நாபியிவை பத்திலரை யாகும்
ஊதிவரு வெண்சங்கங் கணைசெம்பு பற்பம்
ஒத்தவிரு நான்குபங் கோதுமய பற்பம்
சாதியெனும் லிங்கமிவை சாற்றிலொரு மூன்று
தாழ்த்திகுழிக் கலிவிஞ்சிச் சாற்றிலொரு நாளுங்
கோதில்திரி பலையான குஷநீரி லோர்நாள்
குலையாம லரையுண்டை குன்றியள வென்னே.

### கலி விருத்தம்.

குன்றி யான குளிகையி லொன்றினைத்
தின்றி டற்குத் திறமாந் துணைமருந்
தொன்றி லீயகி ராணியுஞ் சூதிகஞ்
சென்றி டுமிலங் கேஸ்வரஞ் செப்பவே.

---

# செந்தூர பற்பங்கள்.



## அயசுத்தி.

### வஞ்சி விருத்தம்.

பொன்னைத் துல்லிய மாக்க வெண்ணினுற் புகலு கின்றனன் சந்திர
[மந்திரி
புன்னை யிவ்விரு மூல முஞ்சரி பொன்ன தற்குநா லிரண்டி லொன்றதாய்
பன்னு காடிமுன் சொன்ன தற்குநேர் பாய்ச்சி யெண்ணியே பகலி
[ராவெலாம்
வன்னி தீவிகை யென்னவே யெரி வாரொ ருதரங் காடி பின்னுமே.

(ப - ரை.) பொன்னை - கரும்பொன் என்னும் அயத்தை, துல்லியம் ஆக்க எண்ணினுல் - சுத்திசெய்ய நினைப்பையானுல், புகலுகின்றனன் - சொல்லுகின்றேன் கேள், சந்திரமந்திரி - அல்லி, புன்னை - புன்னை, இ இரு மூலமும் - இவ்விரண்டு வேர்களும், சரி - சமமாக, பொன் அதற்கு நாலிரண்டில் - பொன்னுக்கு எட்டு கொண்ட அளவு எடுத்து? ஒன்றதாய் - ஒன்ருகச் சேர்த்து, பன்னுகாடி - சொல்லுகின்ற காடி, முன் சொன்னதற்கு நேர் - முன் சொன்ன பதினுறு பலம், பாய்ச்சி - வார்த்து, பகல் இரா எல்லாம் எண்ணி - இரவும் பகலும், தீவிகை வன்னி என்ன எரி - தீபாக்கினியாக எரி, பின்னும் - அப்படி யெரித்து வரண்டால், பின்னும், ஒரு தரம் - மற்ருெரு தரம், காடி வார் - காடி வார்ப்பாயாக. (எ - று.)

(க - ரை.) ஒரு பலம் அயத்தை ஒரு பாண்டத்திலிட்டு அத்துடன் அல்லிவேர் எட்டு பலமும், புன்னைவேர் எட்டு பலமும் இடித்துப் போட்டு, பதினுறு பலம் காடி வார்த்து இரவும் பகலும் தீபாக்கினியாய் எரிக்கவேண்டும். அப்படி எரிக்கும்போது காடி குறைந்துவிட்டால் மறுபடியும் அந்த அளவு காடி வார்த்து எரிக்கவேண்டும். அப்படி எரித்தால் அயம் சுத்தியாகும் என்பதாம். ஏகாரங்கள் இரண்டும் ஈற்றசைகள்.

## அய பற்பம்.

### கழிநெடில் விருத்தம்.

பொன்னெனு மிரும்பின் பற்பமுண் டவரே பொன்னுல கரசரா யிருப்பா
போசன மிகுந்து புசிக்கவுந் திராணி பூட்டிடு மதுசெயு முறைகேள்
முன்னுநற் சுத்தி செய்ததைக் கைசா மூன்றுட னொன்றுற வதற்கு
மூவிரு பங்கு மாதவி மலர்நீர் மூன்றுநா டினமும்விட் டரைத்துப்
பின்னதை யுருட்டிப் பில்லைசெய் துலர்த்திப் பிறைநாள் புளியிலை யரைத்துப்
பேசிரு கூறு மூசையில் வைத்துப் பித்திகை மூடிமண் செய்து
மன்னுமே ழாநா ளுதயகா லையினில் வல்லெரு வொன்பதா றிரட்டி
வைபுட மொருநா ளாறவிட் டெடுத்தால் வாசவன்மகன்பரி [யாமே.

(ப - ரை.) பொன்னெனும் இரும்பின் பற்பம் உண்டவரே பொன்னுலகு அரசராய் இருப்பர் - இரும்பின் பற்ப முண்டவர்களே தேவலோகத்திற்கு அரசராக இருப்பார்கள், போசனம் மிகுந்து புசிக்கவுந் திராணி பூட்டிடும் - அதிகமாக போசனஞ் செய்ய தீபனத்தை யுண்டாக்கும், அது செய்யும் முறைகேள் - அவ்வித அயபற்பஞ் செய்கின்ற முறையைச் (சொல்லக்) கேட்பாயாக! முன்னு நற்சுத்தி செய்ததை - நினைக்கப்பட்ட உயர்ந்த சுத்தி செய்த அயம், கைசா மூன்றுடன்-முக்கால் பலத்துடன், ஒன்றுற-ஒரு கால்பலமும் சேர ஏற்பட்ட ஒரு பல மான அதற்கு - அந்த அயத்துக்கு, மூ இரு பங்கு - ஆறு பங்கு, மாதவி மலர் நீர் - குறுக்கத்திப் பூச்சாற்றை, தினமும் - நாடோறும், மூன்று நாள் விட்டரைத்து - மூன்று நாள் விட்டரைத்து, பின் - நாலாவது நாள், அதை உருட்டிப் பில்லை செய்து உலர்த்தி-அந்த அயத்தைப் பில்லை தட்டிக் காயவைத்து, பிறை நாள் - ஐந்தாவது நாள், புளியிலை அரைத்து - புளியினிலையைப் (போதுமான அளவு எடுத்து) அரைத்து, பேசு இரு கூறும் மூசையில் வைத்து - இரண்டு பாகமாகப் பிரித்து ஒரு பாகத்தை மூசை செய்து அதில் மேற்படி பில்லையை வைத்து, பித்திகை மூடி - மற்றொரு பங்கை பில்லை செய்து மூடி, மண் செய்து - சீலைமண் செய்து, மன்னும் ஏழாம் நாள் - ஐந்தாவது ஆறுவதும்நாளும் (உலர்த்தி) ஏழாவது நாளின், உதய காலையினில் - அதிகாலையில், வல்லெரு - பெரிய எரு முட்டை, ஒன்பதாறிரட்டி - நூற்றெட்டு வறட்டியில், வைபுடம், - புடம் போடு, ஒருநாள் ஆறவிட்டு - ஒரு நாள் நன்றாய் ஆறினபின்பு, எடுத்தால் - (புடம் பிரித்து) எடுத்தால், வாசவன் மகன் பரியாம் - வெள்ளை நிறத்தை யுடையயம். ஆகும் (எ - று.)

கட்டுநீர்மலமடைப்புகிராணிமூலமாசுரம்
ஓதிபாடுக்கொடுக்குமுற்றமேகவாய்வுடன்
வாததோடசந்நிமாகிரந்திமாமுடக்கலும்
அண்டவாய்வுமூலவாய்வுதானறும்மகாரசு
சண்டபற்பமீதிடப்ரசண்டநோய்களோடுமே

குறிப்பு.—சங்கநீரைத் தனியாகக் கூறப்படும்.

## தாளகபற்பம்.

உண்மையுடனின்னமொருவித்தைகேளு
உறுதியுள்ளதாளகத்தின்பற்பஞ்சொல்வேன்
நன்மையுடன்வெடியுப்புப் புளியுமொன்றாய்
நட்டமுடன்றானிடித்துவட்டுப்போல
வெண்மையுடன்ஓட்டிலிட்டுவாசல்தன்னில்
விதமாகவடுப்பிட்டுஅனலைமூட்டித்
தண்மையுடனோட்டையனல்மீதில்வைத்துத்
தானடுத்துநின்றுமெள்ளப்பார்த்தாற்கேளே

பார்த்தாலேயனற்சூடுமுறைக்கும்போது
பாங்கானவெடியுப்புப்பற்றிப்போகும்
காத்தாலேவில்லையதுகருத்துக்காணுங்
கனமாகப்பொடிசெய்துபீங்கானிலிட்டு
வேத்தாலேகுழிவெட்டிவைத்துமூடி
விதமாகமேல்மூடிக்காற்றுடாமல்
பார்த்தாலேமூன்றுநாட்கழிவுகண்டு
பாலகனேயொருபக்கந்தண்ணீராமே

தண்ணீராமந்நீரைச்செந்நீரென்பார்
தண்மையுடனோடோறுமெடுத்துக்குப்பி
அந்நீரையடைத்துவைத்துக்கொண்டுநீயும்
அப்பனேதாளகத்தைவைத்துவாட்டு
பொன்னீர்போற்கரியோட்டிற்கருகவாட்டு
புண்ணியனேநலக்கிரகஞ்சிவந்துகாணும்
முன்னீரைவிட்டுமேயரைத்துக்கொண்டு
மிஞ்சாமல்இலேசாகவில்லைகட்டே

கட்டியோரவிதனிலேகாயவைத்துக்
கனமில்லாவகலிலேசிப்பிச்சுண்ணம்
இட்டுமேகீழ்மேலாய்வில்லேவைத்தங்
கென்மகனேமண்சீலேயேழுஞ்செய்து
பட்டுமேபத்தெருவிற்புடத்தைப்போடு
பாலகனேபுடமாறியெடுத்துப்பாரு
நட்டமேவாராதுதவளம்போலாம்
நன்மையுடனன்னீராலரைத்துப்போட

போடப்பாமுன்போலச்சீலேசெய்து
புனிதமுடன்பதினேந்தாமெருவிற்றனும்
நாட்டப்பாபுடம்போடப்பற்பமாகும்
நன்மையதாய்வெளுக்காட்டால்முன்போலாட்டிக்
கூட்டப்பாஇருபதொருதன்னிற்போட்டால்
குருவானதாளகமும்பற்பமாகும்
பாட்டப்பாபற்பத்தைப்பணேவெல்லத்தில்
பாங்காகப்பணவெடைகால்பருகக்கேளே

பருகவேபித்தசுரம்பித்தவெட்டை
பாங்கானபித்தகயம்பித்தகாசம்
தருகவேமாட்டாதுமந்தகாசம்
தன்மையுள்ளஈளேவலிமேகரோகம்
வருகவேமாட்டாதங்குப்பாகாது
மண்டலங்கால்கொண்டுவிடுமார்க்கமாக
உருகவேவாதமென்றுமலேத்திடாதே
உண்மையுடன்நோய்தீர்ந்தால்வாதமாமே

வாதமென்றரசவாதமுலகத்தோர்க்கு
வாயாதேயாசையென்றவஞ்சகத்தால்
போதமென்றசிவயோகம்பெற்றபேர்க்குப்
பூதலத்திலாசையில்லேவாதங்கிட்டும்
வேதமென்றவேதவாக்கியமிதாகும்
விருதாவில்வாதமென்றால்விழலாய்ப்போகும்
பாதமென்றபாதமதையறிந்தால்மூத்திப்
பாதைவழிமார்க்கமதைப்பகரக்கேளே

## பஞ்சலவண பற்பம்

இந்துப்புப்பலமொன்றிடுகல்லுப்பேயொன்றரையாகும்
பந்துமத்தைக்கள்ளிப்பால்மேனியரக்கன்னாலாகும்
தந்தனைவிட்டரைவெவ்வேறுவில்லைசெய்தானேபுடமாக்க
தொந்தனைநீறிதுபணவிடைகொள்குன்மமதோடிவிடும்
ஈந்தவகைக்குளவாயுகளோடிடுமிதுவேசத்தியமாம்.
ஐந்தெனுமுப்பதையிப்படியேயரைபற்பமதாய்விடுமே.

## பேரண்ட பற்பம்

தானென்றபிரமையதுகொண்டபேர்க்குத்
தயவாகமருந்தொன்றுசொல்லக்கேளு
கோனென்றபோகருடகடாட்சத்தாலே
குணமாகப்புலிப்பாணிவிளக்கஞ்செய்தேன்
ஊனென்றகபாலத்தைஎடுத்துவந்து
உத்தமனேஎலுமிச்சம்பழச்சாற்றாலே
நானென்றசீனமதைப்பொடித்துப்போட்டு
நலமானகல்வத்திலரைத்திடாயே
அரைத்தெடுத்துவில்லைதட்டியுலரப்போட்டு
அடவாகப்புடம்போட்டுஎடுத்துக்கொள்ளு
விரைத்தவுடன்பொடியாக்கிப்பதனம்பண்ணி
விதமாகவிராகனெடைகொடுக்கக்கேளு
உரைத்தவுடன்கத்தபத்தின்பாலையப்பா
உறவாகதுட்டெடைதான்ரெண்டேயாகும்
குரைத்தவுடனிஞ்சிச்சாறதனிற்பாதி
குணமாகவிதுநேர்சர்க்கரையுங்கூட்டே
கூட்டப்பாஈராறுநாளேகொள்ள
குணமாகஅந்திசந்தியிந்தப்பாகம்
ஆட்டப்பாநசியமதுதும்பைச்சாறு
அடைவாகத்தான்விட்டுச்சொல்லக்கேளு
ஓட்டப்பாபேய்ப்பீர்க்குப்பேய்மிரட்டி
சுகமானபேய்ப்புடலும்பேய்க்குமட்டி

நாட்டப்பா பேயத்திப் பேயாத் தும்பை
நலமான எலுமிச்சம் பழமு மாமே.
ஆமேநீ யிச்சாற்றைத் தேய்த்துத் தேய்த்து
அடைவாக நூறுருடஞ் சலத்தை வாரு
தாமேநீ யீருறு நாள்தான் வாரு
தயவாகப் பத்தியந்தான் சொல்லக்கேளு
வாமேநீ பச்சரிசி பருப்பி னோடு
வளமாகத் தான்கொடுப்பா யுப்பா காது
ஆமேநீ தேவரொடு பிரமை பித்தம்
அடைவான வஞ்சனையுந் தீருந்தானே.

## பேரண்ட பற்பம்

### வேறு

பாடினேன் நாய்மண்டை மாட்டு மண்டை
பாங்கான மனுஷருட மண்டை யோடு
நாடியே சரியெடையாய்க் கல்வத் திட்டு
நலமான கழுதைப்பால் தன்னா லாட்டி
ஆடியே மைபோல வழித்தெ டுத்து
அடைவாகப் பில்லைதட்டி யுலரப் போட்டுத்
தேடியே குக்குடத்திற் புடத்தைப் போடு
தெளிவாகப் பற்பமது தவள மாச்சே
ஆச்சப்பா கழுதைப்பால் துட்டெடைதான் ரெண்டு
அடைவான இஞ்சிச்சாறு துட்டெடைதான் விட்டு
வாச்சப்பா சர்க்கரைதுட் டெடைதான் போட்டு
வளமான பற்பமது கழஞ்சு கூட்டி
பேச்சப்பா கொடுத்துவிடு ஈராறு வேளை
பெழுந்தபித்த பயித்தியமும் பிரமை பேயல்
போச்சப்பா தேவதைக ளுக்கோ வீடு
புதைபில்லி வைப்புமுதல் தீருந் தானே.

## நாக பற்பம்

கூறவே நாகபற்பஞ் சொல்லக் கேளு
குலவியதோர் நாகமொரு கட்டி வாங்கி

ஆறவே அயக்காண்டிக் குள்ளே யிட்டு
அடுப்பேற்றிக் கரிசாலைச் சாறு நாழி
வீறுடனே காற்சாமம் சுருக்குப் போடு
விதமுடனே நாகமது நீறிப் போகும்
காறுடனே கரிசாலைச் சாறில் லாட்டால்*
கணவீருள் ளிச்சாற்றால் நீறுந் தானே
நீறுமடா இல்லாட்டால் சிறியா நங்கை
நிகழ்த்தரிய குகைதனிலே கீழ்மே லும்வை
மாறுபடா நாகத்தை நடுவே வைத்து
வாய்மூடி யுலையினிலிட் டுதூ ஊது
ஊறுடனே பொருமியது நீறிப் போகும்
உற்பனமா மனுபான மறிந்தே யூட்டக்
காறுமே யிளைப்பிருமல் வீளை காசம்
காணுது வைத்தியரே விரைந்து பாரே.

குறிப்பு:—மேற்கண்டபடி நீறிய பற்பத்தை கற்றாழைச் சாற்றில் பசுமையடங்கி பற்பமாகிறவரையில் புடமிட்டெடுத்து உபயோகிப்பது உத்தமமென வநுபவத்தில்கண்டிருப்பதால் அவ்வாறுசெய்வது நன்மையாகும்.

## சங்கு பற்பம்

வெண்பணில பற்பமெவ ருண்பரவ ருக்குடல மென்பொனிற மிக்கு [மதுசெய்
பண்பிளையு ரைக்கிலொரு கண்புகையி ருட்டலறு மிஞ்சிபப யித்பமறு [மெய்
வின்பதும பத்ரியரை சங்கின்மிசை யுப்பதனை விஞ்சுரவி வைத் [தொருபகல்
எஞ்சுபுட மிட்டெடுதை யுண்கிருத முத்தினள வின்பமிகு பத்யம் [வருவே

சொன்னவிப் பணில பற்பஞ் சுராங்குச மெவ்வா றென்னில்
வன்னிபோற் றரிக்கும் காய்ச்சல் வாங்கிடாப் பழையதாகிச்
சன்னிதொக் கித்துச் சேனைத் தலைவனைத் தேடும் போது
தின்னுமா லலங்கற் சூற்றிற் சிங்கமா தங்க மாமே.

## சிருங்கி பற்பம்.

கலைக்கோடு பற்பம் கழறுங் காலை
முணிச்சா றதனில் மூழ்கச் செய்தே
அறுபது நாழிகை ஆகிய பிறகு
சுத்த நீரால் தூய்மை செய்தே
இதுபோல் எழுநாள் ஏகச் செய்தபின்
நிட்குடி யதனில் நீர்விட் டரைத்தே
கவசம் செய்தபின் காயவிட் டெடுத்தே
நூறு முட்டை நுண்மையா யடுக்கி
வீறும் அங்கியை விதிப்படி அமைத்தபின்
ஆறி எடுக்க அமைந்திடும் வெண்மையாய்
வெந்த நீறு வெம்மை வினைநோய்
அகலு மென்றே யறைந்தனர் பெரியோர்.

## பவள பற்பம்

(சந்தம்)

சிவந்தபிர வாளபற்ப மதின்பெருமை யாருரைப்பர்
சிவன்றனது மேனியொக்கு—மகிமீது
செகம்பரவு வாகடத்தி லெழுந்தபடி வானிலத்தர்
தினங்கொளினி தானவைத்து—வுடலாவி
கவிந்தகப வாதபித்த மிறங்கன்மிக வோடநச்சு
கலங்கவரு மாவிதைச்செய்—முறைகேளாய்
கரும்பினது சாறுவிட்டு நசுங்குபிர வாளமுற்ப
கருந்தொடிமு ளுரிரட்டி—ரசமாக
உயர்ந்ததின மேழுமட்டு நெருங்கியரை யீரமுற்றி
புலர்ந்தவில்லை யாயுலர்த்தி யதன்மேலே
ஒடுங்குபுட மாகமுட்டை யிரண்டுபதி னேழிவிட்ட
தொழிந்தகன லாறிவிட்ட—பிறகாமே
நிவந்தபுகழ் போலதைப்பின் னெறும்புளூவு தேனிலப்பி
நிதங்கொளொரு மாதமட்டு—மனியீனை
நிறைந்தகப ரோகம்விக்கல் சுரம்குடில சுவாசமிற்றும்
நினைந்துவிடு வாய்ப்புளிப்பை—வசமாமே

## அப்பிரகபற்பமும் அதன்பிரமாணமும்

கொத்தவரைச் சாறு குவலயமாம் வல்லியமெய்
கொத்தவரைச் சாறு குறித்தமுக்காற்—கொத்தவரை
யப்படியே போர்மை யளவுரு ரஞ்சதுர்த்தி
யப்படியே யிப்படியே யாம்.

| | சாறு | சாற்றினளவு | அரைப்புநாள் | வரட்டி |
|---|---|---|---|---|
| 1. | கொத்தவரை சமூலச்சாறு | 6 பலம் | 6 நாள் | 40 |
| 2. | நீலோற்பலச்சாறு | 5 பலம் | 5 நாள் | 36 |
| 3. | கட்டுக்கொடி யிலைச்சாறு | 4 பலம் | 4 நாள் | 32 |
| 4. | பசுமுன்னில் லிழங்கின்சாறு | 3 பலம் | 2 நாள் | 28 |

மேற்கூறியவாறு முறையே சாற்றினளவாக சாறுவிட்டும், அரைப்பு நாளளவாகவரைத்தும், வரட்டியினளவாக புடமிட்டுமெடுக்க பற்பமாகும்.

## தங்க பற்பம்

சிவனத்தை பாடகியார் சித்திரமச் சங்கதனி
சிவனத்தை பாடகியார் தேரைபெனச்—சிவனத்தை
ப்போதவரை பேசு ஞெழுமிதனை மாதிரிலே
போதவரை பேசு றுழை.

சுத்தித்த சொர்ண அரப்பொடி பலமொன்றுக்குத் துவரையிலைச் சாறு 4 பலம் விட்டு நன்றாக கைவிடாமலரைக்கவேண்டும். இவ்வாறே மீட்டும், 15 நாள் மேற்படி சாற்றினளவாகவே யரைத்து வில்லை செய்துலர்த்தி 34 வரட்டியில் புடமிட்டெடுக்க ஐந்திலொருகூறு பற்பமாயிருக்கும்.

இவ்வாறே அடியிற்குறிக்கும் சாற்றினளவாகவும், நாளளவாகவும் விரட்டியளவாகவும் முறையே அரைத்து பில்லை செய்து ரவியுலர்த்திப் புடமிட பற்பமாம்.

| | சாறு | சாற்றினளவு | அரைப்பு நாள் | விரட்டி. |
|---|---|---|---|---|
| 2. | ஆத்தியிலைச்சாறு | 4 பலம் | 12 | 32 |
| 3. | ஆமணக்கிலைச்சாறு | 3 பலம் | 9 | 25 |
| 4. | அகத்தியிலைச்சாறு | 2 பலம் | 6 | 16 |
| 5. | வாழைக்கனிரசம் | 1 பலம் | 3 | 9 |

## பலகறைபற்பம்

கவடித் திருநீறு காணவழை வேலி
கவடித் திருநீரார் கண்டங்—கவடி
பலகறையா மொன்றே பலகரையா மெய்க்குப்
பலகறையா மேதுணிந்து பார்

சுத்திசெய்த பலகரைப்பொடி பலமொன்றுக்குச் சாபுன்னையிலைச்சாறு 4 பலம் விட்டு நன்றாக வரைக்கவேண்டும். இவ்வாறே மீண்டும் 4 நாள் மேற்படி சாற்றினளவாகவே யரைத்து வில்லை செய்து உலர்த்தி 36 வரட்டியில் புடமிட்டெடுக்க ஆறிலொருகூறு பற்பமாயிருக்கும்.

மேற்கூறியவாறே அடியிற் குறிப்பிடும் சாற்றினளவாகவும், நாளளவாகவும், விரட்டியளவாகயும் முறையே அரைத்து பில்லை செய்து காயவைத்து புடமிட முழுகூறு பற்பமாகும்.

| சாறு | சாற்றினளவு | அரைப்புநாள் | விரட்டி. |
|---|---|---|---|
| 2. சித்திரமூல இலைச்சாறு | 4 பலம் | 5 | 30 |
| 3. குருவியால் அல்லது கல்லால் சமூலச்சாறு | 4 பலம் | 5 | 24 |
| 4. காட்டுமல்லிகை சமூலச்சாறு | 3 பலம் | 3 | 18 |
| 5. நீலோற்பலசமூலச்சாறு | 2 பலம் | 2 | 12 |
| 6. சந்தனக்குழம்புத் தெளிநீர் | 1 பலம் | 1 | 6 |

## முத்துப்பற்பம்

பாண்டுமைய ருக்கியத்திப் பாலாரப் பாலாரப்
பாண்டுமைய ருக்கையது பற்பமே—பாண்டு
நடுக்குமா றுலுமுறை நாலுமுற்றிற் பின்னர்
நடுக்குமா றுலுநதி நாள்.

துளையிடாத சுத்திசெய்த நன்முத்து பலமொன்றுக்கு வெள்ளைச்சாறு வேளைச்சமூலச்சாறு ஐந்து பலம் விட்டு நன்றாக வரைக்கவேண்டும். இவ்வாறு தினமொன்றுக்கு ஐந்து பலம் சாறுவிட்டு மீண்டும் நான்கு நாளரைக்க வேண்டும். பிறகு வில்லை தட்டி காயவைத்து ஒன்பது வரட்டியில் புடமிட்டெடுக்க கற்கூறு பற்பமாகும்.

இவ்வாறு காற்கூறான பற்பத்திற்கு மேற்படி யளவாகவே வெள்ளெருக்கன் சமூலச்சாறு ஐந்து நாள் விட்டரைத்து பிறகு வில்லை செய்துலர்த்தி எட்டு வரட்டியில் புடமிட அரைக்கூறு பற்பமாகும்.

மேற்படியாக (அரைப்பு நாளளவும், சாற்றினளவும்) அத்திப்பிலைச் சாற்றிலரைத்து ஏழு வரட்டியிலும், மருதமிலைச் சாற்றிலரைத்து ஆறு வரட்டியிலும் புடமிட முறையே முக்காற்கூறும், முழுகூறுமாக பற்பமாகும்.

## முத்துச்சிப்பி பற்பம்.

### நேரிசையாசிரியப்பா

கடத்திற் பூநீறு கற்சுண் ணாம்பு
முடன்கலந் தொக்கநீ ரூற்றித் தெளிந்த
நன்னீ ரதனில் நாட்டும் பொருடான்
முந்நீ ரிற்சனி முத்துச் சிப்பியாம்
மூன்று நிலைகவரை மூழ்க வெரித்தெடு
அம்மா திரியே யைம்முறை யெரித்துக்
கைம்மாக் கோடுபோற் கழுவி யுலர்த்தி
ஆழ்குழிக் கலிவிட் டாடா தோடை
காழ்வெண் ணொச்சில் கரிய நிலப்பனை
இவற்றின் நீரா விழைத்திடு தனித்தனி
உவந்து பில்லைசெய் துலர்த்திமண் சீலை
நிவக்கச் செய்து நீண்ட வராகம்
புடமிட் டெடுக்கப் புனிதநீ றுகு
மிடுவீர் தாளமு மித்தன் மைத்தாய்
இவ்விரு பொருட்டு மெழிற்குண மொன்றெ
அவ்விய மில்லா வகத்தியர்
செவ்வி தாகத் தேர்ந்துரைத் தனரே.

கற் சுண்ணமும் பூநீறுஞ்சேர்த்துத் தெளிவெடுத்தநீரில் முத்துச்சிப்பியை ஐந்து முதல் ஏழுதரம் எரித்து சுத்தநீரில்கழுவியுலர்த்தி ஆடாதோடைச்சாறு, நொச்சிச்சாறு, நிலப்பனைச்சாறு இவைகள் ஒவ்வொன்றிலும் தனித்தனியே யரைத்து, பன்றிபுடமிட்டெடுத்துக்கொள்ள பற்பமாம்.

முத்துப்பற்துக்குக் கூறிய அநுபானங்களிட முத்துபற்பத்தால் நீங்கும் நோய்கள் போம்.

## நண்டுக்கல் பற்பம்

### கட்டளைக் கலித்துறை

அலவன் சிலைத்துக ளாக்கு முபாய மறைகுவன்யான்
நிலப்பூ வொடுசுதை பாண்டத்தி லிட்டபின் நீரைவிடுத்

துலவக் கலக்கித் தெளியினைக் கல்லினை யுள்ளிவிட்டு
நிலவிடத் தீயி லொருசாம மேயெரி நீர்சுண்டுமே.

சுண்டிய பின்னதைத் தண்ணீரிற் றூய்மையாய்ச்சுத்திசெய்து
மண்டிட முள்ளங்கிச் சாற்று லரைத்து வழித்துலர்த்திப்
பண்டிடு பாடாண பேதியிற் றூனும் பரிதியில்லை
யுண்டிடு நீர்க்கல் லடைப்புநீர்க் கட்டிவை யோடிடுமே.

நண்டுக்கல்லை மேற்படியாகவே சுத்திசெய்து முள்ளங்கி சாற்றில் மைபோலரைத்து உலர்த்தியும், அங்ஙனமே சிறுபீளைச்சாற்றி லரைத்து உலர்த்தியும்வைத்துக்கொண்டு நீரைத்தள்ளும் மூலிகைச்சாற்றிலேனும் குடிநீரிலேனும் அரைமுதல் இரண்டுகுன்றியளவு பிரயோகிக்க நீர்கட்டு, நீரடைப்பு, கல்லடைப்பு முதலிய நோய்கள் தீரும்.

## ஆமை ஓடுபற்பம்.

### கலிவிருத்தம்.

ஆமை யோட்டி னடலையைச் சாற்றிட
ஏம மானபூ நீறு மெழிற்சுணம்
நேம மாக நிறுத்தெட்டு நீர்பெய்து
தோயி லோட்டினைத் தோயவிட் டேயெரி.

எரித்த வோட்டை யெடுத்துக் கழுவியே
சுரிபூ நாகஞ் சுனகிப்பால் விட்டுமே
அரைத்த தனைக் கவசம தாக்கிப்பின்
பொருத்தி யோட்டைப் புடமிட் டெடுத்திடே.

எடுத்த பற்பத்தை யிட்டுக் குழிக்கலில்
அடுத்து சிம்ம முகிரசத் தாலரை
கடுத்த வெல்லினிற் காய்ந்திட்ட வில்லையை
மடுத்தி டோட்டினில் மண்சீலை செய்திடே.

செய்து லர்த்தி செயப்புடம் போட்டெடு
நய்தி டுங்கண மாந்த நலியெலாங்
கொய்தி டுஞ்சிறு பாலகர்க் கொத்ததே
உய்தி புண்டிதை யுற்றுநீ செய்திடே.

ஆமை ஓட்டை சிறு சிறு துண்டாக நறுக்கி, பூநீறும் கற்சுண்ணமும் சமனெடை சேர்த்து, சேர்ந்த எடைக்கு எட்டு பங்கு நீர்விட்டுக் கலக்கித்

தெளிவெடுத்த நீரிலிட்டு எண்ணெய் கசிவு நீங்கும் வரை எரித்து, சுத்த நீரில் கழுவி உலர்த்தி பூரகத்தைக் கொம்பு கள்ளிப்பால் விட்டரைத்துக் கவசித்துலர்த்தி ஒட்டிலிட்டு சீலை செய்து கஜ புடமிட்டெடுக்க பற்பமாம். இப்பற்பத்தை அப்படியே உபயோகிக்கலாம். அன்றியும், ஆடாதோடைச்சாறு விட்டரைத்து மறுபடியும் புடமிட்டும் உபயோகிக்கலாம்-

தக்க அநுபானத்துடன் அரை குன்றி முதல் ஒரு குன்றியளவு உபயோகிக்க பாலர்கட்குண்டாகும் மாந்தம், கணம், மாந்தபேதி முதலியன நீங்கும்,

## குங்கிலிய பற்பம்

### எண்சீர் விருத்தம்.

முதிராத சோசக்காய் மேற்புறணி போக்கி
  முக்கண்ணி லோர்கண்ணை விழித்திடச் செய் ததனுள்
பதித்திடவே குக்கில்துகள் புகுத்தியபின் பதனைப்
  பாண்டத்தில் முக்காற்காய் மூழ்கிடவே பெய்நீர்
மிதமாக வெரிக்கையிலே யுருகிவரு மதனை
  வேறொருபாண் டந்தனிலே யிளநீரை விட்டுப்
பதமான மருந்தையந்தத் தாழிதனி லூற்றிப்
  பக்குவமா யாறியபின் பதனையெடுத் திடுமே
எடுத்திட்ட மருந்ததனை யிடரின்றி முன்போ
  லியற்றுநவ முறையதனைப் பொடித்துகுழிக் கல்லில்
மடுத்திடகுக் கிடவண்ட வெண்கருவா லேனும்
  மடற்குமரி நீரதனு லேனுமறைத் துருட்டிக்
கடுவெயிலிற் காய்ந்தபின்பு மண்சீலை செய்து
  காட்டெருவிற் கோழிபுடம் போட்டிடவே நீறும்
படியதனி லீரெரிச்ச னீர்க்கட்டு வெட்டை
  பாறிடுதற் கிழுததனிற் பருகிடகன் றூமே.

மட்டைபோக்காத இளநீரின் மேற்புறத்தைச்சீவி, துவாரமிட்டு, அதில் வெண்குங்கிலியத்தைப் பொடித்துச்செலுத்தி, ஒரு வாயகன்ற பாத்திரத்தில் சுத்தநீர்விட்டு, அதில் டைகாய் முக்கால்திட்டம் மறையும்படிவைத்து எரிக்கவும். எரிக்கும்போது ஒரு குச்சிகொண்டு துவாரத்தில் செலுத்திப் பார்க்க குங்கிலியம் உருகியிருந்தால் அதையெடுத்து, இளநீர் அடங்கிய வேறு ஒரு பாத்திரத்தில் கொட்டி ஆறியபின்னர் அதையெடுத்து, முன்போலவே மேலும் ஒன்பதுமுறைசெய்து, நுண்ணிய துகளாகப்பொடித்து வைத்துக்

கொள்ளவும். இதுவே முடிவுபெற்ற பற்பம். ஆயினும் இதைக்கோழிமுட்டை வெண்கருவிலேனும், சோற்றுக்கற்றாழைச் சாற்றிலேனும் அரைத்து, குக்கிடப்புடமிட்டும் உபயோகிக்கலாம். உபயோக. அளவு—ஒன்றுமுதல் நான்கு குன்றி. நோய்பலம், நோயாளிபலமறிந்து, சீதவீரிய மூலிகைகளில்ஒன்றில் அநுபானித்துக்கொடுக்க, நீர்எரிச்சல், நீர்கட்டு, பிரமேகம், வெட்டை தீரும்.

## படிக வெங்கார பற்பம்

படிகப் பொடியொரு பாண்டத் திட்டுக்
கடிதுநீர் பெய்ததைக் கலக்கி நன்றாய்ப்
படிகப் பாண்டம்வாய் படாம்விரித் ததனில்
வடித்து மெல்லிய வத்திர மூடி
வெய்யிற் புடமிட வெண்மையாய்க் கட்டும்
பையவே யதனைப் படிய குழிக்கலில்
அண்டவெண் கருவா லாட்டிரு சாமம்
பண்ணிடு வில்லை பகலவ ளொளியிற்
காய்ந்தபின் கோழிக் கனல்புட மாற்றி
வாய்ந்த நீற்றினை வகையா யிவ்வண
மைம்முறை செய்தபி னமிர்தம தாகு
மம்மருந் தொருமஞ் சாடியி னளவாய்ப்
பசுவின் வெண்ணெய்நெய் பாடாண பேதி
நீர்முள் ளியுஞ்சிறு நெரிஞ்சி யிவைகளின்
சாற்றிலே தேனுந் தந்திடிற் றசையடைப்
பாற்றெரு நீர்க்கட் டாகுநீ ரெரிவு
வரைவிட் டகலு முற்றவெங் கார
முறையுமிஃ தாமென மொழிந்தது மாமே.

## படிகார பற்பம்

படிகாரத்தை நீரில் கரைத்து கனத்த சீலையில் வடிகட்டி பீங்கான பாத்திரத்திற் கொட்டி, தூசு படாமற்படி சீலையால் மூடி, இரவிபுடத்தில் வைக்க, படிகாரம் மலினமற்று கட்டியாய் நிற்கும். இதைக் கோழிமுட்டை வெண்கருவினால் அரைத்து, சுத்த வெண்மையடையுமட்டும் குக்கிட புடமிட்டு, நீர்கட்டு, தசையடைப்பு நீரெரிவு முதலிய நோய்களுக்கு பசுவின் வெண்ணெய், நெய், முள்ளிச்சாறு, சிறுபீளைச்சாறு, சிறுநெருஞ்சிச்சாறு

இவைகளில் கொடுக்க குணமுண்டாம். ஒன்று முதல் நான்கு குன்றியளவு பிரமாணமாகும்.

## வெங்கார பற்பம்

இதனையும் மேற்படியாகவே செய்ய பற்பமாகும். தக்க அளவில், தக்க அநு பானத்திற் கொடுக்க, வெப்பப் பிணிகள் தீரும்.

## அயச் செந்தூரம்

நீங்கிப்போ மின்னமொரு செந்தூ ரங்கேள்
நிலையான அரப்பொடியை கல்வத் திட்டு
ஏங்கிப்போம் காடிதெளித் தொதியம் பட்டை
இடித்துப்பிழிந் தச்சாற்றை யூற்றி மைந்தா
பாங்குடனே மூன்றுநாள் வற்ற ரவியில்
பாலகனே வைத்தபின்பு நாலா நாளில்
சாங்கமாய் முன்சாற்றி லரைத்து வில்லை
தபவாகத் தான்செய்து காயப் போடே.

போட்டப்பா ஓட்டிவிட்டு ஓடு மூடிப்
புகழாகச் சீலைமண் ஏழுஞ் செய்து
நாட்டப்பா கெசபுடத்திற் போட்டெ டுத்து
நலமாக முன்சாற்றி லரைத்து முன்போல்
தேட்டப்பா கெசபுடந்தா னெட்டும் போடு
திரமாக காடியது சேர்த்த சாற்றில்
கூட்டப்பா தனிச்சாற்றில் மூன்றும் போடு
குணமாக அயமதுவுஞ் செந்தூ ரமாமே.

ஆமப்பா அநுபான மறிந்தே யுண்ண
அரும்பிணிகள் வாதபித்த ஐயத் தாலே
சேமப்பா அநேகமகா ரோக மெல்லாம்
நீங்கிதிரி நாடிகளு முறுக்கு மேறி
காமப்பால் பெருகிருக்கும் விந்துங் கட்டும்
கண்களில்செவ் வலரியரி வீரஞ் செய்யும்
தாமப்பா ஆலரசு பிஞ்சு வித்துச்
சமனிடைக்கு அதிம்தூரம் பசுநெய் யாமே.

நெய்யாகுந் தேனுகு மனுபா னந்தான்
நீங்காத வாய்வுகளும் நீங்கிப் போகும்
பொய்யாகும் கைபாகந் தவறிட் டாலும்
புலத்தியனே மருந்தொன்றும் பலித் திடாது
வையாதே பூரணத்தில் கைபாகந்தான்
வண்மையுடன் வயித்தியபூ ரணமீ தாச்சு
ஐயமில்லா நானூறும் வெளியாய்த் தோணும்
ஆதிகுரு கொடுத்தமுன் மொழிதன் னாலே.

---

## அயக்காந்த செந்தூரம்

அயகாந்தத் தருமைகேளு-பிணியிற்பாயும்
அயகாந்தத் தருமை கேளு.

அநுபல்லவி

அயகாந்தத் தருமை பிணி
அயங்களை மிகத் துணி
வயமேந்து செய லணி
வயமா விஃதே கணி (அயகா)

ஆயமுங் கந்தகங் காந்தம்
அவையொவ் வொன்றேகா லந்தம்
உயர்லிங்கங் காரதொந்தம்
உவர்பூ சோற்றுப்பொ டிந்தும் (அயகா)

சாரங் கர்ப்பூரமெட்டும்
தனித்தனிக் கழஞ்சு மட்டும்
சோங்கி வைகள் முற்றும்
சப்பும் பழநீர் கொட்டும் (அயகா)

இருபக லரைசெய் பின்னே
இருபில்லை யென்று முன்னே
மறுபக லகல் மன்னே
மாட்டு மண்சீலை சொன்னேன் (அயகா)

அப்பாற்செய் பன்றி புடம்
அதுவே சிவக்குந் திடம்
தப்பாமின் மூன்று புடம்
தான்புரி யிலே மடம் (அயகா)

முடியில்லே பொடி பண்ணும்
மூர்க்கபாண் டுரோக பண்ணும்
கடிதினிற் கட னண்ணும்
கைகண்ட திலீ தெண்ணும் (அயகா)

## அயவீர செந்தூரம்

ஆமப்பா அயப்பொடியும் பலந்தா னொன்று
அப்பனே அந்தெடைக்குச் சூதங் கூட்டி
வேமப்பா கல்வத்தி லாட்டு ஆட்டு
வீரமொடு சவாச்சாரம் பலந்தா னொன்று
வாமப்பா மூன்றுநாள் கைவி டாமல்
மாட்டியரைப் பொடியாகச் செவந்து போகும்
மோமப்பா புதுச்சட்டி யடுப்பில் வைத்து
மோசங்கள் வாராமல் வறுத்தி டாயே.

வறுக்கையிலே பதம்பாரு முருக்கம் பூப்போல்
வர்ணமிட்ட பதத்தோடு கருகாமல் வாங்கு
நிறுக்கையிலே குன்றியெடை பனிவெல் லத்தில்
நேசமாய்க் கொண்டிடவே சூலே வாங்கும்
ஒருக்கையிலே யிதின்சுறுக் கெதுக்கு மில்லே
ஓகோகோ குஷ்டமெல்லா மொழிந்து போகும்
மறுக்கையிலே யிதின்சுறுக்கு எதுக்கு மில்லே
வாதநீர் விஷக்கடிகள் வாங்கிப் போமே.

## இரசச் செந்தூரம்

பாரப்பா வின்னமொரு செந்து ரங்கேள்
பாடுகிறேன் புலத்தியனே பதிவாய் கேளு
சேரப்பா வாலேரசம் பலந்தா னுலு
சேர்த்திபென்ன கந்தியோர் பலமே கூட்டு

காரப்பா கரியோட்டில் தொந்தித் தேதான்
கனமாகப் பொடிசெய்து குப்பிக் கேற்றி
மேரப்பா வாலுகையி லேற்றிக் கொண்டு
மேன்மையுட னொருசாமம் தீபம் போலே
தீபம்போல் மறுசாமங் கமலம் போலத்
திறமாகத் தானெரித்து மூன்றுஞ் சாமம்
தாபம்போற் காடாக்கினி போலே மைந்தா
தானெரிக்கில் கந்தகத்தின் வாசம் வீசும்
கோபம்போல் சிலாகையிட்டு மெள்ளக் கிண்டு
குமரனுடன் குமரியுமே கூடு நேர்மை
சோபம்போ லிணக்கமதா யுருகிக் காணும்
துரிதமுடன் இளகுபத மில்லா விட்டால்.
இல்லாட்டால் மேலெயொரு ஓடு மூடி
என்மகனே யொருநாழி கடுந்தீப் போடு
சல்லாப மாய்நீக்கிச் சிலாகை போடு
சதுராக வுருகியது குழம்பாய்க் காணும்
பொல்லாத தாளகத்தைப் பொடித்த தூள்தான்
புலத்தியனே காற்பலந்தான் குப்பியிலே போட்டு
நல்லாக நாற்புறமுங் கீழு மேலும்
நன்றாகச் சிலாகையினாற் கிண்டிப் போடே.
கிண்டியே முச்சாமங் கடந்து மேலே
கிருபையுட னாற்சாமந் தன்னில் மைந்தா
அண்டினல் வடவையென்ற தணலைப் போடாய்
அப்பனே மருந்தெல்லா மேலே யேறும்
துண்டியே மிதப்பதனை மறந்தி டாதே
துரிதமுட னாற்சாமம் எரித்து நீயும்
தண்டியே சிலாகையிட்டுப் பார்க்கும் போது
தயவாகச் சிலாகைமுனை சிவந்து போமே.
சிவந்தாலும் வெளுத்தாலும் பதமி தப்பா
சீக்கிரத்திற் குறட்டாலே யெடுத்துக் குப்பி
மயமாக நீர்தெளித்தே யாற்றிப் போடு
மைந்தனே சிலாகைமுனை கறுத்துத் தோன்றில்

குவிந்திருந்த குப்பிதனை அடுப்போ டேதான்
   குணமாக எரிப்பாற்றி வைத்துப் போடு
தவிந்திருந்த அடுப்பினது வேகத் தாலே
   தான்சிவக்கு மிருநாழி சென்றப் பாலே.

அப்பாலே குறட்டதினல் குப்பி வாங்கி
   அசராமல் தெளித்திடுவாய் சுத்த கங்கை
தப்பாத குப்பிதனை யுடைத்துப் பாரு
   தயவான செந்தூரங் கறுத்துக் காணும்
இப்பாலே யரைக்கையிலே முருக்கம் பூப்போல்
   இருக்குமடா பணவெடைதான் தேனி லீய
செப்பாத பத்துநாள் தன்னி லேதான்
   தீருகிற வியாதிதனைத் திறமாய்க் கேளே.

கேளப்பா மூலநோய் மேக ரோகம்
   கொடியான பவுத்திரமும் அநேக நோய்கள்
தாளப்பா புளிபுகையுந் தள்ளத் தீரும்
   தயவான வாலைரசச் செந்தூ ரத்தை
ஆளப்பா கற்பாதி செய்வா னப்பா
   அரகரா உலகத்தோர் ரசமென் பார்கள்
வாளப்பா வின்னமொரு செந்தூ ரந்தான்
   வகையாகச் சொல்லுகிறேன் வரிசை யாக.

உப்பு—செந்தூரம்

அறைகிறேன் லவணத்தின் செந்தூ ரங்கேள்
   அப்பனே கல்லுப்பு பலந்தா னொவ்வு
கறைகிறேன் சூதமது பலந்தா னென்று
   கல்வத்தில் தானிட்டு வில்வச் சாற்றால்
மறையவே தானரைத் திரண்டு சாமம்
   மார்க்கமாய்க் குகையில் வைத்துச் சொல்லக்கேளு
விலரகிறேன் போகருட கடாட்சத் தாலே
   விபரமுடன் புவிப்பாணி விளம்பக் கேளே.

கேளேதான் உலையில்வைத்துப் பழுக்க வூதக்
 கிருபையுட னுருகியது மணிபோ லாகும்
கோளேதான் வாராமல் ஆற விட்டுக்
 கொற்றவனே கல்வமிட்டுப் பொடியாய்ச் செய்து
நானேதான் அந்தரதா மரையின் சாற்றால்
 நால்சாமந் தானரைத்துப் பில்லை தட்டிப்
பாளேதான் போகாமல் காய வைத்துப்
 பக்குவமாய்ச் சில்லிட்டுப் புடமுழமு மாமே.
ஆமேசீ முன்போலே ஐந்துபுடம் போட்டால்
 அப்பனே செந்தூர மாகும் பாரு
தாமேசீ யெடுத்ததனைச் சிமிழில் வைத்துத்
 தயவாகப் பணவெடைதான் தேனிற் கொள்ள
போமேசீ குன்மமென்ற தெட்டுந் தீரும்
 பொல்லாத நெஞ்செரிவு சூலை ரோகம்
வாமேசீ சூதகத்தின் வாயு தீரும்
 வல்லமையால் புலிப்பாணி வகுத்திட் டானே.

## உலோகமண்டூரச் செந்தூரம்

இருப்பினுஞ் சிட்டை யிலவணைபெண் ணுண்கை
யிருப்பினுஞ் சிட்டை கணியின்பை —யிருப்பி
யரைத்துப் புடமிட்டி யேனுலோ கத்தை
யரைத்துப்பு மண்டூர மாம்.

இரும்பு கிட்டப்பொடி பலம் $\frac{1}{2}$, கறியுப்பு, வெடியுப்பு, அட்டுப்பு, வளை யலுப்பு, இந்துப்பு, ரசம், கந்தகம், சுக்கு, மிளகு, திப்பிலி, வகைக்கு விராக னெடை— $\frac{1}{2}$ இவைகளைக் கல்வத்திலிட்டுப் பொடி செய்து கையாந்தகரைச் சாற்றாலரைத்து, இரண்டு புடமிட செந்தூரமாகும்.

தக்க அநுபானங்களில் கொடுக்க, மகோதரம், சோபை, பாண்டு காமாலை இவைகள் தீரும்

## கந்தகச் செந்தூரம்

தேவி யுரத்தைச் சிவப்பாக்க வாமணக்கு
தேவி யுரத்தை திருக்குவளை—தேவி
யருக்க முறைப்படியே யாறுமையா றுக்கி
யருக்க முறைப்படியே யாம்

| சாறு | சாற்றினளவு | அரைப்புநாள் | விரட்டி |
|---|---|---|---|
| 1) ஆமணக்கிலைச்சாறு | 7 பலம் | 8 | 5 |
| (2) கற்பூரவள்ளி இலைச்சாறு | 7 பலம் | 7 | 10 |
| (3) உத்தாமணி இலைச்சாறு | 7 பலம் | 6 | 15 |
| (4) சிதேவி செங் கழுநீர் சாறு | 7 பலம் | 5 | 20 |
| (5) தேவதாருஇலைச்சாறு | 7 பலம் | 4 | 26 |
| (6) எருக்கிலைச்சாறு | 7 பலம் | 3 | 30 |

ஒரு பலம் சுத்திசெய்த கந்தகத்துக்கு மேற்சொன்னவாறு சாற்றினளவாக சாறுகளைவிட்டும், அரைப்பு நாளளவாக அரைத்தும், வெயிலில் காயவைத்தும், விரட்டியளவாக புடமிட்டுமெடுக்கச் செந்தூரமாம்.

## காந்த செந்தூரம்

பாரப்பா இன்னமொரு செந்தூ ரந்தான்
பாங்கான கந்திசமன் காந்தங் கூட
நேரோரீ கரிசாலைச் சாற்று லாட்டி
நினைவாக வில்லைதட்டிக் காயப் போட்டுச்
சாரப்பா ஓட்டிலிட்டு ஓடு மூடித்
தயவாக சீலைமண் ஏழுஞ் செய்து
பாரப்பா கெசபுடத்திற் போட்டு வாங்கித்
தயவாக இவ்வெடைக்குக் கந்தி கூட்டே.
கூட்டியே முன்சாற்று லரைத்து முன்போல்
குணமாகக் கெசபுடத்திற் போட்டு வாங்கி
நாட்டியே அவ்வெடைக்குக் கந்தி கூட்டி
நலமான பழச்சாற்று லரைத்து முன்போல்
மாட்டியே கெசபுடத்திற் போட்டுப் பின்பு
மைந்தனே அவ்வெடைக்குக் கந்தி கூட்டி
தாட்டிகமா யவ்வெடைக்குச்சித்திர மூலம்
தயவாகத் தான்கூட்டி முலைப்பா லாட்டே.
ஆட்டியே பில்லைதட்டி ஓட்டி லிட்டு
அப்பனே முன்போலப் புடத்திற் போடு
காட்டியே கந்தியொடு சித்திர மூலம்
நன்மையுடன் இவ்வெடைக்கு ஒன்றாய்க் கூட்டி

ஆட்டுவாய் கோழிமுட்டை வெண்கருவி லாலே
அப்பனே வில்லைசெய்து புடத்திற் போட்டுக்
காட்டிடவே பின்னெடுத்துக் கல்வத் திட்டுக்
கனமான எருக்கம்பால் தன்னு லாட்டே.

எருக்கம்பால் தன்னாலே நாலு சாமம்
என்மகனே தானரைத்து வில்லை தட்டிச்
சுருக்கமுடன் தானுலர்த்தி ஓட்டி லிட்டுச்
சுகமாக மேலோடு மூடிச் சீலை
இருக்கமுடன் பொடிசெய்து கெசபுடத்திற் போட்டு
எடுத்துப்பார் செங்கறுப்பா யிருக்கும் பாரு
பெருக்கமுடன் பொடிசெய்து பதனம் பண்ணிப்
புண்ணியனே பணவெடைதான் தேனி லுண்ணே.

உண்ணப்பா அந்திசந்தி மண்ட லந்தான்
உத்தமனே பத்தியமோ இதற்கோ வேண்டாம்
கண்ணப்பா மோகமதைத் தவிர்த்தால் போதும்
கனமான விஷபாண்டு கவுசைக் கட்டி
தண்ணப்பா சோகையுடன் பித்த பாண்டு
தருகாத நீராம்பல் அண்ட வாயு
நிண்ணப்பா மேலேறும் ஆநந்த வாயு
நிலையான வாயுவெல்லாம் நீங்கிப் போமே

கௌரிசிந்தாமணிசெந்தூரம்

பாரப்பா கவுரிசிந்தா மணிசெந் தூரம்
பாடுவேன் ரசகந்தி வெங்கார மூன்றும்
சீரப்பா வகைக்குமொரு பலந்தா னாகச்
செய்கின்ற சுத்தியிலே தெளிந்து பின்பு
வாரப்பா கல்வத்தி லிட்டங் காட்டில்
வயணமென்ன வெங்காரத் தாலே மாறும்
கோரப்பா வரப்பொடிபோல் கறுத்தி ருக்கும்
நேர்த்தியாய்ப் பொடியதனை கிழிபோற் கட்டே.

கிழிபோலக் கட்டியதவ் வண்ண மப்பா
கெட்டியாம் ரெட்டிலே கொட்டைப் பாக்காய்

வழிபோலக் குழிகளெல்லாம் வெவ்வேறாக
வரிசைபெறக் கட்டியொரு தாழி தன்னில்
ஒழிவான மணல்கொட்டி முக்கால் மட்டு
மொவ்வொன்று குழிமணலி லூன்றிப் பின்பு
தெளிவாக மணல்நிரம்ப விட்டு மப்பால்
சிறப்பாக வுலைமூடிக் கொண்டு மூட்டே.

மூட்டடா வரிசைபெறச் சாணளவு குழியு
முருகவே பெருவடுக்கு மேல்தாழி கவிழ்த்துப்
போட்டடா வெருவடுக்கிக் கசபுடத்தை நன்றாய்ப்
பொலிவாகக் கணேசனுக்குப் பூசைதனை நடத்தி
நாட்டடா வக்கினியை மூட்டுவொரு நாளும்
சமமாக மறுநாளு மாறியபின் னப்பா
சூட்டடா தேவிமுதல் வடுகனை நன்றாகத்
தொழுவதற்குப் பூசைவிதி தொடங்கு வாயே.

தொடங்குவாய் பலவகையும் நன்றாய்ச் செய்து
துதித்திந்தப் புடம்பிரித்துச் சூட்டி நீபார்
அடங்கினதோர் செந்தூரம் புலாம்பழம்போல் கறுத்தல்
கப்பனே யிருக்குமதற் கைய மில்லை
மடங்காதே மறுபடியும் புடம்போ டாதே
மகத்தான நோயெல்லாம் வாங்கும் வாங்கும்
புடங்காணப் போகாதே யனுபானந் தன்னைப்
பூட்டுவேன் வகையாகப் பூட்டு வேனே.

பூட்டடா திரிகடுகு வெதுப்பித் தூளும்
புகட்டடா வெருகடியில் தேனுங் கூட்டி
பூட்டடா பணவெடைசெந் தூர மத்தி
பிலத்ததற்கு மண்டலந்தான் பேணிப் பாரு
பூட்டடா குலைபதி னெட்டு மல்லால்
பொல்லாத வாயுவிரு பத்தாறு நீங்கும்
பூட்டடா பதினாறு குன்மமுமே மாந்தை
பொல்லாத சுரங்களெலிக் கடியும் போமே

போமப்பா மந்தார காசமோ டீளை
 பொருமியதோ ரிருமல்க்ஷயம் காயாசு வாசம்
போமப்பா சுரமாந்தை மூலமரை யாப்பு
 பொருமாறு காமலை யோனிச் சூலை
போமப்பா வாண்சூலை யண்ட வாதம்
 பொல்லாத துடைவாழை விப்புருதி பத்தும்
போமப்பா நாச்சூலை பக்க சூலை
 பொறிசுற்றி வருங்கண்ட மாலை போமே

போய்விடுமே கரப்பன்புண் கடிவிப் புருதி
 புகைந்திருமு மீளைவிப் புருதி கூட
போய்விடுமே கூடவிப் புருதி தானும்
 பூட்டுகிறே னின்னுள்ளம் புகழ்ந்து கேளு
போய்விடுமே செந்தூரம் பணவெடை யினோடும்
 புணிக்கமுறுஞ் சாதிக்காய் பத்திரி கிரும்பு
போய்விடுமே பதிவிடயம் வெதுப்பியது ளப்பா
 போக்குடனே வெருகடியிற் றேனுங் கூட்டே.

கூட்டியே வதிசாரம் பன்னிரண்டு வகையும்
 கூறிய கடுப்புமுதல் கூறு கூறும்
நீட்டியே செய்கின்ற கிராணிவகை யாறும்
 நின்றுபோ மின்னமொரு பணவெடைசெந் தூரம்
காட்டிலே வளர்கருணைக் கிழங்குலர்த்திப் பொடியும்
 கடுஞ்சுருக்குத் திப்பிலியின் பொடியுங் கூட்டி
மூட்டியே வெருகடியிற் றேனுஞ்சேர்த் துண்ண
 மூலவகை யொன்பதுவும் பவுத்திரமு போமே.

போமப்பா பவுத்திரங்கள் நிறு வெல்லாம்
 பூட்டுவேன் செந்தூரம் பணவெடையி னின்னம்
ஆமப்பா ஆவரையின் தயிலத்தி லூட்டு
 மப்பனே சதைபடைப்பன் பதினெட்டு வகையும்
வேமப்பா நீரிழிவி விருப தோடு
 மேன்மேலு முள்ளுருக்கிப் பன்னிரண்டுங் கூட

நாமப்பா வின்னக்கேள் மூத்திர மடைப்பு
அடுக்கெடுக்கு மூத்திரப் பிரமேயுந்தா னுமே.

அருக வருமேக மிருபத் தொன்று
மத்திசுர மெட்டுவகை யுஷ்ண மாறும்
நீருகுஞ் செந்தூரம் பணவெடையி னேடும்
நேர்த்திபெற வழிஞ்சிவிரைத் தயிலத்தி லூட்டப்
போரான வயிற்றுநோ யறுபதுடன் வாய்வு
புரண்டு திரண்டு குத்திடுமுப் பத்திரண்டும்
கூரான விப்புருதி யெல்லாந் தீரும்
கூறவே யின்னமனு பானங் கேளே.

கேளப்பா செந்தூரம் பணவெடையி வின்னம்
கெடியான வெருக்கிலையின் பழுப்பிலையை வாட்டி
நாளப்பா வொருசேரைத் தண்ணீ ரிலூட்ட
நலமான வயிறெடுக்கு மோருஞ்சோ றுண்ணு
கேளப்பா வொன்றுமில்லை யொன்றைவிட் டொருநாள்
கொண்டிடவே விஷபாகஞ் சோகை காமாலை
நீளப்பா சோபமொடு பயித்தியமும் பாண்டு
நீர்க்கோவை யருவையொடு சுரமும்போய் விடுமே

சுரம்போகு மிந்தச்செந் தூரத் தாலே
சொல்லரிதா மனுபானஞ் சூட்டக் கேளு
அரம்போலே நோயறுக்கு மப்பா சொன்னே
மாச்சரிய மாச்சரியம் பத்தியத்தைக் கேளு
பராபரைக்கு மாறனுரைத்த படிநான் சொன்னேன்
பத்தியந்தான் வெள்ளாட்டுப் பாலுங் கொள்ளு
திறம்படுத்தி விட்டப்பா சிற்றுப்பு கறிகள்
சீராட்டுக் கண்டமுதல் தேட லாமே.

சண்டமாருதம்

இருநெருப் பொருக்கறு மாமக னிருமலர்ச் செந் தூரமும்
அலைபலைத் தொடிபரைப் பொடிப்பட வகலு மொட்டுரோகங்களும்
திரிவித தொந்தமா மாகமுள் வருசிறு பெரும்பல பிணிகள்போம்
பெரிதுபா ரனுபான பத்தியப் பிழைகள்செய் திடிலே குமோ?

(க-ரை) இலிங்கம் இரண்டு, பூரம் ஒன்று, வீரம், காந்தி, ரசசெந்தூரம் வகைக்கு அரைபாகமாகக்கூட்டி முலைப்பால்விட்டு அரைக்கச் செந்தூரம். இதனால் ஒட்டுரோகங்களுட், மும்மலக்குற்றத்தாலுண்டாகும் சிறு பெரும்பிணிகளும் தீரும். அநுபானமும் பத்தியமும் அறிந்து கொடுக்கவும்.

### சுயமாக்கினிச் செந்தூரம்

அயப்பொடியோ நான்கா மனல்காந்த மெட்டு
பயமில்லாச் சூதம் பதினா—றுயர்மிகுந்த
கெந்தி யிதற்கிரட்டி கேள்கு ரிச் சாறுவிட்டு
முந்தியிரு சாமமரை முன்.
அரைத்தபில்லை தாலத்தி லப்பிவெயி லில்வை
நிரைத்தீபம் போலெறிந்து நிற்கும்—நரைக்குழலாய்
குன்ம மகோதரமுங் கூறுதிலைசை யாங்கவிலைசை
பன்னுமுலை மூலம்பேசம் பார்.
மூல மகோதரமு மோசக்கி ராணியுட
னாலமுறு மன்னபுளி யேப்பமறும்—ஞாலமதில்
அண்டவா தஞ்சன்னி யானவைக்கு மேபணிந்தான்
உண்டுபா ரிஞ்சியிலோ டும்

### தங்கச் செந்தூரம்

தங்கச்சிந் தூரந் தகரை யரிதகிமா
தங்கச்சிந் தூரந் தருமிரதந்—தங்க
வுமாபதிமெய் யாதியென வுள்ளபுட மூந்த
வுமாபதிமெய் யாகமுடி யும்.

| | சாறு | சாற்றினளவு | அரைப்புநாள் | வரட்டி. |
|---|---|---|---|---|
| I | தகரைச் சமூலச்சாறு | 5 பலம் | 15 | 36 |
| II. | கடுக்காயிலைச்சாறு | 4 பலம் | 10 | 32 |
| III. | யானைக்காஞ் சொறிச்சாறு | 3 பலம் | 9 | 25 |
| IV. | பசறியிலைச்சாறு | 2 பலம் | 6 | 16 |

சுத்திசெய்த ஒரு பலம் தங்க அரப்பொடிக்கு மேற்கூறிய சாற்றினளவாகவும், அரைப்பு நாளளவாகவும் அரைத்தும், காயவைத்தும், வரட்டியளவாகப் புடமிட்டுமெடுக்கச் செந்தூரமாம்.

(மற்ற விபரத்துக்குத் தேரையர் யமுகத்தைப் பார்க்க)

## தாம்பிரச் செந்தூரம்.

செய்தபின்பு குன்மமென்ற வகையெல் லாந்தான்
　　தீர்க்கவொரு மருந்து சொல்வேன் திறமாயத் தேர்ந்து
தைவளையின் சாற்றாலே கந்தகத்தை யரைத்து
　　சாதகமாய் மூன்றுதின மரைத்த பின்பு
மைபோலே மெழுகாகுங் குகைபோல் பண்ணி
　　மண்ணென்ற குகைக்குள்ளே வைத்த பின்பு
கையென்ற செம்பதனைத் தகடாய்த் தட்டி
　　காஞ்சிரையின் பழச்சாற்றி லூறப் போடே.

போட்டுவைப்பாய் பட்சமொன்று சென்று வாங்கி
　　புகழ்சினக் காரத்தை மேலே பூசி
நாட்டமுடன் குகைதனிலே வைத்து மூடி
　　நலமான சீலைமண்தா னேழுஞ் செய்து
மூட்டுவாய் கெசப்புடத்தி லொருபுடமாய்த் தானே
　　மூதண்ட மாகியது நீறிப் போகும்
பூட்டுவா யந்தெடைக்கு லிங்கங் கூட்டிப்
　　புகழாக வரைத்ததனைப் பில்லை தட்டே.

அரைப்பதுதா னெருக்கம்பா லதனா லாட்டி
　　யப்பனே போட்டில்வைத்துக் கெசபுடமாய்ப் போடு
துரைக்குருவாஞ் செந்தூர முருக்கம் பூப்போல்
　　சொன்னமென்ன விதற்கீடோ கன்ம மேது
அரைப்பணந்தான் திரிகடுகு தேனிற் கொள்ள
　　வஞ்சாத குன்மமெட்டும் வாயூ தோடுங்
காப்பனோடு பெருவயிறு நீராம் பல்கேள்
　　கதிகெட்ட மகோதரமுங் காணா தன்றே.

காணுமோ வுதரத்தி லுள்ள வாய்வு
　　கதித்தோடு மானந்த வாய்வி னோடு
வேணுமென்ற விஷபாகம் பிறநீர்க் கோவை
　　வீக்கமொடு கனத்திருந்த விஷநீ ரெல்லாங்
கோணுமே செந்தூரங் கண்ட போதே
　　கூட்டிலுள்ள நோய்களெல்லாங் குடிபோம் பாரு



ஆனுவத்தாற் சொன்னதடா விந்த நூல்தான்
ஆச்சரியஞ் சித்தருக்கா யறைந்தேன் பாரே.

### தாளகச் செந்தூரம்.

பண்ணவே யரிதாரம் பொடியாய்ச் செய்து
பண்புடனே பூசினிக்காய்ச் சாறு தன்னில்
நிண்ணயமா யதையவித்துப் பின்னு மப்பா
நேரான கற்சுண்ணந் தண்ணீர் வார்த்தே
உண்ணவே சரிசமனாய் நல்லெண்ணெய் கூட்டி
யுடனவித்துப் பின்னுநல் லெண்ணெய் தன்னில்
சண்ணவே யவித்திடுவாய் மூக்கா லப்பா
கசடறுமே யரிதாரஞ் சுத்தி யாச்சே.

ஆச்சப்பா மூக்கலரைச் சாறெலே தன்னை
அரைத்திரண் டடையாகத் தட்டி யப்பால்
வாய்ச்சந்த சட்டிக்கு ளடையை வைத்து
மாசற்ற வரிதார மேலே வைத்துத்
தாழ்ச்சியில்லா மறுவடையை மேலே வைத்துத்
தளப்பாமல் மேற்சட்டி கொண்டு மூடிப்
பாய்ச்சிடுவாய் சீலைமண்தா னேழு செய்து
பதறும லடுப்பேற்றி யனலை மூட்டே.

மூட்டியே யெரித்திடுவாய் சாம மெட்டு
முகிழ்விரியா மண்சீலை நன்றாய்ச் செய்து
நீட்டியதோர் செந்தூர மெடுத்துக் கொண்டு
நினைவாக வனுபானந் தன்னில் வைத்துத்
தாட்டிகமாய்த் தேனிலிடு மண்டைச் சூலை
தவறிவிடும் விஷங்களெலாந் தளர்ந்து போகும்
வாட்டிவிடுங் கண்ணோயு மிருந்து கண்டால்
மாசற்ற பழச்சாற்றில் மருவித் தாக்கே,

### வேறு.

[கொள்

தாக்கும் வாத மதுதனக்குத் தாங்காப் பனைவெட்டில் பணவெடை
ஆக்கும் பிரமேக மதுகண்டா லதற்குப் பூசனிப் பழச்சாறு

போக்கில் லாத நீரடைப்பன் பொருந்தும் வெள்ளிக் காய்த்தண்ணீர்
மாய்க்குஞ் சூதக வாய்வுக்கு வாரு மாவின் பாஷாணமாம்
மலமுஞ் சலமுங் கட்டிவிட்டால் வறுத்துக்கோழி முட்டையினோ
டெவியின் புழுக்கை கோழிகார மியன்ற கோழிக் கருவுடனே
நலமா யிவையெல் லாம்பொடிசெய் நன்றாய் வெள்ளரிக் காய்வெதுப்பு
அலமாந் தண்ணீர் தானிடவே யான கல்லு மகன்றிடுமே

## நாக செந்தூரம்

சுத்திசெய்த நாகந் துலங்குபல நான்காக
நத்திபோர் சட்டியிட்டு நன்குருகு--மத்ததனில்
நாழி வெடியுப்பு நல்லோமஞ் சுக்குமஞ்சள்
வாழிபொடி யிட்டு வறு
இட்டு வறுத்தது ளேங்காதே காயுருவி
பொட்டா யிடித்ததையும் போட்டுவறு—கட்டமற
மாதளம்பூப் போலாக மானே பழச்சாற்றாற்
போதமுற வேபுடத்தைப் போடு
போட்டெடுத்த செந்தூரம் போற்றிப் பணவெடையாய்ச்
சூட்டுந் திரிகடுகின் சூரணத்தில்—ஊட்டக்கேள்
குன்மம் பெருவயிறு கூறுதிசை யாங்கவிசை
பன்னுலகில் மூலமும்போம் பார்
மூலம்போ யேகவகை மூளுந்தொண் ணூற்றும்
காலுடனே கையெரிவுங் காணாது—வேல்விழியே
மேகத் தடிப்புகுட்டம் விந்துநட் டம்வெள்ளை
பாகத்திற் போய்ப்பதுங்கும் பார்

## பூரணசந்திரோதயம்

ஆடகரேக்கது வோபல மொன்று
கோடகச் சத்தி தூக்கிட ரெண்பலம்
புண்ணிய மெண்பலம் போட்டிடு கல்வத்தில்
கண்ணும் பருத்திப் பூச்சாற்றரை வாழையில்
ஈர்நா ளரைத்தெடுத் துப்பிடி வில்லை
பூரோ ரவியி லுலர்த்திப் பொடித்திட்டு
அரைவலை குப்பிக் கடைத்திட் டோர்நா

ளரியிடு திரிநீ யாநி யெடுத்ததைப்
பார்க்கமூன் றும்பிறைப் பனிமதி போலச்
சேர்க்க விதனைச் செலுத்திப் பாணியில்
கற்பூ ராதிச் சூரணத் திற்கலந்
துற்பன வெள்ளிலை யுள்ளோர் பணவெடை
இட்டிட வெண்சய மீளை யெலிகடி
கட்டு மலஞ்சிக் கிராணி கடுப்புகா
மாலை குன்மஞ் சுரமேகம் வெட்டை
சூலை குடைச்சல் துன்மாங் கிசமுடன்
தீரும்வெண் பித்தஞ் சிலேத்தும சுரநோய்
பாரும் வியாதி பறந்தே யொழிந்திடும்
கற்பம தாகக் காணிதை யருந்தக்
கற்பாந்த மாகக் காய மழியாது
வீரிய விர்த்தியா மெல்லிய ராசையுள்
பாரீர்சை யோகம் பண்ண வெகுவிர்த்தி
காயஞ் சிவக்குங் கண்கள் சிவப்பேறும்
ஆயுளும் பெருகு மருள்விந்து கட்டிடும்
ஆல மிதுசித் தடையுமூன் றும்பிறை
போலச்சந் திரோதயம் புகன்றனன் முனியே.

## மண்டூர செந்தூரம்

### எண்சீர் விருத்தம்

கேளடா வாயிரந்தான் வருஷஞ் சென்ற
கெடியான கிட்டமது கொண்டு வந்து
தாளடா வாவினீர் தன்னி லேதான்
தளமாகக் காய்ச்சியே தோய்ச்சுத் தோய்ச்சு
வேளடா பத்துவிசை தோய்ச்செ டுத்து
விருதான கல்வத்திற் பொடியாய்ச் செய்து
நாளடா பத்திலொன்று கெந்தி சூதம்
நலமான லிங்கமுப்பு வெண்காரங் கூட்டே.

கூட்டியே பழச்சாற்றில் புடந்தான் பத்து
கூசாதே கரிசாலைப் புடந்தான் பத்து

ஆட்டியே செருப்படையில் புடந்தான் பத்து
அப்பனே செம்பைச்சாறு புடந்தான் பத்து
நீட்டியே பரசவிட பட்டைச் சாற்றில்
நேராகப் புடமஞ்சு போட்டெடுத்துக்
காட்டியே செந்தூரம் பொடிதான் செய்து
நலமான பரணிதனி லடைத்துக் கொள்ளே.

கொள்ளவே திரிகடுகு தேனி லேதான்
கூசாதே பணமிரண்டு கூட்டிக் கொள்ள
விள்ளவே விஷபாண்டு காமாலை யாறும்
விருதான பாண்டுவகை குடிபோ மப்பா
தள்ளவே பித்தமெல்லாங் கீழே சாடும்
தளமான சேத்துமநோய் தொண்ணூற் றாறும்
கள்ளவே கடல்புக்கிக் காணா தோடும்
கண்டாயோ வெண்பாண்டங் கரும்பாண்ட மாமே.

ஆமப்பா வரோசகங்க ளன்னத் துவேஷம்
அகலாத வாந்திவிக்கல் அகன்று போகும்
தாமப்பா வாயுவென்ற தெல்லாம் போகும்
தளமான நீர்த்தோட நாடா தோடும்
காமப்பா லூறுமடா தேக மின்னும்
கல்லெனத் தேகமுழு திறுகிப் போகும்
நாமப்பா கண்டபடி சொன்னோ மின்னம்
நலமான வப்பிரக வகைசொல் வேனே.

க்ஷயகுலாந்தக செந்தூரம்

எண்சீர் விருத்தம்

இளைப்பான ரோகமது தீர வென்றால்
இயம்புவேன் க்ஷயகுலாந் தகசெந் தூரம்
பிழைப்பாக வாயிரத்தைந் நூற்றிற் சொன்ன
பேச்சல்ல சித்தமுறை பேணிப் பாரு
உளைப்பான பூல்தேவி பலமு மொன்று
முற்றவெண் பூசினிக்காய் நீரிற் காய்ச்சித்
திளைப்பான தோளேந்திர மாகத் தூக்கிச்
செங்கிளுவைச் சாற்றினிலுஞ் சுத்தி செய்யே.

செப்பிட்ட வரிதாரஞ் சமனுப் பூரஞ்
சிலைகூட்டி பெருக்கின்பா றன்று ளாட்டிக்
கொப்பிட்ட குகையிலிட்டுப் புடத்தைப் போடு
கொடுமையெல்லாந் தான்புகைந்து சாம்ப ராகும்
ஒப்பிட்ட வவ்வெடைக்குப் பவழுங் கன்று
சிலைசேர்த்து முன்போலப் புடத்தைப் போடு
நைதிட்டு வெந்திடும்வ் வெடைக் கிலிங்கம்
நாலிலொன்று தங்கமரை கந்தி கா்லே.
கால்கூட்டிக் காந்தமொரு பலமுஞ் சேர்த்துக்
கனமான குமரிநீர் முருக்கம் பூநீர்
சால்கூட்டிப் புடம்போடு செந்து ரிக்கும்
தனுக்கற்றுச் செந்தூரம் புடமைந் தாலும்
வால்கூட்டிக் குழையிலே படைத்துக் கொண்டு
வாகான திரிகடுகு தேனி லுண்ணப்
பால்கூட்டிப் பத்தியங்கொள் கறந்தாட் டின்பால்
பத்துநாள் மருந்துண்ணப் பலிக்கு நன்றே.

---

## சூ ர ண ம்.

---

சீரக சூரணம்
எண்சீர் விருத்தம்

கொள்ளவே யின்னமொன்று சொல்லக் கேளாய்
குணமான சீரகமோ பலந்தா னைந்து
தெள்ளவே வாங்கிவந்து பீங்கான் தன்னில்
தெளிவாகத் தான்போட்டுப் பழநீர் வாரு
அள்ளவே மிதக்கவிட் டூற வைத்தே
அடைவாக நிழல்தனிலே யுலரப் போட்டு
விள்ளவே தானெடுத் திந்தப் பாகம்
விதமாகத் தான்போட்டு விவரம் பாரே.
பாரேநீ கருப்பஞ்சாறு முசுமு சுக்கை
பாங்காக நெல்லிக்காய்ச் சாறுங் கூடச்
சேரேநீ தூதுவளைச் சாற்றி னோடே
செயமான வேம்பின்பட்டைச் சாறு மாகும்

நீரேநீ தும்பையிலைச் சாறு விட்டுத்
திறமாக வெவ்வேறு யுலரப் போட்டுச்
சீரேநீ தூளிடித்து வடிதான் கட்டிச்
சீனியது கால்பங்கு கலந்து கொள்ளே.

கொள்ளப்பா வந்திசந்தி நாற்பதுநாள் கொள்ள
குணமாக வெருகடிதான் விதம் பாரு
தெள்ளப்பா பித்தமெல்லா மகன்று போகும்
தெளிவில்லாக் கிறுகிறுப்பு வாந்தி தீரும்
உள்ளப்பா வக்கினியா மந்தந் தீரும்
உஷ்ணமாங் காங்கை யெல்லா மகலும்பாரு
விள்ளப்பா போகரிட கடாட்சத் தாலே
விதமாகப் புலிப்பாணி பாடி னேனே.

தீபாக்னி சூரணம்

பதினான்குசீர்க் கழிநெடிலடி விருத்தம்

பஞ்சலவ ணத்துட னெவாச்சாரம் வெங்காரம்
பகர்சவர்க் காரமுடனே
பாங்கான சுக்குடன் சிறுதேக்கு செவ்வியம்
பரவுதிப் பிலிமூலமும்
செஞ்சொலா ளைத்திப்லி வட்டத்தி ருப்பியும்
திகழோம மிளகினுடனே
சீரக வகைதன்னி லொருபலங் கூட்டியே
சேரகன் றாகவைத்துச்
செஞ்சித்ர மூலமுன் மருந்தினிற் பாதியும்
சேரவே தானெடுத்துத்
திகழவே யிவைகளை வறுத்துடன் பொடிபண்ணித்
தேனதி லருந்தவேதான்
அஞ்சாம லின்றிடுஞ் சபகாச குன்மமும்
அடைவாங் கிராணிமூலம்
அகன்றிடு மென்னவே தீபாக்னி சூரணம்
ஆய்ந்துரைக் கின்றவாறே.

அமுக்கரா சூரணம்

கிராம்புசிறு நாகப்பூ வோடேல மிளகு
கெடியான திப்பிலியும் வேர்க்கொம்பி னோடு

திராமசுவ கந்தமுட னென்றி ரண்டு
செய்நாலு மிருநாலு நான்குநா லுலெண்
எட்டெட்டு மேயுலர்த்தி யிளவறுப் பாய்ப்பொடி
ஈரெண் சீனியிட் டிடவி தற்கு
அஷ்டகுன் மம்பிலி யுங்குத்து வாயு
ஆமேக வெட்டைபிரமியம் விக்கல் பாண்டு
இரைப்புமிளைப் போடுசய ரோகம்மன வெரிவு
இடைகரங் கால்சிரம் வரட்சியொடு வீயு
மெய்ம்பெருக வெழுத்தல்பி டுங்கிட்டோ டுஞ்சிலேத்மம்
விட்டோடு மேயசுவ கந்தாதி யினிலே.

## இஞ்சி ரசாயனம்.

### கட்டளைக் கலித்துறை

திரிமுற் பவத்துரி போக்கித் தறிதொடி தீத்தொகைத்துப்
பெரிபொரி பஞ்சாக்கினியிலொன் ஹுங்கபத் தெண்விஜயம்
சரிபெரிங் திட்டிடி யுண்பொடி மூவிரற் சத்திமுதல்
எரிவனன் மந்தமும் பித்தப் பிணியு மிடறுமே.

## இஞ்சிச் சூரணம்.

இஞ்சியு முப்ப லந்தான் இயல்பெறக் கண்ட மாக்கி
மிஞ்சநெய் தனில்வ றுத்து மிளகுதிப் பிலிமூன் றுக
விஞ்சிய மூல மொன்று வீறுள வேலஞ் சுக்கு
தஞ்சசா திக்கா யோடு தான்சடா மாஞ்சி கூட்டே.

கூட்டுசீ ரகமி ரண்டும் கோட்டமுஞ் சிறுநா கப்பூ
வாட்டிய லவங்கப் பத்ரி வளர்வெட்டி வேர்கி ராம்பு
தீட்டிய சாதி பத்திரி திகழுந்தா ளிசமொன் றுக
நாட்டுச்சர்க் கரைபத் தாக நறியகண் டாத்ரி யாமே.

மிக்க வரோகக மிகுமன்னத் வேடம்
பக்க வாயு பருகுலே யெரிவுடன்,
தக்க வாயுவும் சத்தியுங் கோழையும்
திக்கஞ் சூசிகா வாயுவுந் தீருமே,

## ஏலாதிச் சூரணம்

### எண்சீர் விருத்தம்

கொள்ளவே யேலாதிச் சூர ணங்கேள்
குணமான லவங்கமொன்று மிளகி ரண்டு
விள்ளவே நாகம்நாலு தாளிச மெட்டு
விதமான குகைநீறு பதினு றுகும்
நள்ளவே சுக்குதான் முப்பத் திரண்டு
நலமான ஏலமது வறுபத்து நாலு
கள்ளவே சர்க்கரைதான் சமனுய்க் கூட்டிக்
கலந்துபுதுக் கலசமதில் பதனம் பண்ணே.
பண்ணவே வெருகடித்து ளிருநே ரங்கொள்
பறக்குமடா பித்தமொடு வாதம் வாய்வு
தண்ணவே கிரந்திரண மரிகி ரந்தி
தளமான மேஹூறல் செயரிசி ரங்கு
நண்ணவே சில்விடங்க ளுடா தோடும்
நலமான குட்டமொடு குறைநோய் தீரும்
பெண்ணவே பெரும்பாடு வெலுப்பு ருக்கி
பின்பாரா தோடுமின்ன மொன்று கேளே.

## கும்மட்டிச் சூரணம்

ஆற்றுக் கும்மட்டிக்காய் விதை, ஓடு, போக்கினது 20. சட்டியி லிட்டு, வளையலுப்பு பலம் ஐந்து, உப்பு படி ஒன்று, பசுவின் பால் படி ஒன்று கூட்டி அடுப்பிலேற்றி வேகவைத்து, கடைந்து, சட்டியி லிட்டு மூடி சீலமண் செய்து, 40 நாள் புதைத்து எடுத்து, அரைத்து வைத்துக்கொண்டு, ஒரு விராகனெடையாக காலை மாத்திரம் கொடுத்துவர, குன்மம், மந்தம் போம்.

## சிவதைச் சூரணம்

### வெண்பா

உண்ணு மிலவங்க மோதுபலே முக்கடுகு
திண்ணேல நாகப்பூ சேர்முத்தம்—பண்ணுபொடி
பாலுடனே நற்சிவதை பாகமாய்ச் சுத்தித்து
நாலுடனே முன்பொடிசேர் நன்று.

நன்றுபொடி முக்கழஞ்சு நல்லதேன் சர்க்கரையிற்
றின்றுவிடும் போதே சிதறிவிடும்—ஒன்றுந்தான்
மீளா மலக்கட்டு மிக்கவெப்பு வாயுவுடன்
கிளாக நோய்க்குங்காண் கேள்.

## சிவனார் வேம்புச் சூரணம்

### எண்சீர் விருத்தம்

காணாத சிவன்வேம்புச் சூர ணங்கேள்
கருதியே சிவன்வேம்பு சமூலங் கொண்டு
கோணாத நிழலுலர்த்திப் பலந்தான் பத்து
குறிப்பாகச் சங்கம்வேர் பலந்தான் ரெண்டு
கோணாத வெள்ளைச்சா ரணையின் வேரும்
தூதுவளை மிளகரணை யமுக்க ருவேர்
கோணாது வகைவகைக்குப் பலந்தான் ரெண்டு
கொடிவேலி நொச்சிகருஞ் சூரை வேம்பே.

வேம்புடனே திரிகடுகு திரிப லாதி
விதமான கார்போகி சீர கந்தான்
சோம்பதுவுங் கடலுரையும் வசம்பிந் துப்பு
செப்பரிய கருங்காலிப் பட்டை யோடு
கோம்பான மூலமொடு பறங்கிப் பட்டை
கோப்பிரண்டை கருவாகை யூறற் பட்டை
சோம்பாக வகைக்கிரண்டு பலமாய்ச் சொன்னோம்
சொற்பெரிய சிவனார்தன் வேம்பு கேளே.

கேளேநீ யிவையெல்லா மொன்றாய்ச் சேர்த்து
கிரமமுட னிழலுலர்த்திச் சூர ணித்து
தேளேநற் பாண்டத்தி லிட்டு மைந்தா
திருகுகள்ளிச் சாறும்வெள் ளாட்டு நீரும்
வேளேநீ பேய்க்குமட்டிச் சாற்றி னோடும்
விதமான தேசிச்சார் வகை வகைக்கு
கேளேதான் வகைக்குஒரு படிதான் வார்த்துக்
குமுரவே கிரவிநன்றாய் மூடிப் போடே

மூடியே நாள்மூன்று புதைத்து வைத்து
மூசியாம லெடுத்தாவி யுலர்த்தி நன்றாய்
நாடியே சட்டிதனி லிட்டு மூடி
நறுக்கியெந்தி சந்திவெரு கடிதுா ளப்பா
மூடியே தூளதனை யெடுத்து நீயும்
முன்சொன்ன சிவன்வேம்புத் தயிலந் தன்னைப்
பாடியே காசெடைதான் சேர்த்துக் கொள்ளப்
பதினெட்டுச் சூலைகுட்டங் குறைநோய் போமே.

## சீந்திற் சூரணம்

### எண்சீர் விருத்தம்

ஆகாது இன்னமொரு சூர ணங்கேள்
அப்பனே சீந்திலிட சூர ணத்தை
வாகான சுத்தகங்கை தன்னிற் சுத்தி
மைந்தனே மூவேழு தரமே செய்து
பாகாக உலர்த்தியதைப் பாலிற் பிசரிப்
பாலகனே காயவைத்துப் பலம்பத் தப்பா
நோரகக் கரிசாலை சூரணங் கூட்டி
நினைவாகப் பூநாகப் பூச்சி தன்னை.

தன்னையே பாலிலிடமண் ணெல்லாங் கக்கும்
தருவாகப் பின்புலர்த்திச் சூர ணித்து
ஒண்ணுமே ஆப்பால்மூன் றெடையுங் கூட்டி
உத்தமனே மூன்றுவிசை வடித்துக் கட்டி
திண்ணபமாய் வெருகடிதான் நெய்யிற் கொள்ள
நிலையாத மேகமொடு கவிசை யினை
சொன்னமே காசமெட்டு இளைப்புகய ரோகம்
தொலையாத கிரிச்சரமும் அண்டவாய்வே.

வாயுவென்ற வாதமெட்டு வறட்சி பித்தம்
வகையாகத் தீருமடா தேனிற் கொள்ளத்
தோயுவென்ற கன்மநோய் நாசிப் புண்கள்
தொலையாத பீநசமுந் தொலைந்து போகும்

பாயுமென்ற சர்க்கரையிற் கொண்டால் மைந்தா
பாங்கான மயிர்வெட்டுப் புழுவெட் டோடும்
காயுவென்ற கால்பலங்கண் தெளிவு முண்டாங்
கருவாகப் புளிபுகையுந் தவிர்க்கச் சொல்லே.

சுண்டைவற்றல் சூரணம்.

பதினான்கு சீர்க்கழிநெடில் முடுகு விருத்தம்.

சுண்டை வற்றல்கறி நிம்ப பத்திரி
சுவைக்கு மாங்கனி விதைச்சுளை
சொல்லு மோதகமு நெல்லி தாதுகனித்
தோலும் வெந்தயமோ டேழுமே
விண்டு ரைத்தபடி யொன்று பட்டிட
வெதுப்பி யேயிள வறுப்ப தாய்
மிருது வாகவிடி வடிகொ ளீதுபொடி
வெருகடி எருமைத் தயிரிலே
கொண்டி டப்பொருமல் மந்தமிக் கிரைவு
குமுறி நின்றிடு கழிச்சலும்
கோல மூலமதி சார மோடெழு
கிராணி மூலமு மடாதுகை
கண்ட தித்தனையும் வென்றி புத்தியுள
பண்டி தத்தொழிலிர் நம்புவீர்
கருணை யானமுனி அருள தாகமொழி
கைம்ம ருந்தெனவே செய்புமே.

தயிர்ச் சுண்டிச் சூரணம்

நேரிசை வெண்பா.

அஞ்சுப்பு மஞ்சுபல மவ்வளவு மாச்சுக்கு
மிஞ்சுபுளிப் புத்தயிரோர் வீசையிலே—தஞ்சமுற
எல்லுலர்த்தித் தூளாக் கினிதருந்து மூன்றுவிரல்
இல்லையசி ரணம்பேதி யே

## பஞ்சதீபாக்கினிச் சூரணம்

### எண்சீர் விருத்தம்

தள்ளவே பஞ்சதீபாக் கினிய தென்னுந்
தளமான சூரணத்தைச் சொல்லக் கேளு
விள்ளவே திரிகடுகோ டேலஞ் சீரகம்
விதமாக வகையொன்று பலமொன் றாக
நள்ளவே யிளவறுப்பாய்ச் சூர ணித்து
நலமாக் வடிகொண்டு சர்க்கரைதான் சேர்த்துத்
தெள்ளவே தேனெய்யில் வெருகடிதான் கொள்ளத்
திறமாகத் தீரும்நோய் செப்பக்கேளே.

செப்புகிறே னுட்டிணநோய் சூலை வாய்வு
சேர்ந்தபித்த வாயுவொடு சிலேத்தும ரோகம்
தப்புகிறேன் பொருமலொடு செரியா மந்தம்
தளமான மயக்கமொடு கிறுகி றுப்பு
வெப்புகிறே னத்திசுர மத்தி வெட்டை
வேறான மூலத்தின் வாய்வு தீரும்
நப்புகிறேன் புளிகசப்பு புகையுந் தள்ளு
நலமான காந்தம்வைத்து நலமாய்க் கொள்ளே.

## நிலவாகைச் சூரணம்

### எண்சீர் விருத்தம்

நலமாகச் சூரணமொன்று சொல்லக் கேளு
நன்றான நிலவாகை சுக்குங் கூட்டிப்
பிலமாக மிளகுவாய் விளங்க மோமம்
பேராக வகைக்கொரு பலமே தூக்கிச்
சிலமாக ரவிமுகத்தி லுலரப் போட்டுச்
சிதறும இடித்துச்சூ ரணந்தான் செய்து
தலமாகச் சர்க்கரைதான் சமனுக் கூட்டித்
தவறும விருநோரங் கொண்டாற் கேளே.

கேளப்பா வாயுவென்ற தெல்லாம் போகும்
கெடியான பித்தமெல்லாங் கீழ்நோக் கிப்போம்

வாளப்பா உட்டிணரோ மெல்லாந் தீரும்
வளமான பொருமலொடு விம்மல் தீரும்
நாளப்பா சேத்துமரோ மெல்லாம் தீரும்
நலமான விக்கலொடு வாந்தி தீரும்
தாளப்பா வுடம்பெரிவு சுவாச காசந்
தவறுண்டு போகுமடா சாற்றக் கேளே.

## பருத்தி (விதைச்) சூரணம்

### வெண்பா

பண்ணும் பருத்திவிளா பாரிலுள நெற்பொரியு
மெண்ணுசிறு திப்பிலியு மேலமுட—னண்ணுபொடி
சர்க்கரையுந் தேனுந் தளரக் குழைத்துண்ண
விக்குள்சத்தி போகும் விரும்பு.

## பறங்கிப்பட்டைச் சூரணம்

### தரு திரிபுடை

பறங்கிச் சக்கையொன் றஃதலாதிலே பகருநிறைகருந் துளசிசீர்கலந்
திறங்க வுலர்த்திநற் பொடிசெய் ததனைமு—னிசைவதாயுண்
மேகக் குட்டத்தின் கருமை வெண்மையை விலக்குமேனியைத் துலக்
[கும்பசியெழு
ரோக மறுமுறை செப்பு நாடொறு-நோயையடுமே [லயிலவாயுவைப்
இச்சைப் பத்திய முளகொன் றேபொடி யியற்றிப் புசித்ததி
பிச்சை நளியைமு னடிக்கு மடிக்குமெய்—பிணியுமிகவே.

## பிரண்டைச் சூரணம்

ஆதியான வியாதி யினதுமறு மறைந்த பத்திய முன்னதாகக்கொ
ளோது சூரண முறைமை மேற்படி—யுரைக்கிறேனே [தியதற்கிணை
பிரண்டை துணிக்கிணை தக்கிரத்தினிற் பிரண்டை நிழலிடை யுலர்த்
யரத்த மோம முக்கடு காரட்ட—மையவிலவங்கம் [வறுதின்
உருளிந் திலைகளு முலர்த்தி யிடித்ததை யுண்ணநெலியள வுண்ணி
மருள் செய் கபசநி பித்தவாதமெய்—வலியுன்மத்தம்

## புன்கம்பூச் சூரணம்

### எண்சீர் விருத்தம்

பாரப்பா மேகமிரு பதுவுந் தீரப்
பாடுகிறேன் புன்கம்பூ வென்ற மூலி

நேரப்பா ஒருபடிப்பூ வாரி வந்து
நேயமா யாய்ந்தெடுத்துப் பாண்டத் திட்டுச்
சேரப்பா வடுப்பேற்றி யெரித்துக் கிண்டிச்
சிறப்பாக வாவின்நெய் படிதா னென்று
ஊரப்பா வறுக்குமப்போ கொஞ்சங் கொஞ்சம்
உண்ணவுண்ண வார்த்துமே புரட்டி வாங்கே.

வாங்கியே யொருநேரம் வெருக டித்துள்
மண்டலந்தான் கொண்டிடவே யந்நோ யெல்லாம்
ஏங்கியே மேகவகை யெல்லா மோடும்
இலவுபட்ட தீப்போல வெரிந்து போகும்
பாங்கியே பத்தியந்தான் பகரக் கேளு
பரிவான புளிபுகையுந் தள்ள வேண்டும்
ஈங்கியதோர் வாயுவென்ற பதார்த்தந் தள்ளி
இச்சாபத் தியமாக வுண்டு கேளே.

மயிலிறகாதிச் சூரணம்.

கலிவிருத்தம்.

எட்டுத் திப்பிலி யீரைந்து சீரகம்
கட்டுத் தேனில் கலந்துண விக்கலும்
விட்டுப் போகும் விடாவிடிற் பொத்தகஞ்
சுட்டுப் போடுநான் தேரனு மல்லவே.

மூக்கிரட்டைச் சூரணம்.

தரு திரிபுடை

மூக்கிரட்டை வெண்குன்றிதாதகி மூன்றுவேர்கிறையான்றவரிதகி
யாக்கிபதைப்பொடி செய்துகொண்டிடி—லகட்டுவலிநோய் [பத்தியம்
மலக்கட் டறுந்தியிர் வாதம்பெரும்பிணி வல்லைகுட்டங்களகலும்
பெலத்த தல்லலகு பத்தியமாவது—பேசுவேனே.

திராட்சாதி சூரணம்.

திபதை கலப்பு பஃறொடை

முந்திரி கைக்கனி பேரீச் சங்கனி
முத்தக் காசொட ரேணு கமும்

சந்தன நெற்பொரி காட்டெரு மைப்பால்
தனியே லமுநற் சீர கமும்
முந்திய வெட்டிவேர் திரிகடு பலேவேர்
முட்டிவேர் கோஷ்டமு மதுர முடன்
சிற்று முட்டிவேர் சீந்தில் சர்க்கரை
சேருநி லக்குமிழ் வேரு டனே
மல்லி நெருஞ்சி வேர்விலா மிச்சம்மர
மஞ்சளு நெய்த லின்வே ருடனே
நல்ல கிராம்பொடு கஸ்தூரி மஞ்சளு
நற்குங் குமநன் மலரு டனே
காணு மடவிக் கச்சோ லத்துடன்
கஞ்சத் தின்வளே யம்மு டனே
பூணு மிலவசரி கூட்டிப் பொடிநேர்
போடிதில் நற்சர்க்கரையு டனே
தாணிக் காயள வுண்டையு ருட்டியுட்
டாக்கி டுந்தனி மதுவி டவே
பூணு மிளேப்பு முழலேயு மிருமல்
பொருமல் காசச் சுவாச முடன்
குன்மமுந் தாது சயப்பிர மேகம்
கொடிய வயிற்றி னுண்ணோய் வலியும்
சோரு மரோசக வாந்தி பயித்திய
பாண்டு சுரத்தொ டுசூழ் சயமும்
நாடிடு சந்நி தியக்க மயக்கமும்
நாற்பது பித்தமு நளிரெ ரிவும்
ஓடிடும் நோய்கள் திராட்சா திப்பொடி
யுண்டிட வென்ற னன்மா முனியே.

## தாளிசாதி சூரணம்

தாளிசமென்றொரு பத்திரியாமது தன்னுடைச் சூரணத்தைக் கேளுஞ்
சூழும் வியாதிக்குச் சஞ்சீவியாமிது சொல்கிறேன்கேளு சரக்கு வகை
சொல்லுகிறேன் தாளிசம் லவங்கப்பட்டையேலஞ் சுக்கு மதுரம்
[பெருங்காயம்
நெல்லிமுள்ளி கோஷ்டந் திப்பிலிசீரக நேர்ந்ததொருசத குப்பி யுடன்

குப்பியுட னேம நற்சீரகமுங் கூறுந்தெசாவரங் கிராம்பு பத்திரி
செப்புவேன் கர்க்கடகச் சிங்கியுமிதிற் சேர்சாதிக்காய் தான்றி
கடுக்காயங்
காயுஞ் சடாமாஞ்சி ருன்மிளகுஞ்சிறு நாகப்பூ சண்பக மொக்குடனே
வாய்விளங் கத்துடன் லவுங்கபத்திரி வகைக்கு மெட்டு விராகனெடை
எட்டுவி ராகனெடை சேர்த்துவதில் தொட்டிடுங் கொத்த பலிகேளு
இட்டிடு நாற்பத்தெட்டு விராகனெடை யிடித்துமல் தன்னிற் றூளாக்கி
தூளாக்கிபதைச்சீலை வடிகொண்டு சீனியாந்தொண் ணூற்றறுவராகன்
கேளும் கலந்திரு நேரமுங்கொள்ளத் தீரும்வி யாதியைக் கேட்
[டருளும்
கேட்டருளும் வாதபெண்பதும் போமுடல் நீட்டிய பித்தங்க ளைற்
[பதுவுங்
மூட்டுஞ் சிலேற்றுமந் தொண்ணூற்றுமேறுடு முடல்சொரி சிரங்குக
[டான்றீரும்
சொரி சிரங்கு டான்றீரும் வயிறெரியுங் குன்மமும் பித்தகுன்மம்
முரியும் வாய்வு வயிற்றுவலி கெட்ட மூத்திரக் கிரிச்சினங் காமாலை
காமாலை யுஞ்சுரம் வாயூறல் வெள்ளையுள் வரட்சிதாகம் பொருமலுடன்
ஏமாந்தே போடிடுங் காதினிரைச்சலு மிருமல் கைகால் குடைச்ச
[லுமே
குடைச்சலு முஷ்ணமுந் தொண்டைகட்டுமிகக் கூறுநீர்க்கட்டும்
[வயிற்றிற் கெண்டை
மடைத்தனஞ் செய்யு மயக்கமுளுருக்கி மருந்திடு மீரல் வறட்சியும்
[போம்
வறட்சியுந்தீரும் க்ஷயமும்போ நெஞ்சில் வருத்தமுள்ள நீர்க்க டுப்
[புடனே
எரிப்பு நெஞ்சினிற் கைகால் கறுப்பு மியல்சிரவாயுவல்லி சுரம்போமே
இயல்பா மல்லியின் சுரம்போமே மிச வோங்குங் கபால வாய்வுடனே
அடைவாய்த் தின்றமே பத்தியங்காத்தா லன்புடன் தீரு மென
வுரைத்தார்

பஞ்சமூலச் சூரணம்,

செவ்வியம் போரத்தை சித்திரமூ லஞ்சுக்கோ
டொவ்வுமண்டு பாரங்கி யோரைத்தும்—வெவ்வினையைச்

சண்ணுபஞ்ச மூலமெனத் தாரணிபெ லாமறிய
வண்ண மயிலே வழுத்து.

இப்பாட்டில் கூறிய ஐந்து சரக்குகளையும் சூரணித்து தக்க அளவில் நோய்கட்குக் கொடுக்கக் குணந்தரும்.

---

## லேகியம்.

---

### பஞ்சதீபாக்னி லேகியம்.

பாரப்பா பஞ்சதீ பாக்னி யென்னப்
பகர்கின்ற லேகியந்தான் சொல்லக் கேளாய்
ஆரப்பா திரிகடுகு மேலம் சீரம்
அப்பனே வகையொன்று பலந்தா னொன்று
பேரப்பா விளவறுப்பாய்ச் சூர ணித்துப்
பெரிதான வாவின்பால் படியி ரண்டு
சேரப்பா பனைவெல்லம் பலந்தா னெட்டுச்
சிறப்பாகக் கரைத்ததிலே பாகு செய்யே.
செய்யப்பா சூரணத்தைத் தூவிக் கிண்டு
திறமான தேனெய்தா னுரியு மூக்கு
கய்யப்பா விட்டதிலே கிண்டிக் கிண்டிக்
கருவாக மெழுகுபத மாக வாங்கி
மய்யப்பா பாக்களவி ருவே ளந்தான்
மைந்தனே மண்டலந்தான் கொண்டா யானால்
கய்யப்பா தீருகின்ற வியாதி கேளாய்
கருவான வாய்வோடு வாதமாமே.
ஆமப்பா வுஷ்ணங்கள் பித்த வாயு
அப்பனே சரீரத்தி லுளைவு குத்து
போமப்பா வலிகடுப்பு மெரிச்சல் பேதி
பொருமலுடன் வாயுவென்ற கிராணி தீரும்
வேமப்பா வத்திசுர மத்தி வெட்டை
விருதான வாந்தியெல்லாம் விழலாய்ப் போகும்.

### கரிசாலை இலேகியம்

காணப்பா பாண்டு வகை யாவும் போகக்
கரிசாலை லேகியந்தான் சொல்லக் கேளாய்

காணப்பா பொற்கையான் சாறுபடி யிரண்டு
நலமான நெருஞ்சிரசம் படியி ரண்டு
வாணப்பா சிறுகீரைச் சாறுபடி யொன்று
வளமான பொடுதலைநீர்ப் படிதா னொன்று
தாணப்பா கீழ்க்காயி நெல்லிச் சாறு
தருவான செருப்படிநீர்ப் படிதா னென்றே.

ஒன்றப்பா வியாழுவகை சொல்லக் கேளாய்
உறவான நாவல்கருங் காலி யத்தி
ஒன்றபா தென்னம்பூ வகையொன் றுக்கும்
ஓர்பலந்தான் மய்யநன்று யிடித்துப் போட்டுக்
கண்டப்பா தூணிநீ ரெட்டொன் றுக்கிக்
கருவான சாற்றிலுள்ளே கருத்தாய் வைத்துக்
இண்டப்பா சமமாக்கி யிறக்கிக் கொண்டு
கெணிதமுடன் கருவான சாற்றிற் சேரே.

சேர்க்கவின்னங் கியாழுமொன்று சொல்லக் கேளாய்
செப்புகிறேன் மிளகொடு மிளகரணை மூல
மார்க்கமாம் அவுரியொடு சிற்று முட்டி
வளமான பேராமுட்டி விலாமிச் சோடு
தீர்க்கமாய்ப் பலமூன்று நிறுத்துக் கொண்டு
திறமாக விடித்ததனைத் தூணி நீரில்
சேர்க்கவே சோடசத்தோ டொன்றாய்க் காய்ச்சிச்
சிதறாதே முன்கியாழுந் தன்னிற் கூட்டே.

கூட்டுவாய் பனைவெல்லம் பலந்தா னெட்டு
கூரான கன்னல்வெல்லம் பலந்தா னெட்டு
மாட்டுவா யாவின்பாற் படிதா னாறு
வளமாகக் கரைத்துவிட்டுச் சொல்லக் கேளாய்
காட்டுவா யடுப்பேற்றிப் பாகு சேரிற்
கருவான சீரகமே லங்கி ராம்பு
நீட்டுவாய் சாதிக்காய் சாதி பத்திரி
நிலைவாக வோமங் குரோசாணி யாமே.

ஆமப்பா நாகப்பூ கர்க்கடக சிங்கி
அப்பனே கோஷ்டமோ டக்கிரர் காரம்
தாமப்பா மதுரமொடு தாளிச பத்திரி
தப்பாமற் றிரிகடுகு திரிப லாதி
நாமப்பா வகையொன்றிற் பலந்தா னொன்று
நலமாகச் சூரணித்து முன்பாகிற் றூவி
வேமப்பா கிண்டையிலே யாவி னெய்தான்
விரைவிலரைப் படிவீதம் விட்டுக் கிண்டே.

கிண்டப்பா தேனதிலே படிதான் விட்டுக்
கிருபையொடு திரிலோகச் செந்தூ ரந்தான்
றண்டப்பா பலமொன்று கூடப் போட்டுத்
தப்பாமல் மண்டேரம் பலமொன் றப்பா
மண்டப்பா கிண்டியதை மெழுகாய் வாங்கி
மகத்தான புன்னைக்கா யளவே வீதங்
கொண்டப்பா மண்டலந்தான் சென்ற தானாற்
கூறுகெட்ட வெண்பாண்டுஞ் சிவக்க லாச்சே.

ஆச்சப்பா பாண்டுவகை யாவும் போகு
மப்பனே பித்தவெட்டை கைகா லோய்ச்சல்
காச்சப்பா காந்தலுட னெரிவு போகுங்
கனமான வாந்தியொடு மயக்கந் தூக்கம்
ஓச்சப்பா வீக்கமொடு நீர்ச்சு ரப்பு
முத்தமனே கிராணியெலா மொழிந்து போகும்
நீச்சப்பா வரோசகங்க ளெல்லாம் போகும்
நிசமான அசுவகெந்தித் தைல மூழ்கே.

## கருணை லேகியம்.

கேளப்பா கருணையென்ற கிழங்கு வாங்கி
கெடியாய வமுரியினு லவித்து மைந்தா
நாளப்பா திரிபலையைப் பொடியாய்ச் செய்து
நலமான கிழங்குடனே பிசைந்து கொண்டு
வேளப்பா முப்பூவுங் கூடச் சேர்த்து
விசையாக அடுப்பேற்றிக் கிண்டும் போதில்

ஆளப்பா நல்லெண்ணெய் அளவாய் விட்டு
அரகரா மெழுகுபத மாக வாங்கே,
வாங்கியதோர் லேகியத்தை அந்தி சந்தி
வரிசையாய் நெல்லிக்கா யளவு கொள்ள
ஏங்கியே பறந்தோடு மூல மெல்லாம்
என்னசொல்வே னீரைந்து நாளில் மைந்தா
பாங்குடனே வுள்மூலம் வெளிமூ லந்தான்
பற்றிநின்ற சீமூலம் ரெத்த மூலம்
தாங்கிநின்ற குதமூலம் வாய்வு மூலம்
தப்பாமல் மூலமொன் பதும் போமே,

## சரபங்கவில்வாதி லேகியம்.

கொள்ளவே யின்னமொன்று சொல்லக் கேளு
குணமான சரபங்க வில்வாதி லேகியம்
விள்ளவே வில்வவேர் முட்கா வேளை
விருதான சங்கவேர் வகைக்குத் தூக்கு
தெள்ளவே சிற்றாமல்லி சிற்றா முட்டி
திறமான பேர்மல்லி கூந்தல் முள்ளி
நள்ளவே சாரணைவேர் கண்டங் காலி
நலமான விலாமிச்சை சீந்தில் தானே.

தானென்ற கொடிவேலி பொன்மு சுட்டை
தளமான நன்னாரி சிறுதேக் கப்பா
வானென்ற மூலிவகை பதினா றுந்தான்
வளமான பலமஞ்சு இடித்து நய்ய
வேனென்ற வாற்றுநீர் தூணி விட்டு
விளங்கவே யெட்டொன்றாய் யிறுத்துக் கொண்டு
கானென்ற கன்னல்வெல்லஞ் சேர்தா னாலு
கருவாவின் பால்ரெண்டு படிதான் சேரே.

சேர்த்தப்பா கரைத்ததிலே பாகு செய்து
திறமான திரிகடுகு திரிப லாதி
வார்த்ததிலே கிராம்பேல மிருசீ ரந்தான்
வளமான கோட்டந்தா ளீசப் பத்திரி

கார்த்ததிலே யோமம்ரண் டரத்லை ரண்டு
தளமான கொத்துமல்லி லவங்கப் பட்டை
ஆர்த்ததிலே யக்கரா வரத்தை திப்பிலி
அப்பனே வால்மிளகு குலக்கா யமே.

ஆமப்பா வகையொன்று பலமொன் றாக
அப்பனே யிளவறுப்பாய் சூர ணித்துச்
சேமப்பா பாகிலே தூவிக் கிண்டித்
திறமான தேன்படிநெய் யரைதான் விட்டு
நாமப்பா குழம்புபோல் வாங்கி வைத்து
நலமாகக் கழஞ்சிநிறை யிருநே ரங்கொள்
தாமப்பா பித்தவெட்டை பாண்டு ஆறுந்
தவறுண்டு போகுஞ்சய மெட்டுந் தானே.

தானென்ற குன்மமெட்டுங் கிறாணி யாறுந்
தடமான வாய்க்கசப்பு வெள்ளோக் காளந்
தேனென்ற வாயூற லக்கினி மந்தந்
திறமான சூலையொடு கைகால் காந்தல்
பானென்ற பித்தமது நாற்ப துந்தான்
பறக்குமடா மண்டலத்தில் யரிந்து கொள்ளு
வேனென்ற பத்தியந்தான் புளிக சப்பு
விளங்கியதோர் புகையோடு பெண்ணுந் தள்ளே.

தள்ளப்பா திரிலோகம் வைத்துக் கொள்ளு
தளமான வாலரசச் செந்தூ ரந்தான்
கொள்ளப்பா லோகசெந் தூரந் தானும்
குறையாமற் பணவெடைதான் வைத்துக் கொள்ளு
தள்ளப்பா பித்தமென்ற தெல்லாம் போகுந்
தருவான சேத்துமங்கள் தொண்ணூற் றாறும்
விள்ளப்பா கடல்புக்குங் கண்டு கொள்ளு
விதமாக வின்னமொரு சேதி கேளே.

## தேற்றாங்கொட்டை லேகியம்.

சாந்தமா மின்னமொரு லேகி யங்கேள்
சமர்த்தான பலமைந்து தேற்றாங் கொட்டை

சேர்ந்தொரு திரிகடுகு திரி பலாதி
சிற்றரத்தை சீரகம் வகைக்கரைப் பலந்தான்
பாங்கமாய்ப் பொடிசெய்து வைத்துக் கொண்டு
பஞ்சதாரை பலம்நாலு படிபாப் பாலில்
தோய்ந்திடவே கலக்கியதைப் பாகு சேர்த்துத்
துரிதமுடன் தூள்கொட்டிக் கிளரு வாயே.

கிளரயிலே பசுவின்நெய் படிகால் வாரு
கிழிறக்கித் தேன்பாதி விட்டுக் கிண்டித்
தளரயிலே பாக்களவு லேகி யத்தில்
தருவான நாகபற்பங் கூட்டித் தின்னு
அளரயிலே யிருவேளை யிருபதுநாள் கொள்ளு
அப்பனே மூலநோ யகலுஞ் சொன்னோம்
இளரவே க்ஷயமுடனே அத்திசுரம் வாதம்
இதமான அக்கினியா மந்தம் போமே.

## நாரத்தை லேகியம்.

ஒழிவதற்கு நார்த்தங்காய் லேகி யத்தை
யுரைகிறேன் நாரத்தம் பழச்சா றிஞ்சி
ஒழிவதற்கு வழுக்கிரா சாரணைவேர்ச் சாறு
ஒவ்வொன்று படிநாலு நல்ல வெல்லம்
ஒழிவதற்குப் பயித்தஞ்சு பலங்க ரைத்தே
ஒருநான்கு படிகூட்டி யொன்றாய்க் காய்ச்சி
ஒழிவதற்குப் பாகாகக் குறுக்கி யப்பா
உண்மையுடன் கற்கவகை யுரைக்கி றேனே

உரைக்கிறேன் திரிகடுகு மேலமதி மதுர
மூயர்தேசா வரங்கோட்டஞ் சிற்ற ரத்தை
உரைக்கிறேன் கொத்துமல்லி தாளிச பத்திரி
ஓகோகோ முந்திரிகைப் பழமோர் பலமாய்
உரைக்கிறே னதிவிடைய மழுக்கிரா காரம்
உண்மைபெறும் வால்மிளகு சிறுநா கப்பூ
உரைக்கிறேன் சாதிக்காய் பத்திரி கிராம்பு
மோருதிரி பலைகுறோ சாணி யோமம்.

ஓமந்தான் கந்தபொடி கரிய சீரகம்
ஒவ்வொன்றுக் கரைப்பலமாய் வெயிலு லர்த்தி
நேமமா யிடித்துவடி கட்டிச் சூரணம்
நேர்த்தியாய்ப் பாகிலே தூவிக் கிண்டிச்
சாமமரை பதமாக்கிக் கிண்டிச் சீனி
தனையுமே பதினைஞ்சு பலந்தான் தூவி
சமமாய் தேனிரண்டு படியும் விட்டே
இளகியபின் படிநறுநெய் விட்டுக் கிண்டே.

கிண்டியதோர் லேகியத்தைப் புதுகலசத் திட்டு
கிருபையுடன் வண்டுகட்டி நாலுதின மாற்றி
மண்டலந்தா னந்திசந்தி யருந்தி னக்கால்
வளர்பித்த குன்மநெஞ் செறிப்பு மரோசி
உண்டுலரத் தாபசுரம் வாந்தி பித்தம்
உட்சூடு கிறுகிறுப்பு வாயுதலை நோவும்
கண்டவுடன் பறந்தோடு மக்கினியின் மந்தம்
கழன்றுமல நீர்க்கட்டு காந்தல் போமே.

## வெண்பூசுணை லேகியம்.

கொள்ளவே கூழ்பாண்ட லேகி யந்தான்
குணமான கூழ்ப்பாண்டச் சாறுபடி நாலு
விள்ளவே தாழையிட விழுதின் சாறு
விறுதான படியொன்று தென்னம்பூ வொன்று
தள்ளவே பழச்சாறு படிதா னொன்று
தளமான வாவின்பால் படிதான் ரெண்டு
பள்ளவே சர்க்கரைதான் பலமோர் பத்து
பதறுமற் கரைத்ததனைப் பாகு சேரே.

சேருமே சீரகமு மல்லி கோட்டம்
வளமான மிளகுமா சக்கா யேலம்
காருமே சாதிக்காய் சாதி பத்திரி
கருவான மதுரமொடு தாளீ சந்தான்
வாருமே ஒருவகைக்குப் பலமொன் றாக
வகையாகச் சூரணித்துப் பாகிற் றூவி



நேருமேதே னெய்படி யரைதான் விட்டு
நினைவாகக் கூழுபோல் கிண்டி வாங்கே.

வாங்கியே புன்னைக்கா யளவு வீதம்
வளமான லேகியத்தைக் கொண்டா யானால்
நீங்குமே காமாலை சோகை யெல்லாம்
நீங்காத வத்திசுர மத்தி வெட்டை
தாங்கியதோர் பிரமியங்கள் வெள்ளை வீழ்தல்
தளமாகும் தேகபுஷ்டி விந்து வூறும்
பாங்கியே யூஷ்ணநோய் நீர்ச்சு ருக்கு
பறக்குமே புளிபுகைநீ தள்ளிக் கொள்ளே

## தைலம்.

### அரக்குத் தைலம்.

துருமவியாதி யெண்குடுப்பஞ் சுராற்றறலெண் ணன்குடன்
சுருக்கப்பலையிந் தனக்கனலாந் தொகைக்கெட்டொன் [றுய் வடிகுடிநீ
ரருமைநறும்பா லெட்டயில மன்னீர்க்கருத்த மவந்திமஸ்து
மாற்றப்பளவைப் படிப்பலமா மாரநிசிபுட் கரஞ்சிகரச்
சருமமடைபச் சிலைமதுரஞ் சடைகிச்சிலிரோ கணிபேலை
சதபுட்பியும்வா லரியுரிபூஞ் சாந்தோடுபய வசைமூசலி
உருமமுறசெவ் வல்லிகண மொவ்வொன்றினுக்கோ ராம் [பிரமா
யூற்றும்பயசா லிழையெல்லா மூற்றிக்கரைத்துத் தான [பிடே.

### மகிமை.

உத்தான மிட்டுமுதற் பொருளை வாழ்த்தி
யொல்கவெரித் ததைந்தாநா ளுதயமுந்தி
யோதுபரு வத்துவடித் ததற்குச் சுத்தி
பொருமதிநெற் புடந்தீர்வ தொளிரிலாட்சைச்
சத்தான தைலத்தின் பெயரைச் சொல்லிற்
சப்ததா துச்சுரமுஞ் சடக்கடுப்புங்

சந்திரா வர்த்தமொடு சூரியா வர்த்தஞ்
தலைச்சூலை வியர்வுறுகற் றுழைவாச
மூத்தான வெயிற்றினடிச் சுரப்பு மாற்ற
மொழிய வொட்டாச் சுரக்கினமு மூர்த்தமாக
மூச்செழுப் புஞ்சுவாச காசச் செருக்கு
முதிருழலை யுதிரத்தின் முறிவும் பாண்டுக்
கொத்தான நோய்களு முள்ளீர லுக்குட்
குளிர்ந்தெழுந்தங் கவயவியைக் குலிக்கி யாட்டுங்
குளிர்ச்சுரமு நாட்பட்ட சுரமுந் தீவாய்க்
குயவரிவை நேருமயக் குழாத்த தாமே.

## அர்க்கக்ஷீராதித் தைலம்.

எருக்குகுடம் பாற்களன்றி யிலைவிரண்டை சீதமெரு கிருக்கிழங்கு
னிருக்குமற லோடேழு முட்டிவகைக் கைந்தெணெய்பத் தெரிமுகிக் [காழ்
பெருக்குசய பாளமிவை யைந்தார்த்தஞ் சேர்த்தொன்றுப் 'பேணித் [தியாற்
சுருக்குவடி தைலமித னுமமர்க்க க்ஷீராதி துதித்திடாயே.

### மகிமை.

துதிக்கவிந்தத் தைலத்தைச் சிறுகவப்பிப் பிடிவாதத்
தொகைபோஞ் சத்திற்
கதிக்கவிட்டுப் புரட்டுண்மகோ தரஞ்சோபை பாண்டுகுன்மக்
கட்டியும் போம்
வதிக்கவொட்டாச் செவிக்குத்தற் கொருதுளிகுத் தடங்கும்
விழிவழியாம் பன்னோய்
பதிக்ககலத் தாண்டவென்றுற் கவிக்கமுந்திட் டிதற்கிச்சாப்
பத்தியங் காணே.

## இரசத்தைலம்.

சூலினிபற்ப ணம்பிப்பி முப்பன்னங் தொடிகளொந்தைர்
தாலினிக்கந்தங் கஃசிட் டிடிமுத் தவிப்படிசேர்
கோலினிரு மித்த முழியளாவிக் குடிகஃசுண்
மேலினிரைத்த நுணுக்காய்க் கிரந்தி விரணங்களே.

விரண மடர் படர் தாமரை பாமை வெடிப்புணினஞ்
சரண முறுப்பங்கை யாங்கரும் புள்ளி சதுமணிநோய்
காரணமி லாஞ்சன மேகக் கசிவுகண் டத்தலங்கற்
கிரண முறுமிர தத்தெண்ணெய் யீதுப்பிற் கெஞ்சிலுமே.

## உழுந்துத் தைலம்.

வெற்பாமணி மாடம்படி யேகம்புன லுன்காம்
விளையுங்குடி நீரொன்றிறு வெண்மைச்சுதை யிஃதே
நற்பாலக நேயஞ்சரி காலிப்பறழ் மிசிமா
நறவந்திரி கடுசிவணி மதுரஞ்சசி வசைகோ
முற்பாலிழை யேகம்பட வேயொவ்வொரு நிட்க
மொழியுங்கிவை யாவும்விர வித்தியெரி வடநெய்
நெற்பாளையு ளோரைந்திரு நாளும்புட மிடுமே
னிகழ்கின்றபின் னுளிற்புரி நெறியும்புக லுதுமே.

## மகிமை.

புகலுமா டத்தி னெய்யைப் புகலவை யவத்தும்பூசி
மிகலுறப் பிடிக்கின்மூர்த்தத் தெழுங்கம்பங் காத்தின்கம்ப
மகலுமீ துண்மைபப்பியங் கஞ்செய்யிற் செவிடுண்ணுக்கு
மகலுமிச் சாப்பத்பத்தோ டாடொரு வருடநாளே.

## கட்டு வாங்கத் தைலம்.

பெருமரத் துவக்கிரைந்தாம் பிரகுஞ்சத் தறற்றுரோணம்
பெய்திரு படிபாக்காய்ச்சிப் பின்பெணெய் புளியாரைச்சா
றொருபடி வகைக்கூற்றேட்டோ டுறைதநி நான்களாவி
யோமமிச் சிக்கம்பாதி யுடசத்தோற் கழற்பருப்பு
மாசிசி கிராஞ்சுக்கு மாதிரி கோட்டஞ்சாய்வில்
வக்கனி காட்ட ரத்திப்பூ மார்ச்சாலஞ் சடிலேவிரை
யொருபதோ டேழுக்துளா யொவ்வொன் றரைக் காற்ப லஞ் சேர்த்
தறவட்டுன் கிரகணித்துன் பொழிகட்டு வாங்கமீதே.

## கணைத்தைலம்.

சிறியமுத் தந்தருகெய் யமிழ்திளங் குமரிபொற்
றேகரா சம்பிப்பிசற்
றேவரு ராம்பிலை பலண்டுகற் பூரவலி
செப்புரவ முதலுபயமு
மறியளவொவ் வொருபடிபி னேழிரத மும்பிழிர்
தலையலைப் படியூற்றி
லக்கிரா காரமில வங்கவுரி யவ்விலை கதாருவயமேனிசெய்
தறியசோம் பசையமிர்தை மாசைசா திப்பன்ன
நற்குலக் காய்முளுள்ளி
னவிலந்த மொருகழஞ் சாமற்றை யுபமுபா
யத்துகளி டெரிதவிலை
வெறியிரத் தந்துவி வகைக்கொரு கழஞ்செடை
விளாவியடு கடகடுவிடா
மேன்மூடி யைம்பகற் சுத்தித் தெடுத்திடு
மிருகணைத் தைலமிதுவே.

### மகிமை.

கணைத்தைலங் கஃசமிழ்திற் கலந்திதிகா லையிலருந்த
வணைத்தடர்வெண் மையுங்கணைவெட் டையுமதிலுண்
டாஞ்சுரமுங்
தணைத்தருமெய் யுணைத்தலும்பாற் சர்த்திமந்தங் கிரந்திகளு
மணைத்தமுலைப் பாலருந்து மைந்தருழி வாராவே.

## கந்தகச்சூடர் தயிலம்.

தயிலங்கேள் கந்தகமும் வெடியுப்புஞ் சிலையும்
தருவாகப் பலமொன்று பொடிக்கும் போது
அயிலென்ற நவாச்சாரம் வீரந் தானும்
அப்பனே யரைக்கழஞ்சு கூடப் போட்டு
ஒயிலாகப் பலநாலு பசுவின் வெண்ணெய்
உத்தமனே கல்வத்தில் விட்டுருட்டித்

தயிலமப்பா முன்போல சுடர்த்தயிலம் வாங்கித்
தருவாகப் பீங்கானிற் பதனம் பண்ணே,

பண்ணியே பணவெடைதா னந்தி சந்தி
பத்துநாள் சர்க்கரையிற் கொள்ளும் போது
உண்ணவே பத்தியமோ இல்லை கண்டாய்
உத்தமனே தீருகிற வியாதி கேளு
நண்ணவே குஷ்டசொறி விரணம் வெள்ளை
நலமான கருமேகம் வாத வாய்வு
திண்ணவே கபரோகங் குன்மங் கூடத்
தீருமடா இன்னமொரு செய்தி கேளே.

## கரப்பான் தைலம்.

பூரந் துடிபிரு துத்தஞ் சசிசுசி போகமிரு
தாரங் கடிசிசி நீர்முத்தங் காட்டமை சத்திபெல்லெண்
சேரங் கினமரை கிட்கம் பொடிபடி தெங்குறும்பால்
வாரங்கி வைத்துநெய் வாங்கக் கரப்பனும் வாங்குமன்றே.

## கருடன் கிழங்கெண்ணெ.

தொழிலான தொழிலொன்று விளம்பக் கேளாய்
தேர்ந்திதனைச் செய்தவர்க்கு மெத்த நன்று
வழிபான கருடனுட கிழங்கு தன்னை
வயணமுடன் கண்ணிலிடு மைபோற் கொய்தே
பழியாமல் நிழலில்வைத் துலர்ந்த பின்ன
ரடைவுடனே பன்னிரண்டு பலந்தான் தூக்கு
விழிபதனால் பார்த்துநன்றுய் வினவ தாக
வியல்புடனே கடைச்சரக்கைக் கூட்டு வீரே.

கடைச்சரக்காம் வாய்விளங்கம் வாலுளுவை போடு
கனமான திரிகடுகு கரிபசி ரகமுமொக்க
நடைபாக வகைக்கு மொரு பலமதாக
நாடியே பிடித்ததனைச் சேர்த்துக் கொள்ளு

தண்டையறவே யகன்றதொரு பாண்டத் திட்டுத்
தனியான விளக்கெண்ணெ யரைப்படிதான் சேர்த்துக்
கெடையான வெங்காய மிடித்துக் கூட்டி
இன்பமுட னடுப்பேற்றி யெரிப்பீர் தாமே.

அடுப்பேற்றித் தீயதனை மெதுவ தாக்கி
அமர்ந்து மெள்ளப் பார்த்திறக்கு புனல்தங் காமல்
கடுப்பேற்றி யனல்மெத்த மீறி நின்றால்
காய்ந்தபதம் சரியாக வரமாட் டாது
எடுத்துவிடு கைவரிசை நிதானங் கண்டிங்
கேற்கனவே வடித்திறுத்து வைத்துக் கொண்டு
தொடுத்தபொல்லாக் கிரந்திகுட்டம் கரிமே கங்கள்
தொலையாத வெள்ளையரை யாப்புக் கென்றே

அரையாப்பு மேகரணம் விஷபா கங்கள்
அலைவான மேகத்தி னூரல் வெப்பு
திரையான புழுவெட்டு மலத்தின் சிக்கல்
தோராய மானதொரு கோய்க ளெல்லாம்
மறைவாகப் பதுங்கிவிடு நேர்ந்து பாரு
மலக்கட்டு வயிற்றிரைச்ச லுள்ர ணங்கள்
குறையாமல் தீர்க்குமப்பா அறிந்து செய்யில்
கோடான கோடிபிணி அகன்று போமே.

இதற்குப் பத்தியம்.

பிணியதற்குப் பத்தியத்தில் வைத்திங் கேற்றப்
பிழையகலச் செய்வதனால் தர்ம மாகும்
அணியான வார்த்தைசொல்லிப் பணத்தைக் கேட்டு
மவர்செலவுக் கேற்றபடி செய்து கொண்டால்
மணியான வொளிமீதில் நின்ற தாய்தான்
மனமகிழ்ச்சி யாகாமல் சிரிப்பா ளப்பா
கணிதமுடன் கடும்பத்ய மாக வைத்துக்
கடந்தபின்பிச் சாபத்திய மிருக்கச் செய்பே.

## கழற்சி தைலம்.

கழலடிபஞ் சலியைந்தம் பாறுபடி யேற்றழகே
கங்காண் டத்துட்
கண்ணிபற மைழந்துமிது னந்துலைவைத்திட் டேரண்டங்
கான்ற நேயம்
கிழலடியெண் டொந்தமுண ராஞ்சிமதுல் மிகிதோகை
விளங்க முற்காய்
மெல்லிலவங் கத்தூரியுந் தனித்தனிக்கங் கஷ்டமிகை
வெவ்வே றுகத்
தழலடியு றுதுவெதுப் பிப்பரா கம்புரிந்தத்
தாளி சேர்த்தச்
சாணமுலி லாக்கிவடி சுத்திரே சகம்பூரந் தாக்க தற்குட்
சுழலடியார் திரமருத்தும் பீஜமருத் தும்மவற்றின்
சுரப்பு நோயுந்
தமிதாங்க சப்ததா துக்களிற்கட் டுங்கனப்புஞ்
சுடர லாமே.

### அருந்தும் முறையும் பத்தியமும்

வச்சிரபீஜ நெய்யை மார்த்தாண்ட னுதயந் தன்னில்
வெச்சென வெதுப்பி யஷ்ட மிகைப்பலம் பாலா கக்கொள்
வைச்சகாள் மூன்றைந் தேழா மணப்புளி நிஷ்பாவத்தோ
டுச்சித முருங்கை பாகு முறையிச்சா பத்திய மென்றே.

## காதுநோய் தைலம்.

விளங்கவே காதிலுள்ள நோய்க ளுக்கு
விதமான மரமஞ்சள் வெள்ளைப் பூண்டு
அளங்கவே சக்கோடு வலம்பு ரிக்காய்
அடைவான கரிபசி ரகத்தி னோடு
முழுங்கவே ஈண்டிறைச்சி நத்தை யோடு
முசுறுமுட்டை கருங்கோழி முட்டை யோடு
புளங்கவே பிசைபெல்லாம் கிராகனென்று
புதுமையில்லக் கள்ளிபுனல் முருங்கைச் சாறே.

சாறென்ன வகைக்குவகை படிதான் வீசம்
சார்வான பசுவின்னெய் படிதான் காலும்
வாறென்ன வேப்பெண்ணெய் படிதான் காலும்
வளமாக விட்டெரித்துக் காதி லூற்றப்
பாறென்ன பஞ்சுகொண்டு மூடச் சொல்லு
பாங்காக ஈராறு நாள்தான் வாரு
கூறென்ன காதிலுள்ள வியாதி யெல்லாங்
குணமாகும் போகருட கடாட்சந் தானே.

## கையான் தைலம்.

தேகரா சச்சுரதந் தில்லியநேர் நேர்கூட்டிப்
பாகமுறக் காய்ச்சிப் பருகுவார்—காகமுனுங்
காசத்தைக் காணாக் காசமுற்று ரிப்பிருக்க
ராசத்தைக் காணார் நவில்.

## சித்தாதி யெண்ணெய்.

சீர்சிறந்த உடல்தனிலே கவுசை ரோகஞ்
சிரசுகளிற் குடியிருந்த மற்ற ரோகம்
பார்தனிலே விழுந்தெழுந்த சூலை ரோகம்
பம்பரம்போ லாடுகின்ற னீராம்பற் கட்டி
னீரிழிந்த கற்கூடு நிர்மலத்தின் கட்டு
நேரான சொரியோடு ரணங்கள் தானும்
பேர்பெரிய பெரும்பாடு நாவ டைப்பு
பின்னுமொரு கிரந்தியொடு மேகந் தானே

தானென்ற தலைபிடிகள் வாயிற் புண்ணுந்
தளம்புகின்ற கண்ணெரிவு ஊது வாய்வும்
ஊரென்று உயிரெழுந்து குடிபோகாமல்
உத்தமனே எண்ணெயொன்று யுரைக்கக் கேளு
வேனென்ற காயமொடு உள்ளி வாலும்
விரும்பியே வெண்காரங் காட்டெருமைப் பாலுங்

காவென்ற கடுக்காயு மிந்துப் பாகும்
கறுத்ததொரு சீரகமுந் திப்பிலியுஞ் சேரே.

சேரேநீ தினுசுக்கு ஓர்க ளஞ்சி
சேகரமாய் வாளமொடு பலமொன் றாகும்
காரேநீ உள்ளிச்சேர் கணக்காய் வாங்கு
கடுக்காயு மப்படியே வாங்கு வாங்கு
சீரேநீ சித்தண்ட வெண்ணெய்சே ரெட்டாம்
சிறப்பாகத் தேங்காய்ப்பால் சேரெட் டாகும்
வாரேநீ வேலிபருத் திச்சா றுந்தான்
வகையுடனே சேரெட்டு வாங்கு வாங்கே.

வாங்குவாய் கண்டதொரு சரக்கை யெல்லாம்
வகைவகைக்கு ஓர்களஞ்சி மைந்தா கேளு
பாங்குடனே கலுவமிட்டு மைபோ லாட்டி
பாலகனே பாண்டத்திற் பால்சா றெண்ணெய்
தேங்கியே சரக்கையெல்லாங் குழப்பிக் கொள்ளு
தியங்காமல் வேகமுள்ள விறகால் நீயும்
சாங்கமாய் தீமூட்டு சட்ட மாக
சம்பிரமுடன் வெந்திறக்கச் சரிசொல் வேனே.

சொல்லுவேன் யெண்ணெய்தனை தொட்டுப் பார்த்தாற்
சுந்தரனே சுத்தஜலம் போலி ருக்கும்
மல்லுவேன் மறுபாண்ட மிறுத்துக் கொள்ளு
மைந்தனே உண்பதற்கோ களஞ்சி யெண்ணெய்
வெல்லுமே பறக்குமடா ரோக மெல்லாம்
வேகமென்றே சிறங்குமுதல் விரண்டு ஓடும்
அல்லவே தொட்டிட்டால் பசாசு போகும்
அப்பனே அழலென்ற தாகம் போமே.

போமேதான் விக்கல்சத்தி குன்மம் போகும்
புத்தியுள்ள புலத்தியனே கவுசை போகும்
போமேதான் கிரந்திபரை யாப்பு போகும்
பொல்லாத பொருமலோடு பயித்தியம் போகும்

போமேதான் சூலையொடு பறங்கிப் புண்ணும்
பொல்லாத உட்கவுசை விக்கல் தானும்
போமேதான் நாவடைப்புக் கெர்ப்ப சூலை
போகுமடா வலியுந்தான் பறந்து போமே.

தானுமே காதடைப்பு வயிற்றில் ரோகம்
தங்காது கண்ணெரிவு பூச்சி வெட்டு
வானுமே மயங்குமடா குன்ம மெட்டும்
வகைகெட்டு சூதகத்தின் வெட்டை போகும்
நானுமே கிரந்திமா பிசங்க ளெட்டு
நசித்திடவே கலங்குமடா பவுத்ர ரோகம்
பாருமே யின்னூலை சித்தர் கூடி
பட்சமுடன் மகிழவே பேரிட் டாரே.

பேரிட்ட சித்தாதி பெண்ணெய் தன்னை
புலத்தியனே பூசைசெய்து பூரணமாய் வாங்கு
நேரிட்ட சிரியோர்க்கும் பெரியோர்க்கு மாகும்
நிலைமையாய் பத்தியங்கள் நீகூட் டாதே
வாரிட்ட விந்நூலை வெளியி டாதே
வாங்காதே தோடத்தை வாங்கி டாதே
காட்டிட்ட பண்டிதங்கள் கருத்தாய்ப் பார்த்து
கண்டுகொள்ளு இவ்வெட்டுங் கடாட்ச முற்றே.

## சித்திரமூலத் தைலம்.

கருதுகின்ற கொடிவேலி பலந்தா னொன்று
கற்றாவின் பாலைவிட் டரைத்துக் கொண்டு
சுருதிபெற நல்லெண்ணெய் படியி விட்டுச்
சுகமாக மெழுகுபதந் தன்னில் வாங்கி
நிருதியென்ற தலையிலிட்டு முழுகும் போது
நெறியோடே யிடித்தவிடி மண்டைக் குத்து
பருதிகண்ட பனிபோலப் பறக்கு மப்பா
பண்பாக வின்னமொன்று பகரக் கேளே.

## சீரகத்தைலம்.

அசைத்தொடிபொன்றெண்ணெய்பலைரக்குளகம் பாண்டத்
திசைத்தொடிபக் காய்ச்சி யிறத்தா—டசைத்தொடியத்
தன்ளும்பித் தக்கிச்சூர் சர்த்திதலை நோயலச
மன்ளுய்பித் துக்கொன்ளு மால்.

## சுக்குத் தைலம்.

சீரயிர்த மூடுவிட மஃதையவ் விடமறச்
சிவுதறி முட்டி யெண்பான்
சோாற் றறற்கடன தட்டமதி லொன்றுய்ச்
சிறுக்கிவிடு திலநெய் யமிர்தம்
வாரநீர்க் கரைபரை யரத்தைமுக் கடுமுஸ்தை
மஞ்சிட்டி முப்ப லமகில்
வரிவரி பெருக்கடி குலாதினி கதாகுவயம்
வலிவன்னி தாரு சந்தம்
காரமுற தேவதா பஞ்சவிலக தலரூப
கத்தாதி லொத்து கத்தோல்
கர்ச்சூர் பலோத்தமையோ டிந்துகத் தூரிகால்
மீரயிரு பத்தா றையு
மாரதண் டுகள்புரிப தப்பலமெண் ணெய்யிலிட்
டந்தச்ச ரக்கி ரண்டு
மடியிலிடு கலசத்து ளரைநிட்க மிதைபெரித்
தாங்தைல மக்க டமிடே.

## இதன் மகிமை.

கடத்திலிடு காகரா தித்தைலஞ் சுத்திமதி களம மிட்டாற்
காசினியி லதன்பெருமை யெமைவினவே லதுதொழிலிற்
[காட்டு மாயின்
சடத்திலுற மாவர்த்த வாதமெலாந் துவாலைபாற்றங்கா நாசி
தனினசியம் புரிந்திடிளு பீநசமுந் தலைநோயுந் தரியா மூர

விடத்திலடர் காலொடுபல் லரணையுங்கொப் பளிக்கவரு
[மிருசெ விக்கு
ளிருதுளிவிட் டிடக்குத்தல் விடுஞ்சிரநோய் தோற்
[பைக்குளிட்டிட் டாற்போர்
திடத்திடுகோ ழைக்கட்டுங் குரற்கம்ம லும்முழுக்கிற் றீரு
[மின்னுஞ்
செப்பின்மிகப் பெருகுமிதன் பத்தியமிச் சாபத்தியந்
[தேர்ந்தி டாயே.

## சூலைக்குடாரத் தைலம்

கடுநளி கடுக்கை வில்வங் கனற்சுவா தறுப லார்த்தங்
கம்படி யிருமூன் றங்கிக் கஞ்சது ரத்தொன் றீதே
விடுமணி யவிழும் மூர்த்தி வெள்ளுள்ளி சயிந்த வம்விட்
விரேசனி கடுகை யேழும் விதத்திற் கிருக மூஞ்சா
படுபுன விழைத்தாக் குண்மூன் றல்கல்மும் முறையுண்
[பத்தி
யங்கடி தெளிமை யாயு மகர்முகந் தொடிகா லாகக்
கொடுவிட வனிலச் சூலைக் குலங்குக னெதிர்சூர்ப் போ
[லாங்
கூறுஞ விதனைச் சூலைக் குடாரவன் றயில மென்றே.

## நாசிரோக நாசத்தைலம்

மாறுச்சி நேகபல நேயமவு தசியமுகிர்
வாங்குமய மூவட்சிநீர்
வகைவகைக் கொருபடி யிதிற்பட ரங்கஞ்ச
வளையமிரு வேர்மணநிசி
தேறுற் சனித்தவித் தேலமுத் தக்காசு
சிரகங்கிச்சிலியடை
செங்குவளை யலர்பீரு தந்தியதி மதுரமஞ்
சிட்டிசண் பகநன்னிலை
காறுப்பி லாளக மிரத்தமொரு பாணெடிரு
நான்குமொவ் வொருநிட்கமா
நன்குறத் துகள்புரிந் திட்டெரித் துப்பருவ
நாடிவடி யாடிவரவே

மருத்த டைப்பிக சஞ்சோரி வீழல்பக்
கெழறிரித் தோன்றல்விழிமா
செனுரோய்க டெறுநாசி ரோககா சத்தைலம்
மீதிலிச் சாப்பத்யமே.

## சகதேவித் தைலம்

ஒருதேவ கந்தச்சா ரொருபடிநெய் யெண்ணெய்
யுலரத்ததினோர் கோஷ்டி யுயராரநாரி
யிருமூலத் தன்மூலம் பாசகுசு மம்விட் [நிட்க
டிளக்கரிஷ்டை நெய்தலொன்பா னிலைவொவ்வோர்
மருமாவின் பாலிழைத்துப் பதத்திறுத்தோர் கரண்டி
யயிலினுமா டினும்விழிமை யடர்புகைமெய் யெரிவும்
பொருசிர ணச்சுரமு மாதவத்தே சனியாம்
புகழ்ச்சகதே வித்தைலம் புரிவர்மருத் துவரே.

## நொச்சி தைலம்

நிதசுரச மார்க்கவஞ் சங்குசா றடைமுட்டி
தேட்கடை பெரும்புன் முள்ளி
சிம்மமுகி பொடுதலை தமாலகி யளர்க்கமெண்
டெரிபணிரு வகையி ரதமு
மததரைப் படிகருமை யமுதெணெய் யிரண்டிரண்
டணைகடுகு பஞ்சாக் கினி
பாரேணுகஞ் சவ்வியம் பூதநா சினியோம
மதிவிடைபா ரங்கி முல்தை
மதகரிக் கணைவச்ச கத்தண்டு லம்பரு
மரத்துரி நறுக்கு மூலம்
வாய்விளங் கங்கடுகை கொடிவேலி மதுரசை
வசம்பிரு பதிற்றி ரண்டும்
பதமுறவவ் வமுதிழை வகைக்கரை வராகனெடை
பாய்ச்சதி லெரித்து ணடைப்
பஞ்சகா சங்கபஞ் சரபமெதிர் சிங்கமாம்
பகருநிற் குண்டி யிஃதே

### வேறு நொச்சித் தைலம்

ஒருபடி நொச்சிற் சாறே டொப்பெண்ணெய் சடையைக்
[துப்பு
திரிகடு சிங்கி குஷ்டந் தேக்குழுப் பலைவியாக்கிரி
யொருபதினுறுஞ் சேர்த்தட் டொவ்வொரு கஃசா னெண்ணில்
திரிகபங் கடுப்பு மேகுஞ் சிறியநிற் குண்டி யீதே.

### பீநசத் தைலம்.

எண்சுரசஞ் சாலைபிம்மூன் றிரதமொன்றிற்
இருபடிகா ணிந்தரத்தை
யுண்சரமா மணக்குடசந் தகரமத கங்கோட்ட
முதக சுத்தி
யண்சதபுட் பிகைவிளங்க மதுரமுன்னுன் கரைப்பலம்வெள்
ளைப்பா லாட்டட்
டெண்சதுநாட் கொருமுழுக்கு நசியமுஞ்செய்பீ நசரோய்க்
கியமன் மன்னே.

### கலிங்காதித் தைலம்

வாருகச்சா றீருளிச்சா றருணச் சாறு
வரைநிம்பச் சாறுவர்த்த மான நேயஞ்
சேருகச்சா வளவனவூற் றைந்து மட்டத்
தின்மூன்றங் குப்பகற்றிச் சேர்கா லாக
வாருகச்சா ருந்தனத்தார்க் கிதுக லிங்க
மாத்தைல மலடொழிக்கு மாதாந் தச்செந்
நீருகச்சா டாவிரத்தக் குன்மம் போக்கு
நிலைமலட்டுப் புழுக்களையு நீக்குங் காணே.

### மாந்த எண்ணெய்.

முத்துக் கிருதமு மீயச் சுரதமு
மூட்டெரி யொன்றிரண் டாம்படி மூற்பரு
வத்துக் கருநிறச் சீரக மோர்தொடி
மாவிட் டளாவி மயனத் தொருகல
சத்துக்கு ளேகல் லுரோசனை நிட்கந்
தனையிட் டிறத்துவை சந்தி லையத்தொட
ரெத்துக்க மாந்தப் பிணியுங் கபங்களு
மிந்திர விற்செய லென்ப ரறிஞரே.

### சிறு மாந்தத்தைலம்

ஆமண்டத் தயிப்படிபொன் றறுகுநிரி நிசிபுசிலத்
 தநளின் டைந்தும்
போமண்டத் தனுவினரை வகைக்கிரண்டு பலங்கலிங்கப்
 பொடித்துண் டிட்டே.
நீமண்டச் சதுக்கனியுஞ் சிவக்கில்வடி யொருகலிசாச்
 சேப்கூட் டுள்ளே
தாமண்டத் தலஜமுமெண் மாந்தமுமிற் சிறுமாந்தத்
 தைல மீதே.

### மிளகாய் தயிலம்

வாரேநீ யின்னமொன்று சொல்லக் கேளு
 வளமாக துலாமிளகாய் நிறுத்துப் போடு
சேரேநீ தணிநீ ரெட்டொன் றாக்கிச்
 செப்பமுடன் மண்சட்டி தனிலி றுத்து
காரேநீ எள்ளெண்ணெய் நாழி விட்டுக்
 கனிவாக மிளகுபல மரைத்துப் போடு
நீரேநீ மெழுகுபதந் தனில்வ டித்து
 நீர்க்கமாய் முழுகிவரப் பலனைக் கேளு
கேளேநீ நீர்ச்செரிப்பு திமிரு வாதங்
 கெணிதமாய்ச் சோகையொடு மண்டைக் குத்து
விளேநீ மேல்வலிகள் சூலை நோயும்
 விதமான புடைசூலை மேக வாயும்
பாளேநீ சொரிசிரங்குந் தீரும் பாரு
 பண்பான காதடைப்புக் காது குத்து
சூளேநீ யிவையிவைக ளெல்லாந் தீருஞ்
 சுகமான போகருட கடாட்சத் தாலே.

### மெருகுள்ளித் தைலம்

முசலமுள்ளி கோர்கோர்கோர் முத்தவியிட் டாக்கி
லசலமுள்ளி லாக்குங்கி லையுங்—கிசல
மெனவாம்புண் மேக மெறும்வாத வீக்கங்
கனவாம் புளியுப்பிற் காண்

## மெருகுத் தைலம்

பருமுசலி முட்டியையம் பானசுவ கந்தியதி
பலிகோரை நாராயணி
பலமுனன் கொவ்வொன்றி னுக்கைந்து மிடிரணி
பத்தசா ரத்தட்டகீ
சிருபடிநெய் யமுதமஃ தஃதரக் கம்பொன்
றிருந்ததிப் புனலிம்பத
மிலவங்க வுரியவிலை யிருதாரு கேசர
மரேணுக மரத்தைதகர
மரநிசி யகிற்சந்து ரோகணி விலாமிச்சை
மதுரமுயர் கோரோசனம்
மந்திட்டி மருண்மூல மொருபானே டேமூரம்
வகைக்கிரு வராகனமுதா
லரையெலா மதிலிட் டெரித்திறிது கஜகற்ணி
யாந்தயில மாடல்லதுண்
ணகலருஞ் சகலசுர முங்கடற் காயமா
மாமிலமி லறிபத்யமே

## மேகநாதத் தைலம்

சீர்மேவு நான்முகத்தோன் சிந்தைமகிழ்ந் தேபடைத்த
பார்மேவு மானிடர்க்குப் பண்பாக—வேர்மேவும்.
மாத்திரைக ளுண்டை மருந்துபற்ப சூரணங்கள்
சேர்ந்தவெண்ணெய் லேகியங்கள் செய்வதிலே-நேத்திபாய்
ஆகமத்தி லுள்ளபடி யன்பாய் மதுரமுறை
மேகநா தத்தைலம் விள்ளுகிறேன்—பாகமுடன்
புங்குபிராய் மாவிறுப்பைப் பொற்புரச மிஞ்சிபெட்டி
சங்குவமை யூமுலாத்தித் தன்னுடனே—பொங்குமொழி
நாற்றுண்டின் வேம்பு நெடுங்காலப் பூவரசம்
வாற்ற நிலவிளாசி வன்வேம்பு- சற்றுன
பத்துடனே தூக்கியதைப் பாங்காகப் பாண்டத்தில்
மெத்தெனவே தாணிடித்து மேவவிட்—டுத்தபுனல்
ஊனமிலா தேகுருணி யூற்றியபின் னும்பன்முகத்
தானை வழுத்தியுத் தானமிட்டு—மானக்

குழம்பாக வெந்தபின்பு கோதுதனை நீக்கித்
தழும்பாமற் றூளிதனி லூற்றிச்—செழும்பாகக்
கற்றேரே இன்னங் கருது முறையதனை
யுற்றே யுரைப்பே னுகந்துணர்வீர்—சித்தர்தொழும்
ஆடுதீண்டாப் பாளை கழற்கொடியும் வெள்ளறுகும்
தேடுசங்கன் குப்பிச் செறுப்படையும்—நாடுவளர்
கொட்டைக் கரந்தை குளிர்ந்த பொடுதலையும்
கட்டாக வேழு கணத்தொகையுஞ்—சித்தரிரு
மெய்ப்பதத்தைத் தான்றெழுது வேண்டியபின் சாறதனை
வைத்தடுப்பி லேற்றி வகையாக—நத்தியெரி
சுண்டிக் குழம்பாய்ச் சுருங்கையிலே நல்லெண்ணெய்
விண்டே யிரண்டுபடி மேவவிட்டுக்—கொண்டபின்
பட்டைப் பலமிரண்டு பரிவாய்ப் பொடிசெய்து
கொட்டைபல மொன்று குமிழ்போக்கிக்—கட்டையுரல்
தன்னிலிடித் துக்கிண்டித் தாவியே தெள்ளியதை
முன்னீரி னெண்ணெயிலே மேவவிடு—வன்னியினாற்
கிழுடிபற் றமற் கிளறநன்றாய்த் தேன்மெழுகாம்
தாழ இரக்கையிலே சாற்றக்கேள்—வாழைபிலை
தக்கணையும் பாக்கிலையுந் தேங்காய் பழங்கடலை
அக்கணமே வைத்தங் கவல்படைத்துப்—பக்கமுடன்
அச்சமற நோயாளிக் கந்திசந்தி நேரமுமே
கற்கமுட னெண்ணெய் காண்டியிடு—பொற்கொடியே
கால்முடக்குக் கைமுடக்குக் கட்டிவெடி சூலையுடல்
மேல்தடிப்பு மெய்கறுப்பு மேவுகுட்டம்—சேல்நேர்
அரையாப்பு லிங்கப்புற் றாழ்ந்த பவுத்திரமும்
விரையாப்பு வாதம்விரைத் தோடும்—குறையாமல்
வாய்த்த வரிகிரந்தி வந்திடுங்கண் காமாலை
மாய்த்துவிடும் மாள்விழியாள் மாயமெல்லாம்-சாற்றக்கேள்
மாதமே கங்கிட்டா மாதுவிஷ மொட்டாது
சாதுகுண மாகிவருந் தையலே—மோதிவரும்
தித்திப்பு நீரும் தினவுமுதல் மீன்கவுச்சு
வத்து முகமுட்டை வன்கவுச்சும்—தத்திவரும்

வற்றாக் கிரிச்சனங்கள் வாராது முத்தேகள்
சத்தி யிருமல்குன்மஞ் சண்ணுமடா—ரத்தபித்தம்
வண்டு மெலிக்கடியும் வாய்ந்தவரி குட்டமுடன்
கண்டமா லைமுதலாக் காணாது—விண்டிடுவேன்
பள்ளம் விழுந்த படர்தா மரைமுதலாய்
கள்ளத் தனமெழுந்த கட்டிகளும்—மெள்ளவே
நால்மறைகள் கைமறைகள் கண்டவொரு மெய்ம்மறைகள்
பால்மறைக ளெல்லாம் பறந்தோடும்—வேல்விழியார்
ஒக்கத் தொடர்ந்துவரு மொட்டியபுண் ணீராம்பல்
பக்கப் பிளவை படுசூலை—கொக்கரிக்கும்
அண்ணாக்குத் தூறும் அழியும் பிரமேகம்
உண்ணாக்குத் தொண்டையடைப் புப்போமே—வண்ணா
வருஞ்சிக்க ரோகமுதல் வாய்த்தகன்னப் புற்றும்
பருஞ்சால் வயிறூதற் பாண்டும்—இரிந்துவிடும்
வாதமோ ரெண்பதுவும் வந்தபித்த நாற்பதுவும்
தோதகசிலேத் மங்கள்தொண் ணூற்றாறும்—சாதகமாய்
ஆறாய் விழுகரப்பான் அம்புவி யோரறிந்த
வேறாய் முளைத்ததொரு வியாதியெல்லாம்—நீறாகும்
பத்தியங்கே ளுப்புமொச்சை பாசிப் பயற்றுவரை
முத்தா முளைக்கீரை முன்கூட்டு—புத்தியுடன்
ஆறுநாள் போகவிட் டாவின்மோர் தான்கூட்டு
சேருழு வைந்துநாட் சென்றக்கால்—நீருமோ
ரிரண்டுநாள் போகவிட்டு நல்லெண்ணெ யால்மூழ்கு
அண்டாத வெற்பி லமர்ந்தருளும்—தண்டமிழை
என்குரு வாமுனிவ னேற்பா வுலகர்க்கு
நன்றெனவே சொன்ன னயந்து.

## மயனத் தைலம்

சித்தக மனற்கலுப் பயிரோம மரிசனந்
தேட்பிசா சேழு முறையே
சேர்தொடி சதுப்பதிற் றஃதஃ தநிற்பாதி
செப்பரைக் கால ரைக்கா
லொத்ததொகை யிற்பாதி யிவைகளை நெடுங்கடத்
துள்ளடைத் தொரு கலசமே

துறவைத்து மண்ணிட்டு நூல்வரிந் தெழுசீலை
பொவ்வப் புரிந்தி ரண்டின்
சுத்தமத் தியமீது கீழ்பெரிது சிறிதாய்த்
துவாரமிட் டேர்வழி யின்வாய்த்
தூமமே காவண மூலோட்டமொடு கோமயந்
தோயப் பொதிந்தி வணமே
சத்தமுறு முத்தான மிட்டதோ முகவழி
தனிற்பாத் திரஞ்சேர்த் ததா
சனியைங் குலவவிடு முச்சாம மாவியொடு
தைலம் பிறந்தி ழியுமே

மகிமை.

இழியுமிந்த வள்ளியத்தாந் தைலப் பேரை
யிபம்புக்கா லர்த்தாங்க மிசிவு வீக்கம்
வழியுமுதி ரங்கொடுத்த வெட்டுக் காயம்
வளிபதப்பு நரித்தலையின் வாய்வு சந்நி
அழியுமட வார்குறியாண் குறித்த ளர்ச்சி
பத்திசந்தி தசைநரம்பிற் கிளைத்த வூதை
பொழியுமிதைப் பட்டிகட்டிற் கைகால் சோர்வு
முறங்குவர் களுப்பொருளா மோர்துங் காலே

வாதகேசரித் தைலம்

குடமொடு நொச்சித் தழுதாழை
கொச்சை யருக்கெண் ணோரண்டங்
கூறியவேழின் முதன்மூன்றுங்
கோமிது னம்பா றவிநேயம்
படிபடி தத்தம் முறவேபெய்
பண்டித வாயு மரேணுகையும்
பருமர சோனங் கமழ்சரணம்
பலாயரு ணுதம் புட்கரமுக்
கடுகடு கிரைந் தங்தந்தோர்
காசெடை மும்மூன் றிழைய முதாற்
கரைபடு வடியித னபிதானங்
கண்டுகொள் வாத கேசரியாம்

பிடிபிடி நற்றயி லந்தடவிப்
பேரா வாதக் குழுவுடனே
பிசறிய சருமத் திமிர்வாய்வும்
பிடுறு மிற்புலி யணைசுகமே.

## வாதநாசத் தைலம்

சுரச மிந்திர வல்லி விழுதிசு
வேத மூலையுத் தாமணி பர்ப்பணங்
தோய பாணமிவ் வேழி ரதத்தொடு
சோசப் பாலிரத் தாகத் தமிர்தமுஞ்
சரிச ரிப்படி யாகத் துழாவிடுஞ்
சமயஞ் சுக்குவ சப்புநற் சிரகஞ்
தாரு பீநத் துவயம்வெள் ளுள்ளியுத்
தாம ணிச்சடி லத்தோடி ராமட
மரிசி கச்சபத் தோடொரு நிட்கமாம்
வகைவ கைக்கொரு பாலொடோன் றுஞ்சுதை
வார்த்தி ழைத்திட் டெரித்திறுத் தேற்றுவை
மாந்த நோயில் வருந்தி யயர்வொடு
வருசு தர்க்குத யஞ்சிறு பாலடை
வாரந் நோய்முழு துஞ்சுடர்ப் பூச்சியாம்
வாத நாசத் தைலமி தைப்புவி
வாழ்த்திடு மாமத் தைலமென் றெங்குமே.

## விரணசஞ்சீவித் தைலம்.

காற்புத்தி யோரை நீயோர் காசென மதித்துக் கிட்டாக்
கனிக்கொட்டை யரிபிறப்பைக் கண்டலை நறுக்குச் சேரு
நாற்புத்தி யொடுவாற் கிண்ண நாவுநெய்த் தொடிப திற்
[றன்
ஞேற்றெரி கழுநீ ரப்பு ணுண்மையாய்ச் சாய்த்துக்
[காய்ச்சின்
மேற்புத்தி யென்கொ லங்க விரணங்கண் முழுதுந் தீர்த்த
வேதியர் தமையுள் ளாத விலங்கின ரினமு நோயி
ஹற்புத்தி ராதி யோடே நாளுக்கு நாட்டேய் வுற்று
கமபுரத் தேகு வார்போ ஞட்டைவிட் டேகு மாதோ.

### இதன் மகிமையும்-விநியோகமும்

மாதவத்தா லித்தைல மமைபினுக
வல்லிபிற்றேய்த் தருந்துசந்நி வருக்கந் தீரு
மோதகமிட் டலிபுரா தனத்தொன்றேனு
மூரிமங் கல்லியத்தான் மோட்டைத் தூர்த்து
மீதிறகா லுதயமப்பி யாமப்பின்னர்
மென்கலிகை யரைப்பிட்டு வெச்சுநீராட்
டேதமில்லெ பெழுநிவச மிவ்வண் ணஞ்செய்
பிதுவிரண சஞ்சீவி யிதயத்துன்னே.

### லகு விஷமுட்டித் தைலம்.

தைலமிரு படிபாகாள் வெள்ளைப்பா லிட்டுத்
தங்கெட்டி விதைச்சிவ லூரிதிரியா யிற்றேற்
பயிலுமவற் றுதிநடு வையரைய்ய யலைரகாண்
பக்கலொன்று மூவரையாம் பலமிடுகைப் பாகங்
குயிலுவதென் னவைசிவக்கும் பருவமுணர்ந் திறுத்துக்
குடிவழியா யுறுங்கன்மக் கொடும்பாவ மகற்றி
வெயிலிலிட்டப் பிப்பிடிக்கக் கனவாதக் குழுப்போ
மிக்கிலகு விடமுட்டி மென்றயில மிஃதே.

### பெழுகு குழம்பு முதலியன

### அகத்தியர் குழம்பு.

பருவதந் தன்னில் வாழும் பரமனு ரருளி னாலே
பெருமையா யுலகில் வாழும் புண்ணிய சனங்க ளுக்கு
உறுபல வியாதி வந்தாற் றீருமென் றுண்மை யாகப்
பிரபல மிகவே நன்றாய்ப் பேசினார் முனிவர் தாமே.
பேசிய மருந்து கோளாய் பெருங்காயங் கடுகிந் துப்பு
வீசிய ரசம்வெங் காரம் விடமனோ சிலையு மோமம்
ஆசிலா வரிதா ரத்தோ டருங்கருஞ் சீர கந்தான்
மாசிலா மருந்து பத்தும் வகைவகை கழஞ்சு வாங்கே.
வாங்கிய கழஞ்சுக் கொப்ப வாளமும் வறுத்துப் பாதி
தாங்கிய பச்சை பாதி சமன்முளை போக்கி நீயும்
நீங்கிலா மருந்து பத்துஞ் சேர்த்துமே யரைக்கக் காந்தும்
ஓங்கிய பொருஞ் சோறு முண்டுபி னரைத்துக் கட்டே.

கூட்டிய மருந்தின் பேரு மகத்தியர் குழம்ப தாகும்
ஈட்டிய சுரமே சுக்கா மிருமலே கடுக்காய்ச் சாறு
வாட்டிய குளிர்ச்சு ரங்கள் வகைசுக்கு மிளகு மாகும்
பாட்டியல் ரத்த மூலம் பசுநெய்யின் மேதிப் பாலே.

பாலெனு மொழியே கேளாய் பாண்டொடு வெப்புப் பாவை
மேலுநீ ராம்பல் சோகை மிளகுதூள் வெள்வெங் காயம்
சாலவே சந்நிக் கெல்லாந் தேனிஞ்சிச் சாற தாகும்
ஏலமாஞ் சந்நிவாதம் விஷங்கட்குங் கண்ணிற் றீட்டே.

இடுகண்ணிற் கடுகிற் பாதி வீங்குகற் றூழஞ் சோறு
வடிதயிர் சந்த னங்கள் வைத்துநீ கட்ட மாறும்
படுபரும் பிளவை வாழை பகாரை யாப்புப் புண்கள்
உடலுறு சிலந்திக் கெல்லா முமிநீரிற் பூச நன்றே

பூசிடு மூலைக்குத் துக்கும் புண்ணுக்கு மிதுவே யாகும்
கூசிடு குன்மந் தோன்றிற் கொம்மட்டிக் காயின் சாற்றிற்
பாசமாம் வாய்வு மாம்பல் பலவித குணத்திற் கெல்லாம்
நேசமாம் நொச்சி சுக்கில் நிச்சயஞ் செய்து பாரே.

பாராய் கபால வலிமுதலாப் பசாசு பறக்குந் திரிபுகையால்
நேரா யெடுக்கு நீர்ச்செறிப்பு நீர்க்கல்லடைப்புத்தாழைவிழல்
தீராக் கிரந்தி பறங்கிமுதல் தீருங் குப்பிச் சாறதனில்
சீராய்க் கடித்த பலவிஷங்கள் தீருந் தீருந் திர்பிடியே

பிடிக்குஞ் சீலை யம்மிதனிற் பிரட்டி யுருட்டித் திரியதனை
இடிக்கும் வலிக்குந் தலைவாத மிடறிப் போகும்புகைகாட்டின்
குடிக்குங் கியாழங் கொடிவேலி கொடிய கழற்சி முசுக்கை
கொச்சி
அடக்குஞ் சந்நி பதின்மூன்று மனுபா னஞ்செய் நூல்விதியே.

விதியா மருந்து விதுவல்லால் வேறே தேட வேண்டாங்காண்
பதியாய் நாலா யிரத்துநா னூறு பகரும்வியா திகளுக்கெல்லாம்
மதியால் வியாதிக் குறிப்பறிந்து வகையா யனுபா னந்தன்னில்
துதியா மருந்து பணவெடைதான் சொன்னோம் பத்திய
நீகாரே.

காரே பாவின் நெய்சொன்னேன் கறிதான் முருங்கை வாழைப்பிஞ்சு
பாரின் முளைத்த நார்த்தங்காய் படர்ந்து காய்க்குந் தூதுவளை
சேருங் கறிக ளிவையெல்லாஞ் செய்து பிழைகள் பண்ணுமல்
வாரம் பொருந்த பொதிகைமலை வளரு முனிவர் சொன்னாரே.
சொன்னார் மடவார் தங்கட்குச் சுகமாய்க் கர்ப்பம் வரும்படி கேள்
மின்னே யரசின் கொழுந்ததனை மிகவா வின்பால் விட்டரைத்து
முன்னோர் குழம்பு பணவெடைதான் மூட்டு மூன்று நாள் கொள்ள
பொன்னே புதல்வ ருண்டாவார் புவியோர்க் குறுதி கண்டீரே.
கண்டீர் நாவற் பட்டைதனைக் கறுத்த வாட்டின் பாலதனில்
கொண்டே சீரகப் பொடிகூட்டிக் குழைத்துப் பணவெடை தான்கொண்டால்
பண்டோர் சூதக வாய்வுடனே பருத்த கர்ப்ப வாதமும்போம்
வண்டார் குழல்சேர் மடமானே மலைசேர் முனிவர் வகுத் ததுவே
வகுத்த பிரம னுரையாலே வருகுஞ் சூசிக வாய்வுடனே
மிகுத்த திரட்சி வலிதீரும் மிளகுஞ் சுக்கும் பாகமதில்
தொகுத்த குழம்பு பணவெடைதான் துணிவாய்க் கொள்வீர் சுகமாகும்
திகைத்த பிரமி சோகமது தீருங் கற்கண் டினிற்கொள்ளே.

## இரச மெழுகு.

வாட்டமா மின்னமோ ரதுபா னங்கேள்
மைந்தனே வாலைரசம் வராகன் ரண்டே
விராகனெடை யிரண்டப்பா பறங்கிப் பட்டை
விருன திப்பிலி யிலவங்கம் ரண்டும்
விராகனெடை நாலப்பா கரும்பு வெல்லம்
விசைபடக்கத் தானரைத்தே யுண்டை கேளு
விராகவெடை முக்காலா யுருட்டி மைந்தா
விறகெட்ட மானிடர்க்கு மேழு நாள்தான்
விராகனெடை முக்காலா யந்திசந்தி
விவரமுடன் றன்கொடுத்து மேலுங் கேளே.

கேளப்பா பத்தியந்தான் உப்பா காது
　　கிருபையுடன் பசுவின்பால் கூட்டிக் கொள்ளு
நாளப்பா பதினைந்தா நாளிலேதான்
　　நன்மையுடன் தலைமுழுக்கு முழுக வாரு
கேளப்பா வொன்று மில்லைக் கோழிச்சாறு
　　கூட்டியே பத்தியத்தை முறித்துப் போடு
வேளப்பா வாயெல்லாம் வெந்து காணும்
　　விதமாகத் தான்றானே யாறுந் தானே
தாந்தானே யாறுகையிற் றீரு நோய்கேள்
　　தண்மையில்லா மேகவெள்ளை தடிப்புப் புண்கள்
சேந்தவொரு அழிகிரந்தி குழிகி ரந்தி
　　தீராத அரையாப்பு மேக சூலை.
போந்தானே கால்முடக்குக் கைம்மு டக்குப்
　　பொல்லாத நோய்களெல்லாம் போகுஞ் சொன்னேன்
நாந்தானே வாலையிட கருணை யாலே
　　நன்மையில்லா வியாதியெல்லா நலம தாமே.

N.B.—வாயெல்லாம் வெந்துகாணும் என்று பாட்டில் கூறியிருந்தபோதிலும் மருந்துபழகி இருந்தாலும் தக்க அளவிலும், நான் குறைவாகவும் சாப்பிட வாய் பிடிப்பதில்லை.

## இரசகந்தி மெழுகு.

பாரேநீ ரசகந்தி ரசகர்ப் பூரம்
　　பண்பான அரிதார மூசிக் காந்தம்
சீரேநீ துருசுதுத்த மிருதார் சிங்கி
　　சிறப்பான சுக்குடனே ஓம மஞ்சள்
வாரேநீ திப்பிலியு மரத்தை கோஷ்டம்
　　வளமான வாலுழுவை சோம்பு ஏலம்
கூரேநீ சாதிக்காய் மிளகு சீரங்
　　குணமான கார்போக மாசிக் காயே
காயான தேசாவரம் வாய்வி ளங்கம்
　　கனிவசம்பு லவங்கமுடன் பறங்கிப் பட்டை
வாயான சேங்கொட்டை கடுக்காய்த் தோலும்
　　வானகருஞ் சீரகமுங் காட்டுச் சீரம்

பாயான சிறுதேக்குந் தாளிசப் பத்ரி
பண்பாக முந்திரிகை பிரம்பின் மூலம்
வாயான எட்டிவிரை தேற்றான் வித்து
வளமான நீர்ப்பூண்டு எள்ளு மாமே.
ஆமேநற் கொள்ளுடனே தேங்காய் கூட
அடைவான சின்னிவேர் சங்கம் வேரும்
தாமேகேள் அழுக்கறா கொல்லன் கோவை
தபவான கொடுவேலி மூலத் தோடு
வாமேகேள் வகைவகைக்கு வராக னொன்று
வளமான கோழிமுட்டை ரண்டு வாரு
போமேகேள் இவையெல்லாம் பொடியாய்ச் செய்து
பொங்கமுடன் கல்லுரலில் போட்டுக் குத்தே.
குத்தப்பா இதுநேரே பணவெல் லந்தான்
குணமாக நாற்சாம மிடித்துத் திரு
குத்தப்பா வழித்தெடுத்துச் சிமிழில் வைத்துப்
பேதமில்லே சுண்டக்காய் விதங் கொள்ள
முத்தப்பா மோருஞ்சோ றுண்டு முன்னே
முசியாமல் மருந்துண்ண மண்ட லந்தான்
சித்தப்பா முழுகுநாள் மருந்துண் ணுதே
சிறப்பாகப் பத்தியந்தா னில்லே தானே
தானென்ற வெடிசூலே பேக சூலே
தபவான இடிசூலே புடைக்குஞ் சூலே
வானென்ற தடிசூலே வாத சூலே
வளமான கால்குடைச்சல் கரணை தீரும்
மானென்ற விப்புருதி கண்ட மாலே
மதியாத குட்டமொடு விடநீர் தீரும்
கோனென்ற குறைநோயுஞ் சிரங்குந் தீரும்
குணமான புழுவெட்டு தடிப்பும் போமே
போமேகேள் யோனிதன்னி லிலிங்கந் தன்னில்
பொலிவான ஆமையடி சிலந்தி மேகம்
தாமேகேள் செங்கிரந்தி கருங்கி ரந்தி
தபவான அரிகிரந்தி பொரிகி ரந்தி

வாமேசீ பருகிரந்தி யிடிகி ரந்தி
வளமான யிடிவிழுந்து புரைமேற் புண்ணு
ஆமேசீ அரைக்கடியுந் தண்டிற் புண்ணும்
அடைவான குள்ளிமா தேவி யாமே
ஆமேசீ துடைவாழை முட்டு வாழை
அடைவான குழிவாழை முதுகு வாழை
சேமேசீ புழுவாழை விலாவில் வாழை
செயலான தமர்காயாச் சிலந்தி யோடு
ஓமேசீ குறிப்புற்று யோனிப் புற்றும்
ஒளிவான இடிப்புற்று கன்னப் புற்று
தாமேசீ பலசிலந்தி கன்னத் தோசி
சதைவளருங் கண்ணோசி போகும் பாரே.
பாரடா பிளவையொடு பிளவைப் பூச்சி
பண்பான ராசனென்ற பிளவை யோடு
கூரடா நேத்திரம்மேற் பிளவை யோடு
கொடிதுதடிச் சிலந்திபுடைச் சிலந்தி யோடு
நேரடா பவுத்திரங்கள் முளைமூ லங்கள்
நெடியபத மெட்டுச்சக் கிரந்தி னோடு
வீரடா இவைகளெல்லாந் தீரும் தீரும்
விதமாக போகருட கடாட்சந் தானே

## இடிவல்லாதி.

ஒன்றான வல்லாதி சொல்லக் கேளு
உத்தமனே செங்கொட்டை பலந்தான் பத்து
நன்றாக மூக்குவெட்டிச் சாணிப் பாலில்
நலமாக மூன்றுநா ளூற வைத்து
அன்றான கல்லுரலிற் றானே போட்டு
அப்பனே யெள்ளதனை யிடித்துப் போட்டு
கன்றான கொப்பரைத்தேங் காயி ரண்டு
கனிவாகத் தானிடித்து நினைவாய்ப் போடே
போடேசீ பறங்கியுட பட்டை யப்பா
பொங்கமுட னமுக்கரா சித்திர மூலம்



கூடேநீ கத்தூரி மஞ்ச ளோடு
குணமான கருஞ்சீரம்வா லுழுவை யோடு
தேடேநீ குரோசாணி யோமத் தோடு
தெளிவான வெற்றிலையின் காம்பு தானும்
நாடேநீ கடுக்காயுந் திப்பிலி தானும்
நலமான கோட்டமும் வகைக்குக் கேளே.
கேளேதான் வகைவகைக்கோர் பலமாய்த் தூக்கி
கெணிதமுடன் சூரணமாய்ச் செய்து கொண்டு
வாளேதான் கல்லுரலில் மயனம் போல
வகைபாக பிடித்ததனைச் சொல்லக் கேளு
ஆளேதான் ரசகர்ப் பூர மப்பா
அடைவாக வராகனைந்து பொடித்துப் போட்டு
சாடேதான் பனைவெல்லம் பலந்தா னைந்து
சார்வாகப் போட்டிடிப்பாய் தயவாய்த் தானே
தானென்ன வல்லாதி அந்தி சந்தி
தயவாக வெருகடிமண் டலமே கொள்ள
வானென்ற குஷ்டமொடு கிரந்தி சூலை
வகையாக அரையாப்பு மேக மெல்லாம்
கோனென்ற குன்மமெட்டுஞ் சுக்கில வாய்வு
குணமில்லா ரணமேகங் கிரந்தி தீரும்
ஏனென்ற பத்தியந்தா னிச்சா பத்தியம்
இதமான உப்புமுதல் வறுத்துக் கூட்டே.
கூட்டப்பா தயிர்மோரு நெய்யு மாகும்
குணமான துவரையுட பருப்பு மாகும்
நாட்டப்பா பாசியென்ற பயறு மாகும்
நலமான நல்லாரை பொன்னாங் காணி
ஆட்டப்பா மச்சமென்ற பதார்த்தந் தள்ளு
அடைவாக மற்றெல்லா மாகும் பாரு
ஆட்டப்பா விளக்கெண்ணய் தேய்த்து மூழ்கு
அடைவாகச் சந்திரன்போல் தேகந் தானே.

## தேங்காய் குழம்பு.

இந்துப்பூற் கழஞ்சு காந்தமு நாற்கழஞ்சாம்
இஞ்சிச்சா றரைப்படிவெள் ளுள்ளியொரு பலமாங்

சந்திக்குச் திரிகடுகு பெருங்காய மோமங்
கருதரிய சவுக்காரம் வகைக்குநாற் கழஞ்சாம்
சிந்திக்கு சோர்வாளம் நாற்கழஞ்சு கூட்டித்
தேங்காய்ப்பா லில்குழம்பு செய்துவரு நேரம்
வந்திக்கும் நெய்விட்டுக் கொண்டிறக்கி யுண்ண
வயிற்றுநோய் தீருந்தேங் காய்க்குழம்பின் வகையே

## கிராம்பு பக்குவ வெண்ணெய்

ஏற்றயிலே சலதோஷ மண்டைக் குத்து
ஏற்றமென்ற நீரேற்ற மெல்லாந் தீரும்
பார்த்திபனே கண்ணிலுள்ள வியாதி தீரப்
பாடுகிறேன் சம்பழத்தில் நூற்றி னெட்டுத்
தோற்றமல் துளைதுளைத்து லவங்கம் நாட்டித்
திரிதமுடன் கயிர்கோத்துச் சட்டியிலே தூக்கிப்
பார்த்தாலே விளாங்காய்போற் பசுவின் வெண்ணெய்
பாலகனே லவங்கமெல்லாம் பரப்பி மூடே.

மூடியே அடிச்சட்டி தனிற்ப டாமல்
மூர்க்கமுடன் சுத்தகங்கை விட்டு வைநீ
நாடியே நாற்பதுநாள் வேறு வேறு
நலமான சுத்தகங்கை விட்டு வைத்துத்
தேடியே பிறகுவெண்ணெய் தனையெ டுத்துத்
திறமான தாம்பிரத்தின் பரணில் வைத்துச்
சாடியே பழமுடனே லவங்கப் பூவும்
தள்ளிவிடு வெண்ணெய்தனைக் கண்ணில் தீற்றே

தீற்றிடவே சலம்வீழும் எரிப்பு முண்டாம்
திறமாகச் சீலையினால் துடைக்க நிற்கும்
மாற்றிடவே மண்டலந்தான் கண்ணில் தீட்ட
மாறாத நேத்திரநோய் மாறு மென்றும்
போற்றிடவே பென்குருவே தியர்தா னித்தப்
புத்தகத்தின் பெருமையினால் கண்ட தப்பா
தோற்றிடா வுலகத்தில் எளியோ ருண்டு
துரையான துரைமக்க ளரச ருண்டே.

## கும்மட்டிக் குழம்பு.

சேரவே குன்மங்க ளொந்து போக
    செப்புகிறேன் கும்மட்டிக் குழம்பு தன்னை
ஆரவே குமட்டிக்காய்ச் சாறு நாழி
    அப்பனே சம்பீரச் சாறு நாழி
வாரமுறும் வெள்ளுள்ளி நொச்சி யிஞ்சி
    நீர்சாறு படிவாங்கி நிகழ்த்தக் கேளு
பார்புகழ ஐந்நாழி யொன்றாக் காச்சி
    பகருகின்ற சூதமொடு லிங்கந் தானே.

லிங்கமொடு பெருங்காயம் இந்து செம்மை
    நேரான வெங்காரம் கடுகு மஞ்சள்
லிங்கமுறும் வெந்தயமும் மிளகு காந்தம்
    நேர்வாளம் ஒவ்வொன்று கழஞ்சு ஒன்று
லிங்கமுற வாட்டியே பாகிற் சேர்த்து
    நெருங்காமல் மீறாமல் கிண்டிக் கிண்டி
லிங்கமுறும் பழம்புளிபோ லிறக்கி மைந்தா
    நிறையறிந்து உடலறிந்து உண்ணச் சொல்லே.

உண்ணுவது பனைவெல்லம் தனிற் பொதிந்து
    ஊட்டு வாய் தூதுவளங் காய்ப்பிர மாணம்
உண்மையிலே குன்மம்போம் பெருவயிறும் போகும்
    உதரத்தில நீராமை மகோத ரம்போம்
உண்ணையிலே மூலிகையும் வெப்புப் பாவை
    உருபாண்டு கவுசியொடு விஷபா கம்போம்
உண்மையிலே வாயுவென்ற சென்ம மும்போம்
    உரைக்கிறேன் கும்மட்டிக் குழம்பு தானே.

## சாதி சம்பீரக் குழம்பு.

பாசனத்தி லேயிரண்டு பாத வாலு கம்மதைத்
தேச னன்மு னீரதாக்கு தெள்ளு தரத மாம்பிறும்
வாச நன்மெய்ச் சம்பமாது வண்ண நீர்பெய் பக்ஷமாய்ப்
பேச நீர்சேர் பதமதாக்கு பெரிய சாதிக் குழம்பிதே.

வேந்தர் வானர் முதலினர்க்கு விள்ளு மிக்கு மூம்புசெய்
மாந்த பேதி வெப்புமூர்ச்சை வமன பித்த தாகமும்
சாந்த விந்து தேகவெண்மை சற்று மங்கி யின்மையும்
பாந்தள் வாயின் தேரையென்னப் பாறு மிளகு கொண்முளே.

சிற்றண்ட மெழுகு.

ஆடியே சிற்றண்ட மெழுகி தப்பா
அப்பனே சொல்லுகிறேன் வில்வ வேரு
தேடியே வீசைபத்து கொண்டு வந்து
சேர்த்ததனை நறுக்கியபின் நிழலு லர்த்தி
வாடியே போகாமல் பாண்டத் திட்டு
வாய்மூடிச் சீலெசெய்து குழித்தயிலம் வாங்கி
நீடியே தலைஅண்டம் பீங்கானி லிட்டு
நிலவரமாய்த் தைலமதை நிறைய வாரே.
வார்த்தபின்பு நாற்பதுநாள் ரவியில் வைத்து
வற்றவற்றத் தைலமதை வார்த்து வந்தால்
பார்த்திருந்த பண்டிதர்கள் மாய மாகப்
பசுமையுள்ள மெழுகாகும் பகரக் கேளு
தூர்த்து வந்த வாதமெல்லாந் துலைந்து போகுஞ்
சுண்டைக்கா யளவெடுத்துத் தேனி லீந்தால்
ஆர்த்திருந்த சூலையெல்லா மயர்ந்து போகு
மளவாகப் புலிப்பாணி அறைந்திட் டேனே.

நந்திமை.

சீரான தென்பொதிகைச் சித்தாசுத் தீசர்சொல்
பேரான நந்திமை பேசவே—காரான
நந்திவித்து நாற்பதுதா னன்றாய் முகிழ்போக்கி
யந்தச்சா ணிப்பா லதனிலவி—சொந்தமதாய்
ஒன்றிரண்டாய் வெட்டி யுழக்காவி னெய்யிலிட்
டன்றெட்டி வித்தைந்து காசெடைதான்—நன்றாக
காவலின் சாற்றிட்டோர் நாழிகைநீ வேகவைத்துத்
தாவியதை நாற்றுண்டாய்த் தான்வெட்டிப்—பாவகமுன்
னெய்யிலிட்டு வேகவைத்தி ரண்டுவித்து மேல்மிதந்தா
லய்யா பதமென் றறிந்தெடுத்து—மெய்யாக

நெய்வே றிறுத்துவைத்து நேர்செவியன் வித்துகளை
ஒப்பார மையா வுறவரைத்துச்—செய்மருந்து
பொன்னிமிளை யீர்நிட்கம் போற்றுகரி யுப்புவெடி
பன்னர்க்கம் பாலரைத்துப் பாய்ச்சுமேல்—வன்னிதனில்
ஏழுமுறை வாட்டி யியல்முருங்கைப் பட்டைதனை
வாழுமுற் பாலரைத்து வாய்ப்பித்துத்—தாழும்
அவிப்புடம் போடுபொடி யானபின் கல்நார்
புவியிலான் பால்முன்னாள் பூட்டி—இவணுறின்
நன்றாகக் காய்ச்சியே நல்லாப்பா லிற்றோய்த்து
வன்னமே விக்கவச மாட்டுவித்துப்—பின்னர்புடம்
போட்டபற்ப மீர்நிட்கம் போழ்கல் மதநண்டு [மாய்ப்
வாட்டகொப்ப ரைக்காய்ப்பால் வார்த்தரைத்து—நாட்ட
பண்ணினது ளொவ்வொன்றும் பார்வராக னேயிரண்டு
திண்பச்சைக் கர்ப்பூரஞ் செம்மலரோ—டுண்மையாம்
கோரோ சனமூன்றும் கொள்வகைக்கோ லீர்நிட்கம்
நாரியின் பால்விட்டு நன்கரைத்து—நீறாக்கி
நல்லசி னம்பலநால் நல்வால செந்தூரம்
சொல்லும் பலமரைதான் சூட்டக்கேள்—வல்லாய்
திரிகடுகோ டேலவிதை தேக்குதா ளிசம்
ரோசானி வாய்விளங்கங் கூறும்—அதிவிடயம்
சாதிக்காய் பத்திரியும் சார்சி ரகமிரண்டும்
ஆதிமலர் சவ்ய மரோணுகமும்—நீதியாம்
சித்திரமூ லத்தோல் சிறுநறுக்கு மூலமுடன்
சுத்த கசகசா சோம்புடனே—நற்றபவாய்
நேர்வாளஞ் சிற்றரத்தை நின்ற சடாமாஞ்சில்
சார்வக்க ராவல்வக் தாஞெவ்வொன்—றோர்வாய்
களஞ்சுநிறை பாய்வாங்கிக் கட்டா யிடித்து
வளம்பெறவே சூரணத்தை வைத்துக்—குழப்பாமல்
கண்டர்துத் தம்குரா சன்பூரம் வன்னிகர்ப்பம்
மண்டுசிலை நாறும்பூ மாறூரம்—கொண்ட
குதிரைப்பல் வெள்ளையுடன் கூறுசிவன் பெண்டீர்
அதிரச செந்தூரமண் ணுவி—புதிதா

வகைக்கு வராகனெடை மாநீலிச் சாற்றில்
தலைகந்தரைத்த சரக்கைச் சாமத்—தொகையிரண்டு
வில்லைசெய்து காய்ந்தால் வியனீலி தானரைத்து
நல்வில்லை யைப்பொதிந்து நாட்டக்கேள்—வல்லமைசேர்
சாணிகொண்டு தான்பொதிந்து சாத்திக் கருகுபுடம்
ஊணியிட்டுத் தானெடுத் துற்பனமாய்—மானேகேள்
முந்தியநற் றாளோடே மூட்டி யரைத்தெடுத்துச்
சிந்தைமகிழ்ந் தின்னவகை செப்பக்கேள்—விந்தை
பழகுசிறு சட்டியில் பண்முன்னெய் விட்டுப்
பழயவெல்ல நாலுபலம் பாய்ச்சிக்—குழையின்
பொடியிட்டுக் கிண்டிப் புதுத்தே னரைக்கால்
வடியிட்டுக் கிண்டியே வைத்துத்—துடிபெற்ற
பீங்கானில் வைத்துப் பிரமவிண்டு ருத்திரர்
தாங்கு மகேசன் சதாசிவன்—ஓங்குகின்ற
வாலை புவனை மகமாய் திரிபுரைக்கும்
ஆலமா யானை யறுமுகற்கும்—ஞாலமதில்
ஆதி வயிரவர்க்கு மவ்வவர்க்கும் பூசை
நீதி முறைப்படியே நீசெய்து—சோதி
அமிர்தநந்தி லேகியத்தை யந்திசந்தி வேளை
திமிர்தமிகு தேற்றான் விதைபோல்—சமரிதமாய்
நல்லமிர்த யோகநாள் நட்சத் திரம்பார்த்து
வல்லவர்க டின்ன வகைகேளாய்—நல்லமிர்தே!
தாலவெல்லம் பாக்களவில் சாதித்துக் கொண்டுவரக்
கோலமுட னுடன்னைக் கூறுவேன்—ஞாலமதில்
காலரை முக்கால் கனத்ததோர் மண்டலத்தில்
சால வியாதிகளைத் தாமறிந்து—மூல
அவபத் தியந்தவிர்த் தாளகறி கூட்டிச்
சவலப் படாமலே சாப்பிட்—டவனியினில்
வண்டுகடி செய்யான் வனத்தவளை பச்சோந்தி
பண்டுவந்த சூலை பதினெட்டும்—மீண்டு செயும்
குட்டம் பதினெட்டும் குன்மவகை யெட்டுடனே
முட்டுக் கரப்பன்வகை மூவாறும்—நட்டமிடும்

அண்டத்தின் புற்று மரையாப்பு விப்புருதி
கண்டத்தின் மாலையொடு கபாலகுஷ்டம்—மண்டு
சிரங்கி பதினெட்டும் கிரிச்சரமு வாறுங்
கறுத்த மதகரிகை வெள்ளை—சிறந்ததொரு
மேக மிருபதுவு மேல்கால் பிடிப்புடனே
சோகைமிகு சுக்கிலநோய் சோணிதநோய்—போகுமே
வாதப் பிடிப்புகை மங்குசொறி செஞ்சொறிவும்
பூதம்போல் வீங்குவதும் போயொளிக்கும்—சேத
எலிகடியு மீளை யிளைப்பறுங் காய்ச்சல்
தலைவலிகள் சந்நியெலாஞ் சாவுமே—புலிபோலே
சேவு மிளைப்பு கிளர்காச தோடவகை
பாவு முடறன்னிற் சாராவே—பூவுலகில்
பாண்டுவகை சோகை பலகரப்பன் வீக்கமெலாம்
தாண்டிவிடுஞ் சக்கரம்போற் றுனறுக்கும்—வேண்டும்
மகோதரம் பேர்வயிறு மகந்தாறு விடபாகம்
வகைகண்ட நீர்மூல வாமை—செகமறிய
வாதவகை யெண்பதுவு மானவைதொண் ணூற்றாறும்
சேதமுள மாந்தையெட்டுந் தீருமே—சாதகமாய்க்
கிற்றுக்கை கால்குறைநோய் தீயிலிடும் பஞ்சுபோல்
தோற்றுநோ யெல்லாந் தொலையுமே—ஏற்றமாய்
காயுஞ் சுரவகைநோய் காணாதே தேய்வெனவே
மாயு மிதன்பெருமை மாநிலத்தில்—ஓயாப்
பவுத்திரநோ யெட்டும் பல்லரணை பல்சூலை
தவழ்ந்த சிலவிஷங்க ளெல்லாம்—நழுவும்
சிலந்தி பிளவை தொடைவாழை தீரும்
கலந்துவருங் கால்கரப்பன் காணா—துலர்ந்துவிடும்
புண்புரைகள் போவதன்றிப் புண்ணெல்லா மாறிப்போம்
கண்விழுந்த காற்புற்று கான்றேடும்—மண்புகுந்தும்
கால்கையி லேவிரிவும் கண்டவிரு வைசேர்க்கும்
தூலமதிற் சந்த்ரவட்டம் சூர்யவட்டம்—பாலகனே

ஆண்சிலந்தி பெண்சிலந்தி யாமழுகல் நாற்றவெடி
ஊனுக்குள் பீலிகையு மோடுமே—வீணலவே
கன்னத்தின் புற்றும் கனத்தந்த சூலைகளும்
பின்னப் படுத்துந் திரட்சிகளும்—வன்னமிடு
யோனிலிங்கப் புற்றினையு மோட்டுநரம் புச்சிலந்தி
தானே யெலும்புதின் சண்டிப்புண்—மானே கேள்
ஆன சொறிகழலை ஆர்ந்தந் தொழுநோயும்
கானமார் பாணி கழல்வாதம்—பானைபோல்
அண்டத்து வாத மடர் படர்தாமரையும்
பிண்டத்தைக் கொல்லும் பெருநோய்போம்-மண்டலத்தில்
முட்டல் முடக்கல் முறுக்க லிறுக்குதல்
கட்டல் கழற்பிளவை காணுதே—சட்ட
வலித்தல் மரத்தல் மடக்கல் முடக்கல்
சலிப்பாந் தடிப்பையெல்லாஞ் சாடும்—பலத்த
பொறிகள் சிதறிப் புழுத்தல் குருணை
விழிசிறுகல் விண்சொருகல் மீளும்—அரணைகடி
கொப்புளமி குத்தே யெரியுஞ் சிலகுருதி
அப்பியகோ யத்தினையு மாறுமே—செப்பமுடன்
எந்தெந்த நோய்க்கு மிடியேறு சக்கரமாம்
சந்தயமோ? சூலைமழு தாகும்—முந்துவேள்
மாராம பாணமிது ராட்சசசங் காரமிது
சோமரச பாகமிது சுத்தமிஃ—தேமரச
சஞ்சீவி யிந்தவிழ்தம் சாப்பிட்டா னோய்களெலாம்
பஞ்சிலிடுந் தீயதுபோல் பற்றுமே—வஞ்சமிலை
பத்தியமோ வில்லை பகர்வோம் குளிர்சலத்தில்
சுத்தமாய் மூழ்கலாஞ் சொல்லக்கேள்—சற்றுக்
குமரிசந்த னாதி குளிருமிரு வாமலக
மமரிசண்ப காதிமுத லாகும்—குமரனும்
காலுநா ளைக்கொருநாள் நன்றாய்த் தவறாமல்
சீல முடன்முழுகச் சித்தியாம்—ஞாலமதில்
நந்திவித்துச் சஞ்சீவி நல்லமிர்த லேகியத்தைச்
சொந்தமாய்ச் சொன்னார் சுகம்.

## நவவுப்பு மெழுகு.

பாரப்பா பஞ்சநவ லோக வுப்பின்
பரிவான மெழுகொன்று பகரக் கேளு
காரப்பா கறியுப்பு யிந்துப் போடு
கனமான வளையலுப்பு பொட்டி லுப்பு
வாரப்பா வழுரியுப்பு மூங்கி லுப்பு
வகையான கல்லுப்பு பாறை யுப்பு
மாரப்பா பூநீறு மெல்லா மொன்றாய்
வகைக்குகாற் பலமிவைதா னிறுத்து வாங்கே

வாங்கியதோ ருப்பிவற்றைப் பாண்டத் திட்டு
வகையாந்தும் மட்டிச்சா றுவின் பாலும்
தாங்கியே தத்திவேராற் றுன்சு முற்றித்
தபவாக மணல்போக்கி வடித்துக்காய்ச்சி
போங்கியே சுண்டியபின் றவள மாகு
முத்தமனே கல்வத்தி லிட்டுக் கேளு
நீங்கில்லா வீரமது பலந்தா னென்று
சீரப்பா கர்ப்பூரமரைப் பலந்தா னுமே.

ஆமப்பா திரிகடுகு வராகன் மூன்
றப்பனே வாளமது பலமுங் கால்தான்
ஓமப்பா திரிபலையின் கியாழத் தாலே
யுத்தமனே பொருசாம மாட்டி வாங்கிக்
காமப்பால் விட்டரைப்பாய் சாம மொன்று
கடிதான மெழுகதனை யெடுத்து மைபோல்
தாமப்பா மிளகளவு பிரமா ணந்தான்
தயங்காமற் கருப்புட்டித் தன்னி லீயே.

ஈந்திடவே சூலைமகோ தரங்க ளுக்கு
மியல்பான வலிகுன்மஞ் கிரந்தி மேக
மாய்ந்திடநீர்க் கோவை யுதர வாயு
வரிதான விஷவாத மண்ட வாதம்
தோய்ந்திடவே வலிவாத முடக்கு வாதஞ்
சொற்பெரிய தமர்வாதந் தந்தி வாத

மாய்ந்திடவே சூதகவாயு குன்ம மெட்டும்
மகத்தான பாரிச வாயு போமே.

போமப்பா மெழுகுக்குப் பத்தி யந்தான்
புகழான வெந்நீருஞ் சாத முண்ண
ஆமப்பா வுப்பதனை வறுத்துக் கூட்டு
ஆவினுடைப் பாலாகு நீர்மோர் கூட்டு
காமப்பா சிறுகீரை முருங்கைப் பிஞ்சு
கனமான கத்திரியு மவரை போடு
பாமப்பா பசுப்பயறுந் துவரை கூட்டு
பாரமாம் கோழியொடு காடை கூட்டே

கூட்டவே மண்டலங்கால் கொண்டா யானால்
கூறுகெட்ட வாதமெல்லாங் குடிகெட்டோடும்
நீட்டுவாய் சூலைக்குத் தேனி லப்பா
நினைவாகச் சன்னிக்கு இஞ்சி நீரில்
மாட்டுவாய் சுரங்களுக்குப் பஞ்ச மூலம்
வளமான வநுபான மறிந்து போடு
நாட்டிலே வியாதியெல்லாந் தீரு மென்றே
நலமான போகரிஷி புகன்றிட் டாரே.

நவரசத் துவையல்

சூரத் தயிர்தை யயிர்தைவடு தூருட மயூர மோதநெல்லி
காரக் கதைபிர் தசைமடவார் கரத்துப் பலேயுப் பயிர்தையுப்பும்
ஆரக் கஃசொன் றரைகொளுஞ்சி யவக்தி யிருடிா தனம்புதியன்
காரத்தொ டிஞ்சி பழமாரை நற்சாற் றரைவாந் திசைதமே.

நவாச்சாரக் குழம்பு.

தானென்ற இன்னமொரு பேதி சொல்வேன்
தயவான சாரம்பல மொன்று வாங்கி
நானென்ற கொடிக்கள்ளிப் பாலில் நாட்டி
நன்றாகக் கல்வத்தில் மைபோ லாட்டி
தானென்ற சிமிழதனிற் பதனம் பண்ணித்
தப்பாமற் குன்றிபெடை தயவாய்க் கொண்டால்
ஊனென்ற மலக்கட்டு சலக்கட் டெல்லாம்
ஓடுமடா அதன்பிறகு பொறுக்கா தன்றே.

பொறுக்காதே மயக்கினதால் மைந்தா மைந்தா
பொக்கெனவே நிற்பதற்குப் புதுமை கேளு
மறக்காதே எலுமிச்சம் பழத்தைத் தின்றால்
மறிக்குமடா பேதியது வளமாம் பாரு
தருக்காத பெருவயிறு வாய்வு கட்டித்
தப்பாத மகோதரம்நீ ராம்ப லோடு
உருக்காதே யுருகிமல சலக்கட் டோடே
உள்வினைகள் தீருமடா வுண்மை தானே.

நாயுருவி உப்பாதிக் குழம்பு.

பாத்திட்ட லேகியந் தானொன்று கேளாய்
பண்பாய்நா யுருவியுப்பு வாழை யுப்பு
நீர்த்திட்ட தாழையுப்பு தெங்கி னுப்பு
நேரான பேதியொடு சத்திச் சாரம்
மார்த்திட்டு நின்றதொரு வீரம் பூரம்
மகத்தான நவாச்சாரம் பூநீ றோடு
காத்திட்ட விந்துப்பு வளைய லுப்பு
கருவான வெண்ணாவி சங்கு நீறே.

நீறுடனே வகைக்குமொரு பலமாய் வாங்கு
நிறைபான கந்தகமோ பலமோ வொன்று
பேறுடனே திரிகடுகு பலந்தா னொன்று
பேறான சாராயம் விட்ட ரைத்து
மாறுபட் டெருக்கம்பால் கள்ளிப் பாலு
மக்களே வகைக்குழக்காய் வார்த்த ரைத்துக்
கூறுடனே நெய்யுழக்குந் தேனு ழக்குங்
கூட்டியே கொதிக்கவைக்க மெழுகு மாமே.

மெழுகெடுத்துப் பரணிதனி லடைத்துக் கொண்டு
விலைக்குமொரு பணவெடைதாம் பிரசெந் தூரம்
ஒழுகெடுத்த லேகியந்தா னரைக்க முஞ்சு
முத்தமனே யிரண்டுமொன்றுப் ரேசித் தேதான்
அழுக்கெடுத்த சர்க்கரையிற் கொள்வா ராகில்
அட்டகுன்மம் வாயுவெல்லா மகன்று போகுந்
தொழுதெடுத்து மண்டலந்தா னரையிற் றீருஞ்
சுருக்கடா லேகியதாம் பிரமும் பாரே.

## நீலாஞ்சனமை

கருங்கல் கண்டொவ் வொன்றுதொடி
கனகச் சகலை துருக்கமலர்
பரும்படி கவ்வெளை பணிமீனும்
பகர்முறை நிட்கம தொன்றேசால்
வருமை யரைக்கா லஃதையரை
வளர்வில் வையிரு குரக்கத்தம்
தருவெண் சாரணை பெண்ணைமடல்
சாலைச் சேப்பூ வரையிரண்டே.
சாம மரைதனிக் காயவிடு
தன்னை யளிக்கோ டன்னிலரை
ஆடஃ தேகுழம் பாயினெடு
வதுகண் ணிடுகண் பூபடலம்
காம முத்துக் காசபிலம்
நன்றாய்த் தீருஞ் சின்னாளில்
நாமமஞ்சனக் கண்மையென
காட்டி னாரெம் முனிவ ரரே.

அஞ்சனக்கல் பலம் 1, சீனகற்கண்டு பலம் 1, பீதரோகணி வராகன் $1\frac{1}{4}$, குங்குமப்பூ வராகன் $\frac{5}{8}$, படிகபற்பம் வராகன் $\frac{5}{8}$, பச்சைக் கற்பூரம் வராகன் $2\frac{1}{2}$

அரைப்பு:—வில்வ இலைச்சாறு, முசுமுசுக்கைச்சாறு, வெள்ளை சாட்டறணைச்சாறு, பனைமட்டைச்சாறு, கரிசாலைச்சாறு, நந்திப்பூச் சாறு, வகைக்கு 2 சாமம் அரைத்து உலர்த்தி தேனில் அரைத்து மையாக்கவும். கண்ணிலிட பூ, படலம், முத்துக்காசம், பில்லம், போம்.

## பஞ்சசூத மெழுகு

ஆதியாம் வேதாந்தப் பொருளாய் நின்ற
அன்பான மஹேஸ்வரியைத் தொழுது போற்றி
சோதியாய் விளங்குகின்ற ஆயி பாதந்
துணையாகக் கருத்தில்வைத்துத் தன்ப ரிந்த

நீதியாய் நடக்குமந்தப் பெரியோர் பாத
நினைவதனில் மறவாமற் சுருக்க மாக
வாதியென்ற பேரெடுத்து வந்தோர்க் கெல்லாம்
வசமாமோ ரௌஷதத்தை வசனித் தேனே.

வசமான இங்குலிகம் வராகன் ரண்டு
வகையுடனே பூரமது வராகன் ரண்டு
இசையு மோர் வீரமது விராகன் ரண்டு
இதமான செந்தூரம் வராகன் ரண்டு
நிசமான சூதமது வராகன் ரண்டு
நினைவாக நிறுத்தொன்றாய்க் கரண்டி தன்னில்
நசையுடனே ரசமானச் செப்புநெருஞ் சிரசமு
நன்றான முருங்கைப்பூ ரசமுஞ் சேரே.

சேர்த்துநல் முலைப்பாலும் கூடக் கூட்டித்
திறமாக வொருசாமஞ் சுறுக்குத் தாக்கு
மார்க்கமாய்ச் சுண்டியபின் மெழுகு போலாம்
மைந்தனே வழித்தெடுத்துக் கல்வத் திட்டுத்
தீர்க்கமா யொருசாம மரைத்தா யானால்
செவ்வையாய் மெழுகுபோ லாகு மிதனை
வார்த்திகமாக் கொம்பினது சிமிளி னன்கு
மைந்தனே வழித்துவைத்துப் பதனம் பண்ணே.

பண்ணவே கணபதிக்கும் மஹேஸ்வ ரிக்கும்
பாங்காகப் பூசைசெய் தெடுத்துக் கொண்டு
என்னவோ வென்றுசொல்லி மயங்க வேண்டாம்
இதமான பஞ்சசூத மெழுகு தன்னை
உன்னதமாய்ச் சித்தரெல்லா மொளித்தா ருண்மை
பொருவாத விதன்பெருமை யென்ன சொல்வேன்
சந்நியென்ற பதின்மூன்று மிதன்பேர் சொல்லத்
தலைகாட்டா தோடுமடா வறிந்து பாரே.

அறிந்துபா ரனுபானஞ் சொல்லக் கேளு
மங்கையர்தம் முலைப்பாலில் கொடுத்தா யானால்
நெருங்கிவரும் சந்நிபதின் மூன்றுந் தீரும்
நிச்சயமாய்த் தோடமது வேழுந் தீரும்

சரியுங்கா லிசிவுமுதல் சாந்த மாகுஞ்
சகலசுரம் விட்டோடுந் தப்பா தெஞ்சம்
குறைபுகன்று சிஷனுப் வந்த பேர்க்குக்
கூறுவாய் மூடருக்குக் கூற லாமோ.

ஆகுநல்ல வச்சிரவல்லிக் கியாழந் தன்னி
லருந்திடவே குன்மமெட்டுந் தீர்ந்து போகும்
வேகமுள்ள சித்திரமூலக் கியாழந் தன்னில்
விதமாக பணவெடைதான் கொடுத்தா யானால்
சாருமே சூலைமுதல் முடக்கு வாயு
............ ......................................
....................................... ........
மெய்ச்சித்து மிளகுபொடி தன்னிற் கொள்ளே.

மெய்ச்சத்திந் தௌஷதத்தை யுண்ட பேர்க்கு
வேதனைக ளில்லைநில வுலகிற் றானே
கச்சிதமா யொருபுறத் தினிற்கும் வாயு
கனமான கால்கைகள் சச்சு வாயு
உச்சிதமாய் மார்நோயும் குண்டல வாயு
வொருபக்கஞ் சூலைமுத லொன்ப துந்தான்
அச்சமொடு பயந்தோடு முலகிற் றானே
யருளினர் வேதமுனி யன்பாய்க் கேளே.

கேளகலா வலியைந்துந் தீர்ந்து போகுங்
கெடியான நாசிகா பீட வாயு
வேளையென்று வெள்ளுள்ளித் தயிலந் தன்னில்
விதமாகப் பணவெடைதான் கொடுத்தா யானால்
கோளதுற பதர்சந்நி தொண்ணூற் றுறுங்
கொடியசந்நி புறவலிப்பு தோடந் தீரும்
நாளையிலே யனுபான மறிந்து செய்தால்
நாடாது வலிபிணிகள் நயந்து பாரே.

வான மெழுகு

விந்துவிந்துச்செந்தூரநாதமொடுவீரயானசிவகாமியும்
வெள்ளைசிங்கிடசத்திரம்பகருவீறுமாண்குறிபோடபின்
தொந்தமானமுருகன்புராணமொடுதூபதீபமரிசமன்னை
சுத்தியாகவிலைவபாருபாருபரிசுத்தமானகலுவத்திலே

சிந்தைகொண்டுபதினுமொன்றுபடச்சேர்த்தரைத்திடுதூளாதாய்
செப்ரத்திலிடுவாதமாமதனைச்சேருநாதகருத்தயிலமாய்
மூந்திபிட்டுமொருஜாமநாளுமரைமுற்றுமாமெழுகுளுந்ததாய்
மோசமில்லைபனைவெல்லமதனிலிடுவோர்க்குபத்தியமில்லையே
இல்லைஇல்லைகபவாதசந்நிசுரமெட்டுகாசமொடுகுட்டமும்
ஏறிநின்றவிரைவாதசூலைரணம்ஈளைதோஷஅட்டகுன்மமும்
சொல்லுகின்றவயிறுவலிகடுப்புநெடுஞ்சூதகத்தொடுமகோதரம்
சோகைமஞ்சள்காமாலைசத்திவயிறுகொல்லைபோக்கொடுபவுத்திரம்
கல்லடைப்புகுலைவலிகிரந்திபுரைகண்டமாலைசலதாரையில்
கண்டகிரிழிவுசுத்தலானமுகிற்காசரோகமுதலானதும்
எல்லைவிட்டெழுகடல்கடந்துஇனியென்னபாடுபடுமோவறிகிலேன்
இந்தவானமெழுகுண்டபேர்க்குஇனிபிணிவாராதுஇதுஉண்மையே.

விஷக்குழப்பு.

தீராத விடங்களெல்லாந் தீர்ப்ப தற்குத்
தெளிவாகக் கருங்குழப்புசெப்பக் கேளு
கோரான கருநாபி வெண்கார மிந்து
நிர்விஷமுங் கருஞ்சீ ரகமுங் கூட்டிச்
சீரான கந்திரச மனோசிலையும் வாளந்
திறமாகச் சுத்திசெய்து சாரமரை யாகப்
போரான குழிக்கல்லி லாட்டித் தூளாய்ப்
பின்னுமோர் வேலியிலைச் சாற்று லாட்டே.

ஆட்டுவாய் சாம மூன்று மதற்கப்பால் தேங்காய்ப் பாலுங்
கூட்டுவாய் கருப்புக் கட்டி கொட்டாங் கச்சியின் கரியும்
வாட்டமாய்த் தேங்காய்ப் பாலு மகிழவிட் டரைத்து நன்றாய்
மூட்டுவாய் விஷங்க ளெல்லா முசிவறக் குன்றி போலே.

(அமிர்தமெழுகு) வீரக்குழம்பு

செய்யடா சவ்வீரக் குழம்பு தன்னைத்
திறமாக வோர்சழுஞ்சு சிந்தி டாமல்
பையடா நறுக்கியபின் னுவின் வெண்ணெய்
படிகால் வாங்கிப் பண்பாய்க் கூட்டி

கையடா விருசாம மொன்று யாட்டி
கலமான பாணியிலே யடைத்து வைத்து
வையடா பிளவைமுதல் மார்பி லாணி
மகத்தான புண்பொடிக ளாறுந் தானே

ஆறுந்தா னிக்குழும்பி லெல்லாம் போகும்
அப்பனே பழங்காடி புளியிலை வெந்த
கூறுக வந்திசந்தி காடியாற் கழுவிக்
கூட்டுவாய் சீலைகொண்டே யந்நீர் மாற்றி
வேறுபடி யிளஞ்சீலை களிம்பை யூட்டி
விரைந்துநீ போடுபுண்க ளாறு மட்டுந்
தாறுமா றுப்புரையும் புண்ணு மாறித்
தழும்புகடுத் தளர்ந்துவிடுந் தன்மை பாரே

தன்மையாச் சொல்லிவிட்டோ மடக்கம் விட்டு
சாத்திரத்தை யொருவருக்குங் காட்ட வேண்டாம்
உண்மையாய்ப் பட்சத்தோர்க் குரைக்க நன்றும்
முத்தமியாள் தசதீட்சைக் குள்ளே சொக்கு
வண்மையாக் கபடற்ற பேர்க்கு மைந்தா
வகை பிரித்துக் காட்டினால் மகிமை யுண்டு
பண்மையா யிந்நூலைப் பார்த்த பேர்கள்
பண்டித சிரோமணியாம் பாரு பாரே.

---

# கலப்பு மருந்துகள்.

## அய்ஜப்பீரக் கற்பம்

ஆட்டுத்துகள்கறிதிரிபப்பத்தரையையெண்ணெண்ணருணக்
காட்டுக்கனியுள்வையைப்பூதத்தொருகலமுள்ளிடுதிலநெய்
கூட்டுத்தொகைமுற்கூறிருசில்லிடுகுழையிடுமண்டலமே
ஓட்டுப்பிளவொன்றிருபோதுணுபாண்டொடுசோபையுமறுமே.

## அயபிருங்கராஜ கற்பம்

கரும்பொ னயோமல மறைசாத் திரவெண் கழறுந் தொடிபொடிசெய்
கரிசா லைச்சுர தம்படி பெய்து கலக்கெனி லுலரவிடு

விரும்பு சாதாபல காசத் தவ்வண மிட்டுமுன் விதிபுரிமுன்
விடுசுர சம்பா லந்தஞ் சேரும் விண்டு தலைக்குழியுள்
கரும்பினில் வந்திடு வட்டெனுவிடுஅரி காணப் பொடிபணமே
கமழ்மதி துப்பு முருகு தனிக்குள் கையா டிருபொழுதும்
அரும்புதி வாவொரு பதுபது பதுபது ஆமிலம் விட்டுதிரத்
தழிவுமு மலகரை அசதிப தாமிவை அழுவிடு தலைவமரோ.

ஆக்ராணம்

போமப்பா வாக்ராணஞ் சொல்லக் கேளு
புகழான கண்டைவேர் தும்பை மூலம்
காமப்பா விளுப்பைபுண் ணுக்கும் சுட்டு
நலமாக முன்னிரண்டும் ரவியு லர்த்தி
சேமப்பா பொடிசெய்து வடிகொண் டேதான்
திறமான குழலடைத்தாக் கிரானஞ் செய்யத்
தாமப்பா தலையிலுள்ள தோஷ மெல்லாம்
சன்னுண்டு போகுமடா வின்னங் கேளே.

குங்கில்ய வெண்ணெய்

அருந்தும் வெள்ளை கண்டவர்க்கு மருந்து கேளு
ஆனவெள்ளைக் குங்கிலியம் பலந்தா னஞ்சு
திருந்தவே பொடியாக்கி வைத்துக் கொண்டு
திறமான பெண்ணெய் சட்டி யடுப்பிலேற்றி
பொருந்துநல் லெண்ணெய்யுழக் கதிலே விட்டு
புகையாமற் கொதித்துவரிற் பொடியைத் தூவி
வருந்தியே கிண்டிடவே பாகு சேரில்
மறு சட்டிக் குள்ளாழி தண்ணீர்வையே.
வையவே தண்ணிதனிற் பாகை யூற்றி
மைந்தனே பிசைந்திடுவாய் மைபோல் நன்றாய்
பையவே திரட்டியதை யெடுத்துக் கொண்டு
பதமான இளநீரிற் போட்டா யானால்
தப்பவே கையினாற் பிசையும் போது
தூய்மையுள்ள வெண்ணெயாய்த் துலங்கு நன்றாய்
மெய்யாக வெண்ணெய்தனை யெடுத்து வைத்து
விதமான ஏலரிசி பொடித்துப் போடே.

போட்டுநீ யொன்றாக யோசித் தப்பா
பொருந்தவே புன்னைக்கா யளவு கொண்டால்
வாட்ட மில்லா மேகவெள்ளை நீர்கடுப்பு
மகத்தான வுட்காங்கை வயிற்றெ ரிச்சல்
மூட்டியதோர் முகவெரிவு கைகால் காந்தல்
முறிந்தோடு மிந்தமுறை முயற்சி செய்தால்

* * * *

## குன்றி பத்து

தீர்த்திடவாயுபிடிப்புடனே தீரவுநானோர்பற்றுசொல்வேன்
பார்த்திடச்சூதம்வராகன்ரண்டு பண்பானவங்கப்பொடியிரண்டு
கார்த்திடரத்தபாளமுடன் கண்டுபாரங்குன்றிவித்து
சார்த்திடச்சஞ்சீவியாளிவிதை சண்டாளமூதேவிளட்டிவித்தே
வித்தேஅண்டவெண்கருவை விட்டரைசாமமாட்டினபின் [போட்டு
சற்றேநல்லெண்ணெய்கொஞ்சம்விட்டுச் சடாட்சரகாயம்வராகன்
மத்தைக்கொண்டேயரைப்பரைத்து மைந்தாவினைமேல்பூசிடவே
கத்தேகதறிபோடிவிடும் கர்மவினையுடன்ஊழ்வினையே
கர்மப்பிடிப்புவீக்கமுடன் கன்னியர்கர்ப்பக்கால்வீக்கம்
தர்மக்குடைச்சலிடுப்புளைப்பு தண்ணீர்தேங்கினமேகவாயு
மர்மமரையினுப்புடனே மகிழ்ந்தநரம்புத்தொடைவாழை
வர்மம்வம்புசூந்யமும் வாராதென்றேயுரைத்தோமே

## சங்க திராவகம்

வெடிமதி கூர்மை சாரம் விதமன பேதி நீலி
படிகிபூ நாத நீறு பல்பொரி கார மீதோ
டதுதிரி யுபய மேக மையரை கால தோர்கால்
பதமரை கால்மூ வேக மரைபொடி படுவ தாக
அடைகட மரைய தாக வதில்வளை கடமு மேல்வை
இடைவழி பந்தி திராவ மிவை வருமே பொலாறு
தரையினில் நீர்கள் சேருந் தனியினி லோக தாது
உரமது நீற தாகு முபாச நீற தாகும்
மார்வலி வாயு குன்ம வலியறு மேக சங்க
நீரினி லனேக மேகு மாதவ னோது மாறே.

### படை சங்காரன்

.............................................

....................................

"சாவதில்லை யிலைக்கெல்லாம் படர்தா மரைக்குச்
சாதகமா யைங்கோல வேரின் பட்டை
காவதிக மருக்காரை வேரின் வித்து
கழஞ்சிரண்டு பழச்சாற்றிற் கரைய ஆட்டே.

ஆட்டியே பாக்களவாய் மூன்றுங் கூட்டி
அப்பனே யுள்ளுக்கு மேலும் பூசு
வாட்டியே யுதிர்ந்துவிடு மின்ன மொன்று
வளரெருக்கு வேர்ப்பட்டை கம்பின் பட்டை
காட்டியதோர் தகரைவிதை சேரக் கூட்டி
காழிப்பால் தன்னிலிட்டுக் காய்ச்சி யாற்றித்
தாட்டியே பரைத்தருந்த மேலும் பூசத்
தனித்தனியே திருமடா சாற்றக் கேளே.

### பாகக் கடுக்காய்

கடுசதங்கழுவுபிற்புனற்குளிடு கரிமதப்பகல்கழித்தறற்
கக்கவைத்திவணமுத்தரஞ்செபிரு கண்டமாக்குவிட
[நீக்குபின்
விடுதரும்படிக டைந்தமோரையதில் வேலையுப்பிடு முனேதுகாய்
விறுநாலிலொருகூறடுப்பினில்வை மெல்லவேயெரி
[வரண்டபின்
படைபடுஞ்சபிமோதமுமரைப் பலமுதற்செவியம்வனிகளை
பாலெலாம்பொடிசெய்துவுதுவசெம் பழரசம்பெய்பெய்
[குலுக்கறல்
எடுபின்வந்தானிஞ்சிநீர்பெய்யதை யெவி லுலர்த்தசன
[முன்பினுண்
இருமல்மந்தமுதாத்துனோய்வமன மில்லைபத்தியமு
[மில்லையே

கூறுபா கக்க டுக்காய் கொள்ளில்மண் டலத்தில் சூலை
ஏறுகால் குன்மம் மூலம் இரைப்பு அரோ சகம்பிளிகம்

நாறுபீ நசம்வி ரேசி நாத்திவே டம்பற் பாண்டு
சீறுமா மலக பித்தம் செம்புனற் பித்தம் போமே.

### மாதுளை மணப்பாகு

கற்கண்டும் பன்னீர் கனிமா துளைரசமும்
நற்றேனுங் கூட்டியே நாட்டுவாய்—சொற்பமல்ல
பாண்டு வெளுத்தலொடு பாதங் கரமெரிதல்
மாண்டுபோ மென்றார் மகிழ்.

### வெடியுப்புத் திராவகம்

பொட்டலையும் பலமாறு இந்துப்பு மூன்று
புகலரிய சாரம்ரெண்டு பேதி ஒன்று
கட்டளையாய்ப் படிகாரம் பதினைந் தாகும்
கருதுமொரு பூநீறு பொரியு மொன்று
திட்டமுட னிடிகடத்தி லரையு மிட்டுச்
சீர்பெறவே வாலையிட்டு அடுப்பி லேற்றிச்
சட்டமுட னெரித்திடவே புகைநீ ராகும்
சரியான பாகமிது சார்ந்து பாரே.

திரிகடுகு வகைக்கொன்று தூக்கு மிட்டு
திட்டமாய்க் கல்லுரலி லிடித்து நப்ப
வரிசையுடன் பொட்டலையின் திராவ கத்தை
வண்மைபெற விரட்டிப்பா யிட்டு மூன்று
டரிசைபெற நாள்வைத்துக் கலையத் திட்டு
உகந்ததொரு வாலையிட்டு நீரை வாங்க
பரிசைபெற யிறக்கியே சீசா தன்னில்
பரிவுடனே தானடைக்கச் சொன்னார் பாரே.

அடுத்துநின்ற திரிகடுகு பொடித்து நன்றாய்
அதைச்சேர்த்து யிட்டுமெள்ள உண்ணச் சொல்லு
தொடுத்து நின்ற குன்மமெல்லாங் கடலே புக்கும்
துடியான மகோதரத்துக் கொருசொட் டிட்டுப்
படுத்துவருங் கதிரோனைக் கண்டு நீங்கும்
பனியதுதான் விலகுமது போலே யாகும்
உடுத்துநின்ற வாயுவெல்லாங் கதறி யோடும்
உற்றதொரு யாகோபு உரைத்த வாறே

வெள்ளை மெழுகு

..............................................................

வேகுமே வரையாப்புத் தீர வென்றால்
வெள்ளைப்பா டாணமதை மெழுகி லூட்டி
ஏகமே வில்லைதட்டி வெதுப்பிக் கட்ட
விருந்தவிடந் தெரியாம லேகும் பாரே.

ஆடாதோடை நெய்

கேட்டிடவே காட்பட்ட சுரத்துக் கெல்லாம்
இருதமாடா தோடைவேர் கீழ்வாய் நெல்லி
வேட்டிடவுங் காட்டுமல்லி வேளை குப்பை
வேலிப் பருத்தியொடு குப்பை மேனி
காட்டில் வளர் வழுதலைவேர் நத்தைச் சூரி
நலமான மருட்கிழங்கு அப்பை மூலம்
ஊட்டுவாய் வசம்புள்ளி கத்தூரி மஞ்சள்
உற்பனஞ்சேர் நல்லபாம்பு கண்டங் தானே.

கண்டமொடு வராகனங்கே மூன்று தூக்கிக்
கல்லிலாட்டி நாழிநெய்யிற் கலந்து கொண்டு
கண்டமெனு நல்லெண்ணெ யோரண் டெண்ணெய்
கலந்திடுவாய் வகையிரண்டு படிதா னென்று
கண்டிதமா யிவையெல்லாங் காயும் போது
கருங்குங்கி லியம்ரண்டு காசு தூக்கி
கண்டிதமாய் நிம்பழச்சா றூற்றக் கேளு
கனிந்தபழ மஞ்சங்கே பிழிந்தே யூட்டே

ஊட்டியே வடித்தப்பா வைத்துக் கொண்டு
உள்ளுக்குக் காசெடைதான் உண்ணச் சொல்லு
காட்டியே மேலுக்குந் தவாலை போடு
காட்பட்ட சுரந்தணியு மின்ன மொன்று

* * * *

தூதுளை நெய்.

அற்றுப்போம் தூதுவளைக் கிருதங் கேளும்
அப்பனே தூதுவளை பெடைதா னென்று

கற்றுப்போ னன்முள்ளி கண்டங் கத்திரி
　　கருவான காஞ்சோரி யாடா தோலை
சற்றுப்போம் மிளகுகிப் பிலிக டுக்காய்
　　சதிரான திராலபையும் வகையொன் றாக்கு
நற்றுப்போம் பலநாலு கொண்டி டித்து
　　நலமாக விருதுணி நீரி லூட்டே.

ஊட்டியே சோடசத் தொன்றாக் காய்ச்சி
　　உத்தமனே வடித்துவொரு பாண்டத் தூற்றி
நாட்டியே யாவின்நெய் படிதான் ரண்டு
　　நலமான வாவின்பால் படிதான் ரண்டு
காட்டியே திரிகடுகு திரிப லாதி
　　கருவான தாளிசங் கோஷ்ட மக்கிரா
வாட்டியே வாய்விளங்கஞ் சீரகமு மோமம்
　　வால்மிளகோ டரத்தைரண்டு மேலங் தானே.

ஏலமொடு கிராம்புசா திக்காய் பத்திரி
　　எடுத்திடுவாய் வகையொன்று கழஞ்சு மூன்று
ஆலமொடு மாவின்பால் கிட்டே யாட்டி
　　அப்பனே நெய்தனிலே கரைத்து விட்டு
ஞாலமொடு மெழுகுபத மாகு நேரம்
　　நலமாக வடிகொண்டு கரண்டி வீதம்
காலமே மண்டலந்தான் கொண்டா யாகில்
　　கருவான சயமெட்டுங் காணா தன்றே.

காணாத வீளையோ டிருமல்காசம்
　　கலங்காதே சேத்துமநோய் தொண்ணூற் றாறும்
நாணுமே மேகமெல்லா நாடா தோடும்
　　நலமான வுட்டணநோ யெல்லாந் தீரும்
ஆணுமே யீளையிரைப் பற்றுப் போகும்
　　அப்பனே வாயுவென்ற தெல்லாந் தீரும்
தோணுமே குண்டலமாம் வாய்வு தீரும்
　　குறிப்பாக வின்னமொரு சேதி கேளே.

புளியாரை நெய்

கேளடா புளியாரைச் சாறுபடி யொன்று
இருபையுள்ள வன்னிச்சாறு படிதா னொன்று
நாளடா காணிச்சாறு படிதான் ரண்டு
நலமான செவ்விளநீர் படிதான் ரண்டு
தானடா வாவினெய் சேர்தா னஞ்சு
தளமான கருவாவின் பால்சே ரஞ்சு
ஆளடா சீரகமு மாசிக் காயும்
அப்பனே மதுரமொடு கழஞ்சு நாலே.

நாலப்பா வாவின்பால் விட்டே யாட்டி
நலமாக நெய்சாற்றிற் கரைத்து விட்டு
வேலப்பா வடுப்பேற்றி மெழுக தானால்
விருதாக வடித்துமே பொடிதான் கேளு
காலப்பா பத்திரியு மேலம் ரண்டு
கருவாகக் கழஞ்சிரண்டு பொடித்துத் தூவி
ஆலப்பா கற்கண்டு பலந்தா னொன்று
அப்பனே பொடித்திட்டு காண்டிநிறை யாமே.

ஆமப்பா விருகோ மண்ட லங்கொள்
அப்பனே பித்தவெட்டை பித்த வாய்வு
தாமப்பா வெரிச்சலொடு நீர்ச் சுருக்குத்
தளமான மயக்கமெல்லாந் தவறிப் போகும்
நாமப்பா வாயூற லரோச கங்கள்
நாடாது பித்தமெல்லா நடுங்கி யோடும்
போமப்பா வாந்திமுதல் சரீர மூறும்
புதிதாக வின்னமொரு கிருதங் கேளே.

வல்லாரை நெய்.

தானந் தனித்தவ னுண்டி—நல்ல
தபவாகத் தனயர்க்குப் பிணிதீர நாடி
ஆனந்தக் களிப்பையே பாடி—பெற்ற
அன்னை பிதாவுக் கறைகிறேன் கோடி.
சித்திர மான புதுமை—நல்ல

சீரான வல்லாரை நெய்யிதின் தருமை
நத்தின பேருக்குரிமை—அந்த
நாதாக்களாறிர்கா ளிதனது பெருமை
பத்திரமாம் பச்சை மூலி—நல்ல
பாங்கான வல்லாரை பலநூறு சாலில்
வைத்திடு நீரொட்டுப் படியாய்—இதை
வகையாக விட்டெரி எட்டொன்ற தாகச்
சுத்தாவின் நெய்யொன்று விட்டு—இதில்
சூட்டவே கடைச்சரக் கவைகளை மூட்டு
வித்தான சுக்கது நீட்டு—நல்ல
விதமான ஏலம் கலக்கொம்பு மாட்டு
சத்தான சாதிக்காய் நீட்டு—நல்ல
சாதக மானதோர் தாளிசம் கூட்டு
எத்தான பத்திரி போட்டு—நல்ல
இதமான கோட்டம் விலாம்வெட்டி நாட்டு
சிங்கார மான நற்சீரம்—நல்ல
சீரான தான்றிதக் கோலம்பொன் னூரம்
வெங்காரம் வில்லை யக்காரம்—நல்ல
நலமான மல்லியும் ரோகணி சேரும்
இத்தனை யான சரக்கும்—இதில்
ஏற்றக்கு றைச்ச லில்லாம லெவர்க்கும்
கத்தனைப் போற்றி நினைக்கும்—வகைக்
கண்டு வராக னெடையது தூக்கும்
அத்தனை யும்படி ஆவின்—பாலி
லாட்டியே அம்மியி லரைத்திடு வீரே
வற்றின வல்லாரை நீர்க்குள்—வகை
யாகவே சேர்த்த சரக்கைக் கரைத்துக்
கண்டித்துப் பாண்டத்தி லூற்றிச்—சொன்ன
கருதாவி னெய்யதை ஒருபடி யூற்றி
விண்டித்து நீயன லேற்றி—நல்ல
விதமாக மொண்டதை திரள்பதந் தூற்றிக்
கிண்டித்துத் தான்பதம் பார்த்து—நல்ல



கெடியான பீங்கானில் துடியாக வடித்துச்
சண்டித்த நோய்களுக் கேற்றி—இந்தச்
சதுரான வல்லாரை நெய்தினங் குடித்து
இட்டிடும் வல்லாரை நெய்க்கு—விட்டே
ஏகும் வியாதிலை இதமுடன் சொல்வேன்
மட்டுப் படாத்தொக்த மாந்தம்—இன்னம்
மாறுட்ட மாய்வந்த வல்லப் போர்மாந்தம்
கட்டுக் கடங்காத மேகம்—பொல்லாக்
காசரோகமென்ற வருவிட நோயும்
முற்றின ஈளை பிரைப்பு—காந்தும்
மூல கணங்களும் உட்சுர மேலும்
கத்திடுஞ் சர்த்தி இருமல்—கொடுங்
காசம் போலே கக்குஞ் சுவாச சுரமும்
பற்றிடும் நோயென்ற தெல்லாம்—நல்ல
பாங்காக வோண்டு கோ மருந்தே

## வெண்பூசனிக் கிருதம்

ஆறுமே கூழ்ப்பாண்ட கிருதங் கேளாய்
அறைகுவேன் பூசினிக்காய்ச் சாறி ரண்டு
நாறுமே தாழைவிட விழுதின் சாறு
நன்றாகப் படிபொன்று தென்னம் பூநீர்
காருமே படிபொன்று கூட விட்டுக்
கலங்காதே குமரிநீர் படிதா னொன்று
காறுமே செவ்விளநீர் படிதா னொன்று
கனமான வாவிநெய் படிதான் ரண்டே.

ரண்டான கற்கவகை சொல்லக் கேளாய்
நிலைபான சாதிக்காய் சாதிப் பத்திரி
பண்டான மாசக்காய் திரிப லாதி
பாங்கான சிரகமு மேலம்வால் மிளகு
குன்றான காட்டாத்தி கர்கட சிங்கி
கூறான மல்லி குரோசாணி போமம்
நன்றாகக் கழஞ்சு நிறை மூன்றதாக
நலமான வாவின்பால் விட்டிட் டாட்டே.

# ஒழிபியல்.

## மாத்திரை.

### குஷ்ட கஜ கேசரி.

அப்ரகபற்பம், காந்தச்செந்தூரம், அயச்செந்தூரம், இரச பற்பம், இந்நான்கிலும் சம எடை எடுத்து சவுரிப்பழச் சாற்றில் அரைத்துப் பயறளவு மாத்திரை செய்து சர்க்கரை, தேன் முதலிய அநுபானங்களில் தக்க அளவு கொடுக்க குஷ்டம், மேகம், முதலிய துர்ப்பிணிகள் நீங்கும்.

### வாலை சிந்தாமணி.

இரசம், கந்தகம், இலிங்கம், வெங்காரம், சுக்கு, திப்பிலி, சாதிக்காய், மிளகு, சாதிபத்திரி இவைகளை-வகைக்கு ஒரு விராக னெடை எடுத்து, பழச்சாற்றா லரைத்துப் பயறளவு மாத்திரை செய்து 1 அல்லது 2 மாத்திரை தேன் அல்லது இஞ்சிச் சாற்றி லீய சுரம் நீங்கும்.

## பற்பம்.

### கந்தக பற்பம்.

சுத்திசெய்த கந்தகம் ஐந்து பலத்திற்குத் தினமொன்றுக்கு ஐந்துபலம் வெள்ளை வெங்காயச்சாறு விட்டரைக்க; மீண்டும் இவ்வாறு பதினைந்து நாள் அரைக்க. பிறகு, இஞ்சிச்சாறு நாள் ஒன்றுக்கு ஐந்து பலமாக விட்டு 15 நாள் அரைக்கத் தினமும் புதிது புதிதாகச் சாற்றை விடுக. பிறகு பில்லை செய்து நன்றாக உலர்த்தி மருதம்பட்டைச் சாம்பல் அல்லது புளியம்புறணிச் சாம்பலை ஒரு சட்டியில் அரைப் படி கொட்டி அதன்மீது வில்லையை வைத்து, மேலும் அரைப்படி சாம்பலைக் கொட்டி 12 மணி நேரம் தீபாக்கினி, கமலாக்கினியாக எரித்தெடுக்க பற்பமாகும். இதனால், மேகம், குட்டம், சொறி, சிரங்கு சர்மத்திமிர் முதலிய பிணிகள் நீங்கும்.

## சண்டரச பற்பம்.

இரசத்தை வேண்டிய அளவு எடுத்து வெடியுப்புத் திராவகத்தால் அரைத்து பில்லைதட்டிக் காயவைத்து மூன்று பங்கு உப்பும் ஒரு பங்கு செங்கல்தூளும் கலந்ததில் பாதியை ஒரு சட்டியில் கொட்டி அதற்குமேல் பில்லையை வைத்து மேல் சட்டி மூடி சீலை செய்து, முத்தீயாக 12 மணி நேரம் எரிக்க. ஆறினபின் மேல்சட்டியில் படிந்துள்ள பதங்கத்தை எடுத்து மேற்படி திராவகத்தை விட்டு முன்போல அரைத்து பில்லைசெய்து எரிக்க. இப்படியே பதங்கிக்காமல் அடியில் தங்குமட்டும் எரிக்க. இதுவே சண்டரசபற்பம். கால் முதல் அரை அரிசி அளவு வரை தக்க அனுபானத்தில் கொடுக்க மேகம், மேகவிரணம், குன்மம், சூலை, குட்டம், கபநோய்கள், சந்நிபாத சுரங்கள், வாதரோகங்கள் தீரும். அநுபானமறிந்து அநேக நோய்களுக்குங் கொடுக்கலாம். கடும் பத்தியம் வைக்கவும்.

## சூதபற்பம்.

பார்புக ழினியொரு சேரெடு சுத்திசெய்
நீரழ லுப்பொடு செங்கலி லிட்டதை
மேலிடு கடமெரி சுடுதழல் தனிலெடு
சாலிடு நீறினை யேசரி நிறையே
எடுவிடு சங்கநீ ரிதிலரை ரவியில்வை
கடுமதி நிறமது காசரை யிருகால்
நீர்தணி லிடுநா ளேழதில் வெகுரணம்
வேர்கெடும் ரணசூ லைகள்வெடி சூலைகள்
திண்படு வரிகிரந் திகள்பல வகைசேர்
புண்படு ரணவிப் புருதிகள் பிளவைகள்
வாதம் படுவ னருமரை யாப்பு
மதமிரண மேக முதிர
வாயுவுக ணெஞ்சடை வலிரணம் வயிற்றுநோய்
தேயுந் துடைரணம் சிராவண முதலாம்
ரணமதில் வருமறு நூற்றுக் கும்வெகு
குணமிகு பாத ரசமதை யுள்ளிடக்
களிகடு கருவேல் கருநெலி நாவல்

வளிதீ யெரிநீர் வைத்திடு கொப்புளி
வாய்வேக மதுவிடும் வைத்திடு வறுகும்
காய்நீர் மிளகுட னிட்டிடு வெண்ணெயை
அதிலிடு குடிரச வீறது அடிபடும்
அதிகுண பாத ரசபற்ப மதற்கே.

## நவநீத பற்பம்.

ஐய விபூதிய விரிகிலு கிலுப்பை
யைய விபூதி யறமிரட்டி—யையவி
யேக மட்டமீன மிரட்டை துலாந்தனுவோ
யேக மட்டமீன வனியில்.

(1) நீலி இலைச்சாறு, (2) வட்டக்கிலுகிலுப்பைச்சாறு, (3) சீந்திலிலைச்சாறு, (4) குப்பைமேனிச்சாறு. இவ் ஒவ்வொரு சாற்றிலும் முறையே எட்டெட்டு நாளரைத்து எட்டெட்டு நாளுலர்த்தி எட்டு வரட்டியில் தனித்தனி புடமிட்டெடுக்கப் பற்பமாம்.

அளவு:—ஒன்று முதல் எட்டு கடுகு.

வாதமேகத்திற்கு-தேனிலும், பித்தமேகத்திற்கு-பனித் தண்ணீரிலும், சேத்தும மேகத்திற்கு-சருக்கரையிலும், வாதசுரத்திற்கு-குளிர்ந்த நீரிலும், பித்தசுரத்திற்கு-கள்ளிலும், சேத்தும சுரத்திற்கு-சீந்திலிலைச் சாற்றிலும், வாத-பித்த-கபவல்லைகளுக்கு முறையே வெந்நீர், தயிர், கோரைச்சாற்றிலும், வாத-பித்த-கப குன்மங்களுக்கு முறையே விளாம்பட்டைச்சாறு, தேங்காய்ப் பால், முலைப்பாலிலும், வாத-பித்த-கப மூலங்களுக்கு முறையே வெங்காயச் சாறு, கற்றாழைச்சாறு, கஞ்சாச் சாற்றிலும் கொடுக்க நிவாரணமாகும்.

---

## செந்தூரம்.

### அப்பிரகச் செந்தூரம்.

வரிசையாய்ச் சொல்லுகிறேன் அப்பிரகந்தன்னை
மைந்தனே பொடிப்பொடியாய்ப் பொடித்துக்கொண்டு
துரிசமதா யந்தெடைக்குப் பனைவெல்லந்தான்
சுகமாக வெடியுப்பு மொன்றாய்க்கூட்டிப்

பரிசமுடன் சுத்தகங்கை தன்னாலாட்டிப்
பாலகனே பில்லைதட்டி ஓட்டிலிட்டுப்
பிரியமுடன் மேல்மூடிச் சீலைசெய்துப்
பிலமாக்கிக் கெசபுடத்திற் போட்டுப்பாரே.

போட்டுமே ஆறினபின் எடுத்துப்பாரே
புண்ணியனே தளுக்கற்றுப் பற்பம்போலாம்
தாட்டிகமாய்க் கல்வத்தி லிட்டுக்கொண்டு
தானரைப்பா யொருசாமம் எருக்கம்பாலால்
மாட்டியமாய்க் கல்லோடி ரவியிற்போட்டு
மற்றைநாள் அப்பாலால் சாமமாட்டு
நாட்டுமே கல்லோடே வெயிலிற்போட்டு
நலமாக அவ்விதம் நாற்பதுநாள்போடே.

நாள்கேளு நாற்பதிலே வில்லைதட்டி
நன்மையுடன் காயவைத்து ஓட்டிலிட்டு
வேள்போன்ற மேலோடு பொருந்தமூடி
மேன்மையுடன் எழுசீலை மண்ணுஞ்செய்து
தாளான தாளிறைஞ்சிக் கெசபுடத்தில்
தயவாக ஆறினபின் எடுத்துப்பாரு
வாள்போன்ற அப்பிரகஞ் சிவந்துகாணும்
மைந்தனே கல்வத்தில் அரைத்திடாயே.

அரைத்திடுவாய் பொற்றலையின் கையான்சாற்றில்
அப்பனே நாற்சாம மரைத்துவில்லை
திறத்துடனே தானுலர்த்திக் கெசபுடத்திற்போடு
தீர்க்கமுட னிவ்விதமா யரைத்தரைத்து
உரத்துடனே ஐந்துபத்து ஒன்றும்போட
உத்தமனே அருணனைப்போல் சிவந்துகாணும்
நிறைத்துமதைப் பொடிசெய்து குப்பிதன்னில்
நீபதனம் பண்ணிவிடு அநுபானங்கேள்.

கேளடா ஆவாரைப் பஞ்சாங்கந்தான்
கிருபையுடன் பலமெட்டு அசுவகந்தி
நாளடா அவ்விதஞ் சீரகந்தான்
நன்மையுடன் பலமிரண்டு சூரணித்துத்

தாளடா வெருகடியிற் குன்றிவிதம்
　　தருவான பசுவெண்ணெய் தன்னிலுண்ண
வேளடா விருவேளை மண்டலந்தான்
　　விதமாகக் கொண்டுவிட வியாதிகேளே.

கேளேநீ மேகமென்று லிருபத்தொன்றும்
　　கெடியாகத் தீருமடா பத்தியமோவில்லை
கோளேநீ ரிழிவுமது மேகந்தீரும்
　　கோடான கற்பமிதுக் கொவ்வாதப்பா
வாளேநீ சிந்தூரஞ் சகலருக்கும்
　　வாயாது யார்படுவா ரிந்தப்பாடு
வேளோனே வென்றசித்தர் செய்யுமார்க்கம்
　　வெளியாகச் சொன்னதிந்தப் பூரணந்தான்பாரே.

## ஆறுமுகச் செந்தூரம்.

சீர்பெருகு மாறுமுகச் செந்தூர மானதை
　　செப்புதற் கெளிதா குமோ
　செகமகிழு ரசமைந்து பலமுடன் காந்தமேழ்
　　செவிவிந்த சொன்ப துடனே
பார்பெருகு வெண்கார மோஎட்டு மதியுப்பு
　　பாங்கான நாலு பலமும்
　பட்சமோ டரப்பொடிக ளுச்சிதம தாகவே
　　பன்னிரண் டாக வதனை
தார்பெருகு கற்றாழை பால்விட் டரைத்துபின்
　　தாளிதனில் வைத்து மூடி
　சங்கையுடன் ஏழ்சீலை மண்செய் தெரித்துவிடு
　　சாமமோர் எட்டி னளவே
பேர்பெருகு செந்தூர மாதுளம் பூநிறம்
　　பெற்றது மெடுத்து வைத்து
　பேசரிய திரிகடுகி லோர்பண வெடைகொண்டு
　　பிரியமாய்த் தேன்கு ழைத்தே

அருளவே கோடான கோடிவினை யோடிடும்
　　அரைவாதம் விதைவா தமும்

ஆறுவகைமூலமும் மீறிளரி குன்மமும்
அகத்துற வறட்சி யனலும்
மருளான வெடிசூலை மற்றுமுள மார்ச்சூலை
மங்கையர்கள் கர்ப ரோகம்
மகாபாண்டு சோகையும் மாசுறு கிரந்தியும்
வாட்டுங் குடல்வா தமும்
மருள்வாத பித்தமுடன் கயரோக மரையாப்பு
மதமீது மதிசா ரமும்
மண்டைபிடி தொண்டைவலி கண்டமா மாலையும்
வறட்சூலை சூலை யுடனே
அரிதான பெரியோர்க ளநுபோக மிதுவாகும்
அதனு லிதனை யோதினேன்
ஆழ்ந்திது நுட்பமறில் சூழ்ந்தபிணி சங்காரி
ஆறுமுகச் செந்தூரமே.

## அன்னபேதிச் செந்தூரம் I.

வேண்டிய அளவு சுத்திசெய்த அன்னபேதியைக் காடிநீரிலரைத்து வில்லைசெய்து இரண்டல்லது மூன்று புடமிடச் செந்தூரமாம். இதில் அரை முதல் ஒரு குன்றியளவு தக்க அநுபானத்தில் கொடுக்க சுரம், சீதபேதி, பாண்டு தீரும்.

## அன்னபேதிச் செந்தூரம் II.

சுத்தித்த அன்னபேதி 1 பங்கு, சுத்தித்த வெடியுப்பு $\frac{1}{4}$ பங்கு இவ்விரண்டையும் எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து இரண்டல்லது மூன்று புடமிடச் செந்தூரமாம். இதில் மேற்கண்ட அளவாக தக்க அநுபானத்திலீய சோகை, பாண்டு, காமாலை முதலியன நீங்கும்.

## இலிங்கச் செந்தூரம் I.

சுத்திசெய்த இலிங்கம் ஒரு பலத்துக்கு 1 படி ஆற்றுத் தும்மட்டிச் சமூலச்சாறு சுருக்குக் கொடுத்து, சுத்த நீரால் கழுவி, பொடித்துகொண்டு அரிசிப் பிரமாணம் தேனிலீய குளிர்சுரம் முதல் எல்லாச் சுரங்களும் வாதகப தொடர்பான நோய்களும் மேக நோய்களும் போம்.

## இலிங்கச் செந்தூரம் II.

ஒரு பலம் சுத்திசெய்த இலிங்கத்திற்கு, சாம்பிராணி பலம் ஒன்று, கர்ப்பூரம் பலம் ஒன்று சேர்த்தரைத்து நீலத்துணியில் தடவிக் கவசித்து கொளுத்திவிடவும். இவ்வாறாக ஐந்து முதல் ஏழு முறை செய்தபின் இதைச் சுத்தமாய்க் கழுவியுலர்த்தி நுணுப்பட்டையை பஞ்சுபோலிடித்து ஒரு சிறு குடுவையில் பாதி யிட்டு அதன்மீது இலிங்கத்தை வைத்து, மற்றப் பாதி பாகத்தை யும் நுணுப்பட்டைத் தூளால் அடைத்துச் சில்லிட்டு சீலைசெய்து ஐந்து வரட்டியில் புடமிட்டெடுத்து அரைத்துப் புட்டியில் அடக் கஞ்செய்க. மேற்கண்ட ரோகங்களும் சுரம் சந்நிபாத நோய்க ளும் விலகும். அநுபானம் கணித்துக்கொள்க.

## உப்புச் செந்தூரம் 2.

சுத்திசெய்த சோற்றுப்பு 5 பலத்திற்கு ¼ படி ஆகாயத் தாமரைச் சாறுவிட்டு அரைத்து சிறு வில்லைகள் செய்து இரவி யுலர்த்தி சீலைசெய்து 10 வரட்டியில் புடமிட. இவ்வாறு மீண்டும் 9 புடமிட உயர்தரச் செந்தூரமாகும். ஒவ்வொரு புடத்துக்கும் வரட்டியின் அளவை ஏற்றிக்கொண்டேபோய் 20 வரட்டி யானவுடன் நிறுத்திவிடவேண்டும். 1 முதல் 2 அரிசி யெடை இச் செந்தூரத்தைத் தக்க அநுபானங்களில் கொடுக்க சகலவித அசீரணமும் குன்மமும் சூராவளிக்குமுன் எதிர்ப்பட்ட பட்சி யைப்போலாம்.

## காடிகாரச் செந்தூரம்.

1. இலிங்கம் பலம் ஒன்று, 2. இரசச்செந்தூரம் பலம் ஒன்று. இவ்விரண்டையுந் தனித்தனிப் பொடிக்க. 3. காடிகாரம் பலம் ஒன்று-இதையும் தனியாகப் பொடிக்க.

ஒரு கல்கார்க்கு புட்டியில் முதலில் இரசச் செந்தூரத்தூளில் பாதி பாகம் போட்டு, அதன்மீது இலிங்கத்தூளில் பாதி போட்டு அதன்மீது காடிகாரத்தூள் முற்றுங்கொட்டி பிறகு மிகுதியா யுள்ள இலிங்கத்தூளையும் அதன்மீது இரசச் செந்தூரத்தையுங் கொட்டி காற்று நுழையாவண்ணம் மூடியிட்டு, தோல் பட்டை யினால் புட்டி தெரியாமல் சுற்றி வரைந்து கட்டி, வேகவைத்துக்

கொட்டின நெற்குவியல் மத்தியில் புதைக்க. சூடாறியபின் கல் வத்திட்டு அரைத்தெடுக்க.

அளவு—½ முதல் 1 அரிசி எடை. அனுபானம்—தேன், இஞ்சிச்சாறு, துளசிச்சாறு. தீரும் நோய்—பாரிசவாதம் முதலிய வாதரோகங்களும் கழிபோன்ற பேதிகளும் நீங்கும்.

## படிகலிங்கச் செந்தூரம்.

இலிங்கம் பலம் 1. படிகாரம் பலம் 8. இவைகளைத் தனித் தனி நன்றாக மைபோல் பொடித்துப் பிறகு இரண்டையுங் கலந் தரைக்க. கடுக்காய்ப்பூ பலம் 1, காட்டாத்திப்பூ பலம் 3, இவ் விரண்டையும் ½ படி நீரிலிட்டு 1/8 படியாகச் சுண்டக் காய்ச்சவும். இக்கியாழத்தால் மேல்கலந்தரைத்ததை யரைத்துப் பொடியாக் கிப் புட்டியிலடைக்க.

3 முதல் 5 குன்றிவரை நெய், வெண்ணெயில் கொடுக்க, சீத பேதி, ரத்தபேதி, பெரும்பாடு நிவாரணமாகும்.

## சிருங்கிச் செந்தூரம்.

மான் கொம்பை வேண்டிய அளவு துண்டுதுண்டாக வெட்டி அகத்திக்கீரைச் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து சுத்த நீர்விட்டுக் கழுவுக. இவ்வாறே மீண்டும் இரண்டுநாள்செய்ய சுத்தியாம். பிறகு ஏலரிசியை நீர்விட்டு மைபோல் அரைத்து, இரண்டு நூல்கனம் கொம்புத் துண்டுகளின் மீது பூசி யுலர்த்திப் புடமிட வெளுத்துத் தூளாகும். இப்பொடியைக் கல்வத்திட்டு சதுரக்கள்ளிச் செயனீரா லரைத்து வில்லை செய்துலர்த்திப் புடமிட. இவ்வாறு 10 புட மிட உயர்தரச் செந்தூரமாகும். இதில் 1 முதல் 3 அரிசி யளவு நெய்யில் கொடுக்க உட்சூடு, மார்புவலி, எலும்புருக்கு போன்ற நோய்கள் தீரும்.

## துருசுச் செந்தூரம்.

துருசு—ஒரு பலம், வேப்பிலை இரண்டு பலம்; இவற்றை நீர் விடாமல் கல்வத்திட்டரைத்து வில்லை செய்க. பிறகு பிரண்டை யை அரைத்து அதற்குள் இவ்வில்லையைப் பொதித்து முற்றும் காய்வதற்குள் 10 வரட்டியில் புடமிட. இவ்வாறே செந்தூரமாகு மட்டும் புடமிடவும். இதில் கால் முதல் அரை குன்றி யளவு தக்க அநுபானத்திலீய குன்மம், சூலை, மகோதரம், வாத-பித்த, கபரோகங்கள் பலவும் தீரும்.

## படிகாரச் செந்தூரம்.

சுத்திசெய்த படிகாரத்தைப் பொரித்து ஒரு பலம் எடுத்து, அதற்கு நாலிலொரு பாகம் இலிங்கங்கூட்டி எலுமிச்சம்பழச் சாற்றாலாட்டி பில்லை செய்துலர்த்தி 10 வரட்டியில் புடமிட. இவ்வாறாக மேலும் நான்கு புடமிட. ஒவ்வொரு புடத்துக்குப்பின் தேறின எடைக்குக் கால் பாகம் இலிங்கம்சேர்த்து வர. இதில் ஒன்று முதல் இரண்டு குன்றி பிரமாணம் வெண்ணெய் அல்லது நெய்யில் சேர்த்துக்கொடுக்க சீதபேதி, இரத்தபேதி, பெரும்பாடு நீங்கும்.

## வெள்ளிச் செந்தூரம்.

ஐந்து பலம் கெந்தகம் பொடித்து ஒரு சட்டியிலிட்டு, ஒரு பலம் வெள்ளியை தகடு தட்டிச் சுருட்டி அதன் மத்தியில் முழுகும்படி அமர்த்தி, சட்டி கொண்டு மூடி சிரட்டை ஓடு 100 கொண்டு எரித்தெடுக்கச் செந்தூரமாகும்.

இதை மிகக் கவனத்தோடு செய்க.

அளவு—ஒரு நெல்லரிசி முதல் நெல்மணி வரை. அநுபானமறிந்து கொடுக்க, சுரம், சந்நிபாதம், பாண்டு, காமாலை, குன்மம், சூலை, க்ஷயம், பிடிப்பு, தேமல், மேகநீர் நீங்கும்.

## பட்டுக்கறுப்பு செந்தூரம்.

இலிங்கரச கந்திசசி காந்தவெள்ளை வகளுரும்
எழிளுவி கிராம்பொன்பதில்
இரண்டொன் றுறரையி லெய்து கடைகாலாக
வியற்றெருடியி னிறைசெய்தவை
வலிந்தா மணக்குநெய் யொருதொடி யினுலரைசெய்
மன்னியோ ருண்டைசெய்பின்
வன்னியின் வேர்ப்பட்டை யெண்டொடி யரைத்ததை
மாட்டிவிடு போர்வையாக
மலிந்திடா வரக்குநிற பட்டினைச் சுற்றியே
மணலினிடை வைபுடமதாய்
வல்லெருவ தோவதற் கைம்பதா மதன்பினர்
வாங்கியோர் தண்டுலமதே

பொலிந்திடி னிரண்டதே பூட்டிவிடு தேனினிற்
போக்கொணு மலினவெம்மை
போயுரு வயிற்றுவலி யதன்சந்நி நீங்குமெனப்
போற்று பட்டுக்கறுப்பனே.

குறிப்பு:—இலிங்கம், இரதம் வகைக்கு ஒன்று; கெந்தி-பூரம்-வீரம்-வெள்ளை-காந்தம் நாபி இவ்வாறும் வகைக்கு அரை; கிராம்பு கால் எடையாகும்.

---

## இலேகியம்.

### இஞ்சிலேகியம்.

இஞ்சிரசம், கண்டங்கத்தரிச்சாறு, நெருஞ்சிச்சாறு, முள்ளங்கிச்சாறு, பழச்சாறு, வகைக்கு படி ஒன்று; ஆவின் பால் படி இரண்டு; பனைவெல்லம் பலம் எட்டு; சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலம், வாய்விடங்கம், கிராம்பு, தாளீசம் இவை வகைக்கு ஒருபலம்; பசுவின் நெய் அரைப்படி; தேன் கால் படி. சாறுகளை எல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து பனைவெல்லத்தை அதில் கரைத்து அடுப்பேற்றிக் கடைச் சரக்குகளைச் சூரணித்து, அதில் கலந்து எரித்து, இலேகிய பதத்தில் இறக்கி, நெய், தேன் விட்டுக் கிளறி பாக்களவு இருவேளை உபயோகிக்க.

தீரும் நோய்—வாயு, பித்தம், வாந்தி, சூலை, வலி, அரோசகம், அன்னத்துவேஷம், எட்டுகுன்மம், பொருமல் முதலியன தீரும்.

### இம்பூறல் லேகியம்.

இம்பூறல் வேர்ப்பட்டையைத் தட்டியெடுத்துப் பாலிலரைத்துப் பாலில் கரைத்து வடிகட்டி அதில் பனங்கற்கண்டு அதனளவிற்குச் சேர்த்துக் கரைத்து வடிகட்டி அடுப்பிலேற்றிப் பாகுபதம் வரும் சமயத்தில் சிறிதளவு சாதிபத்திரி, சாதிக்காய், வால்மிளகுச் சூரணஞ் சேர்த்துக்கிண்டி, பிறகு பசுவின் நெய் விடுக. தேன் சேர்த்தல் கூடா.

அளவு—சுண்டைக்காயளவு. உபயோகம் — இரத்தகாசம், இரத்தவாந்தி, இரத்தபேதி தீரும்.

### கேசரி லேகியம்.

எலுமிச்சம் பழம் எண் 200, நாட்டுச் சர்க்கரை பலம் 200, மிளகு பலம் 6, சீரகம் பலம் 6, கோஷ்டம், சுக்கு, தாளீசம்,

திப்பிலி,சாதிக்காய், சாதிபத்திரி இவை வகைக்கு வராகனெடை 8, நெய் பலம் 8 எடுத்துக்கொள்க. பிறகு எலுமிச்சம் பழத்தை வதக்கிச் சாறுபிழிந்து சர்க்கரையை அதிற்கலந்து கரைத்து வடி கட்டி, அடுப்பேற்றி பாகுபதம் வந்தவுடன் இறக்கிச் சூரணித்த கடைச்சரக்குகளைச் சிறிது சிறிதாகப் போட்டுக் கிளறி பிறகு நெய் சேர்த்துக் கிண்டுக.

அளவு—1 முதல் 2 வராகனெடை. தீரும் வியாதி—பித்தம், பித்தாசீரணம், அன்னவெறுப்பு, அசீரணபேதி, பித்தவாயு, வயிற்றுவலி முதலியன.

---

## வடகம்.

### கந்தக வடகம்.

கந்தகம், இரசம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நாபி இவை சமனெடை. வெண் செம்பை யிலைச்சாற்றிலும் ஆரை யிலைச் சாற்றிலும் தனித்தனி 15 மணி நேரம் அரைத்துக் குன்றியளவு மாத்திரை செய்க.

அளவு—1 மாத்திரை. உபயோகம்—பாண்டு, க்ஷயம், மூலக் கிரகணி தீரும்.

### தாளிசாதி வடகம்.

தாளிசபத்திரி பலம் 1, மிளகு பலம் 1, செவ்வியம் பலம் 1, திப்பிலி பலம் 2, திப்பிலிமூலம் பலம் 2, சுக்கு பலம் 3, இலவங் கப்பட்டை, இலவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, ஏலம், குருவேர், சிற்றரத்தை இவை வகைக்குப் பலம் $\frac{1}{4}$, கரும்பு வெல்லம் பலம் 16, பசும்பால் வேண்டிய அளவு.

ஒரு சட்டியில் பசும்பாலை ஊற்றி வேடுகட்டி அடுப்பேற்றி எல்லாச் சூரணங்களையும் வெல்லத்தையும் ஒன்றாய்க்கலந்து அதன் மீது வைத்து மேற்சட்டி கொண்டு மூடி, பிட்டுபதம் வரும்வரை யில் வைத்து எரித்தெடுத்து உரலிலிட்டு இடித்து சிறுகொட்டைப் பாக்களவு உருட்டி, உலர்த்தி உபயோகிக்க. கபம், வாதம், கிர கணி, அலசம், வமனம், அதிசாரம், பக்கநோய் போம்.

## இஞ்சி வடகம்.

திரிபுடை.

பல்லேநோய்களுமறுமிச்சாப்பத்தியம்
பகருமிஞ்சிமுன்படிமுக்கடுகுப்பு
மல்லியிலவங்கமோமமரிதகி—மாத்திரநிகரே
வதக்கிநெய்யினிற்றயிர்விட்டரைத்துமுன்
வரிசையாகச்செய்துரிசையாய்க்
கொளவகைக்குமுப்பிணிமந்தமுடனலி—வல்லேயறுமே.

## கடகரோகணி வடகம்.

பத்தியமேற்படிகடகரோகிணி பல்லேமூன்றுமெயில்லம்வேலிப்
பருத்திமரமஞ்சளுப்புவசம்பிவை—யொத்தநிறையே[த்தி மேற்படி
சித்திரத்தயிலத்தில்வதக்கியச்சத்தின் சலமிட்டிடித்தரைத்துலர்
யச்சமற வனிசூலே வளிகப—மண்டவாதம்.
ஆதியான வியாதியினமறும்...............

## பிரண்டை வடகம்.

பிரண்டையின் கணுக்களேயும், பக்கத்திலுள்ள நரம்புகளேயும் நீக்கி நெய்விட்டு வதக்கி அதற்கு நேர் மிளகு, சுத்திசெய்த பச்சை வசம்பு, உப்பு, ஓமம், கடுக்காய் சேர்த்திடித்து மோர்விட்டுப் பிசைந்து கால் பலமுள்ள உருண்டைகளாக வுருட்டி உலர்த்திக் கொள்ளவும். வேளேக்கு ஒரு மாத்திரை வீதம் உபயோகித்து வர பசி தீபனமுண்டாகும். உணவு சீரணமாகும், மலக்கிருமிகள் சாகும், சயித்திய வாயு குன்மங்கள் நீங்கும். இச்சாபத்தியம் காக்கவும்.

## கறிவேப்பிலே வடகம்.

வாயிலேப்புடன் பசியிலாம னித்தியமுங் கழிய
சீரணத் தெழுந்தபிணி போவதற்கு நிம்பவிலே
மலியுப்பு கறிகிச்சிலிகள் பத்திரி மதியொக்க
விஷயத்தை நளிபற்று வடகத்தை யாக்கது
மருவவினிப் போடு துய்த்தல் வாசியே.

## வாழை வடகம்.

பொந்தன் வாழைப்பூவின் மேல்பட்டைகளே நீக்கி உள் குருத்தை இரண்டாய்ப் பிளந்து அதற்குள் கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி, கஞ்சா, கறிவேப்பிலே வகைக்கு 2½ வராகனெடையும்,

கற்கடக சிங்கி ஒரு வராகனெடையும் எடுத்து, இளவறுப்பாய் வறுத்து சூரணஞ் செய்து வைத்து, நூல் கயிற்றால் சுத்தி ஒரு பானையில் எருமை மோர் விட்டு அதற்குள் இதைத் துலாயந்திர மாகக் கட்டி மோரில் மூழ்கும்படி விட்டு வேகவைத்து வெந்த பின் அரைத்துக் கழற்சிக்காயளவாக உருண்டை செய்து உலர்த் திக் கொள்க. காலை மாலை ஒவ்வொரு உருண்டை கொடுத்துவரப் பெரும்பாடு நீங்கும்.

## இம்பூறல் வடகம்.

இம்பூறல் சமூலம் ஒருபங்கு, மிளகு ஒரு பங்கு, கற்கண்டு இரண்டு பங்கு, ஒன்றுசேர்த்து இடித்துப் பிறகு மைபோலரைத் துச் சுண்டைக்காயளவு வடகம் செய்க.

வேளைக்கு ஒரு வடகமாக இரண்டு, மூன்று நாள் கொடுக்க இரத்த பித்த ரோகம், இருமல் தீரும்.

## வெடியுப்புச் சுன்னம்.

அறுவகை செயநீர் ஒரு பலமெடுத்து அதில் வெங்காரப் பொரி கால் பலமும், படிகாரப்பொரி கால் பலமுங்கூட்டி, ஒரு பீங்கானில் சேர்த்து, ஒரு சட்டியில் 3 அங்குலம் மணல் கொட்டி அதன்மீது பீங்கானை வைத்து எரித்து சுன்னமானபிறகு எடுத் துப் பதனம்பண்ண; இதுவே வெடியுப்புச் சுன்னம். அரை முதல் ஒரு அரிசி எடை, இளநீர், முள்ளங்கி அல்லது சிறு பீளைச்சாறு இவைகளில் கொடுக்க, நீர்க்கட்டு, நீரடைப்பு நீர் எரிச்சல் தீரும்.

---

# பதங்கம்.

## இலிங்கப் பதங்கம்.

சுத்தித்த லிங்கத்தை வெடியுப்புத் திராவகம் விட்டரைத்து வில்லைசெய்துலர்த்தி ஒரு சட்டியில் வைத்து மேற்சட்டிகொண்டு மூடி அடுப்பின்மீது வைத்தெரிக்க மேற்சட்டியில் பதங்கம் ஏறி இருக்கும். அதை வழித்தெடுத்து மறுபடியும் இவ்வாறே 3 அல் லது 5 தரம்செய்யப் பதங்கம் அடி சட்டியிற் தங்கும். இதுவும், அடியிற்கண்ட திரிமூர்த்தி பதங்கமும், இரசபற்பத்தால் தீரும் நோய்களை நீக்கும்.

## திரிமூர்த்திப் பதங்கம்.

வீரம், பூரம், வெள்ளைப்பாஷாணம் இவைகளைச் சமவெடை எடுத்து தூள்செய்து சட்டியிலிட்டு மேற்சட்டிகொண்டு மூடி அடுப்பிட்டு எரிக்கப் பதங்கம் மேற்சட்டியிற் பதங்கித்திருக்கும். இதை வழித்தெடுத்து அடிச்சட்டியிலிட்டு மறுபடியும் எரிக்க. இவ்வாறு 5 தடவை செய்யப் பதங்கம் அடியிற் தங்கும்.

## பறங்கிப்பட்டைப் பதங்கம்.

பாரேதான் பறங்கிதனின் பட்டையப்பா
பாங்காகப் பலமைந்து நிறுத்துக்கொண்டு
சேரேதான் பொடிப்பொடியாய்க் கண்டமாக்கிச்
சிறப்பாக வேசரியின் லத்திச்சாற்றில்
வீறேதான் பிசறியதை யுலர்த்திவைத்து
விதமாக மேனிச்சாறு பொடுதலைச்சாறு
கூறேதான் கையான்சாறு குப்பிச்சாறும்
குணமான பசுவின்பா லின்னங்கேளே. (1)

கேளேநீ வெவ்வேறே யுலர்த்திக்கொண்டு
கெணிதமுடன் கெந்தகமும் பலந்தானென்று
வாளேநீ ரசமைந்து லிங்கமைந்து
வகையாகப் பொடிபண்ணி மூன்றும்போடு
வீளேநீ மறுசட்டி தமர்கள்போட்டு
விதமாகச் சட்டிவாய்ச் தன்னில்மூடி
சூளேநீ பட்டையைத்தான் மேலேவைத்துச்
சுகமாக மறுசட்டி கொண்டுமூடே. (2)

மூடியே மண்சீலை வலுக்கச்செய்து
முசியாமல் தானெரிப்பாய் சாமமொன்று
ஆடியே யாறவிட் டெடுத்துலர்த்தி
அப்பனே சூரணமாய்ச் செய்துகொண்டு
நாடியே கழஞ்சொன்று கொண்டாயானால்
நலமாக மேகவகை யிருபத்தொன்றும்
ஓடியே போகுமடா சூலையெல்லாம்
உத்தமனே கருங்கிரந்தி தீருந்தானே. (3)

தீருமே கைக்கறுப்பு வெள்ளைதானும்
திறமான பிடிப்புவகை ரணங்கள்யாவும்
ஆறுமே ரணங்கள்வகை சிரங்குகுஷ்டம்
அப்பனே செந்தாமரைத் தடிப்புந்தீரும்
கூறுமே வாய்நாற்றம் தந்தச்சூலை
குணமாக மண்டலந்தான் தின்றால்தீரும்
பாருமே பத்தியந்தா னிதற்கோவில்லை
பண்பாக போகருரைக் கடாட்சந்தானே. (4)

## சாம்பிராணிப்(பூ) பதங்கம்.

சாம்பிராணிப் பூவணைய சாம்பிராணிப் பூவிஃதே
சாம்பிராணி முப்பகுதி சாபத்திர முக்கடுகுபலை
சாதிக்காய் வால்மிளகு துடிசாரைப்பருப்பு கிராம்புபுச்சி
சாயவேரதிங்க மரமஞ்சள் சாலியனைத்து மிருபஃதே
சாலநொறுக்கி மதித்தறலிற் சாலிற் கலக்கிமேல்மூடி
சாரமேன் முடிப்புழை வழியே சாமந்திரமுங் கொடிவேலி
சாம்புசிவனார் வெண்பிரசம் சாதுற்பாதி யடைவிறுத்துச்
சாரவதன்மேல் வகைகவர் சாமர்த்தியத்தாற் புரிந்ததன்மேற்
சாகப்புழுக்கை யஃதென்னினுஞ் சாகப்புழுக்கை யெருவிருந்தை
சாதியடிவேர் கோத்திரத்தோல் சாலியதளிப்படி நிறைத்து
சாக்ஷிதெய்வத் தினையிருத்திச் சாடத்திறக்கிற் புகையெழுப்பி
சானித்தியமுத் தினமொழித்துச் சாரப்புடத்தைத் திறந்தெடுக்க
சாயுச்சியரூபப் பொருளாகுஞ் சாம்பிராணிப் பூவென்னும்
சார்த்தூலத்தைப் பிணிக்குழுவாஞ் சாரங்கத்தின் மேலிடற்போல்
சாற்றபிருந்த ரசத்திலுணிற் சாலேசுரம்போ மஜீரணம்போம்
சாணிப்பாலி லுணிற்குன்மஞ் சாபவாத சுரமகலும்
சாராமதுவி லுணிற்பல்லை சாட்டியவினைக ளறும்க்குச்
சாற்றிலுணப்போ மதுமேகஞ் சான்னிகவே தனைகள்ளிலிவை
சாவற்றுவசர் குறுமுனிக்குச் சாலவுபதே சித்ததிதே.

---

## மெழுகு குழம்பு முதலியன.

### மலக்குடார மெழுகு.

(1) சூரத்து நிலாவரை பலம் 3, (2) குல்கந்து பலம் 4, (3) கொட்டை திராட்சை பலம் $2\frac{1}{2}$, (4) பாதம் பருப்பு பலம் $1\frac{1}{4}$, (5) அதிமதுரம் பலம் $\frac{1}{2}$, (6) கடுக்காய்ப்பிஞ்சு பலம் $1\frac{1}{4}$.

1, 5, 6, சரக்குகளை நன்றாகத் தனித்தனிச் சுத்தித்து பொடி செய்யவும். பிறகு குல்கந்தை நன்றாக அம்மியிலிட்டு மைபோலரைக்கவும். பிறகு கொட்டை திராட்சியை அரைக்கவும். பிறகு பாதம் பருப்பை அரைக்கவும். மறுபடியுஞ் சூரணங்களைக் கலந்து சிறிது சிறிதாகப்போட்டு எல்லாவற்றையும் ஒன்றுபடக் கலக்கவரைத்து வைத்துக்கொண்டு படுக்கைக்குப்போகு முன் ஒரு கழற்சி காயளவு உண்டு பால் சாப்பிடக் காலையில் தாராளமாக மலங்கழியும்.

## மகா வீரமெழுகு.

வீரம் பலம் 1-க்கு 1-படி முருங்கைப் பட்டைச் சாற்றைச் சுருக்குக்கொடுத்து, பூரம் பலம் 1, இலிங்கம் பலம் 1 சுத்தி செய்து சேர்த்து, திரிகடுகு வகைக்கு பலம் 1, சித்திரமூல வேர்ப் பட்டை பலம் 6.

ஆக மொத்தம் 12-பலத்தை வேண்டிய அளவு தேனும் முலைப் பாலும் விட்டரைத்துக் கடைசியில், குங்குமப்பூ, கோரோசனம், பச்சைக்கற்பூரம், வகைக்கு 1-வராகனெடைச் சேர்த்துக் கொள்ளவும்.

அளவு—1 முதல் 2 பயரளவு—வாதரோகம், மேகரோகங்கள் தீரும். பத்தியம்—பாலும் சோறும்.

## கந்தி மெழுகு.

சுத்தித்த கந்தகத்தை வெள்வெங்காயச் சாறு விட்டு 5-நாளரைத்து பிறகு இஞ்சிச்சாறு விட்டு 5-நாளரைத்து மெழுகு பதமானவுடன் குப்பியிலடைக்கவும். வேண்டும்போது 2 முதல் 3 குன்றியளவு உருட்டிக்கொடுக்க வெகு மூத்திரம் போன்ற மேக நீர் ரோகங்களும், சொறி சிரங்கு, குட்டம், மூலமும் நீங்கும்.

## குன்ம குடோரி.

1. இந்துப்பு, 2. கல்லுப்பு, 3. சோற்றுப்பு, 4. உழமண், 5. வளையலுப்பு, 6. வெங்காரம், 7. நவாச்சாரம், 8. வெடியுப்பு, 9. சுக்கு, 10. திப்பிலி, 11. மிளகு, 12. ஓமம், 13. கிராம்பு, 14. மோடி, 15. கோஷ்டம், 16. பெருங்காயம், இவைகள்—வகைக்குப் பலம் 1, 17. உரித்த பூண்டு பலம் 5, 18. பனை வெல்லம் பலம் 5, 19. தேன் பலம் 5.

இவைகளைக் கல்வத்திலிட்டு இளகிய பதம் வருமட்டும் அரைத்து,தினம் இருவேளை சிறு சுண்டைக்காயளவு உட்கொள்ள, ருதுகாலத்தி லுண்டாகும் சூதக வாயுவின் வலி, குன்மம், பித்த வாயு, மந்தம், அசிரணம் தீரும்.

## கௌசிகர் குழம்பு.

அருமறை மொழியால் யாவரும் பிழைக்க
குருமுறை யான குழம்பின் குணத்தை
திருவரு ளென்று செய்திடும் பேர்க்கு
இருள்குறை யகற்றி எல்லா நல்குமே.

கற்பிதக் கடுக்காய் கடுகிந் துப்பு
நற்பெறுங் காய நல்லவெங் காரம்
மெய்ப்புள சூத மேவு மனோசிலை
திப்பிலி தாரஞ் சீரகத் துடனே
ஒப்புடன் கடுகு ரோகணி நாபி
இப்படி சரக்கு இவைபன் னிரண்டும்
மெய்ப்புள வாள மிதுசம னெடையாய்
நஞ்சுமுளை போக்கி நல்லிள வறுப்பாய்
புஞ்சமன் சூரணம் பொடியது செய்து
வஞ்சிதன் வேலிப் பருத்திச் சாறோர்நாள்
கொஞ்சிய தென்னங் குடுக்கைக் கரிதான்
அஞ்சு வராக னவ்வெடை வெல்லம்
துஞ்சிய தேங்காய்ப் பாலி லரைத்து
இஞ்சிய பதத்தில் எடுத்தடை சிமிழில்
வைத்துநீ கேளு வரும்பிணி தனக்கு
உற்ற வனுபான முரைத்ததி லாகும்
வெள்ளை யக்கர மிகுவெழு தோடம்
சில்லரை தோடஞ் சினப்புக ளேழும்
கறுத்த வக்கரங் கண்டதோ ரேழும்
மூவேழு தோட முறிந்தே யோடிட
நாவிற் பணவெடை நன்றாய்த் தேய்த்துக்
கூறிய வெந்நீர் குடித்திடத் தீரும்
சந்நி தோடஞ் சர்வ சுரங்களும்
வெந்நீ ரிற்கொள விட்டகன் றோடும்

கடுக்காய் நீரிற் காசெடை கொள்ள
ஈளை யிருமல் இருபதுந் தீரும்
நடுக்கும் குளிர்சுர மூதேவி தீரும்
விடுக்குஞ் சுக்கு வெந்நீ ரிற்கொள
சீதேவி சீரந் தண்ணீர் குடித்திட
மூதேவி யுட்சுர முறிந்தோடு மன்றே
எட்டுச் சுரமு மேல மிளகுடன்
அட்டியில் லாமல் அகன்றுபோ மத்தியும்
கொன்றைக் கொழுந்துங் கொள்கடுக் காய்ப்பொடி
எண்ணெயிற் கொள்ள ஏங்கலுப் பிசம்போம்
சந்நி யிருமல் சத்தியுள மாந்தை
சொன்னநல் மோருடன் சுகவுசிற் பட்டை
கடற்கரை யிருமல் கண்டிப்பு தீரும்
இடாது போக்கு மெண்ணெய் முலைப்பால்
குடல்வலி சூலைநோய் குவளைவிப் புருதி
ஆடா தோடை யரத்தை யாமது
சூடாக வெண்ணெயிற் சுகம்பெறக் குடிப்பீர்
ஈளை யிரும லேங்க லுப்பிசம்
கோழையு மீளையுங் கூடுவிப் புருதி
ஆளை யறிந்தங் காவின் மோர்தனில்
நாளும் பணவெடை நயந்து கொடுக்க
பிள்ளைவிப் புருதி பதின்மூன் றுக்குங்
கொள்ளுவீர் தூது பத்திரிச் சாற்றில்
மெல்லிய உசிலம் பட்டையின் பாலும்
கொள்ளுவீர் சுவாசங் குலைகுலைந் தோடச்
சத்தி குன்மம் தகரைச் சாற்றில்
அத்தி குன்ம மாமணக் கெண்ணெயில்
வாயு குன்மம் வல்லாரைச் சாற்றில்
பித்த குன்மம் புளியாரைச் சாற்றில்
எரிகுன் மத்துக் கிளநீர் சீரகம்
பயித்திய குன்மம் பழம்பாசி மோரில்
கருதிய குழம்பு காசெடை யாகும்
நயந்து கொள்ள நலமே செய்யும்
அண்ட வளிவெள் ளாட்டுப்பால் நெய்யில்

பண்டிய பொருமல் பக்கச் சூலை
உண்டிட பசுநெய் உரிபால் சர்க்கரை
குண்டிகை நோவு குலைவலி யெரிச்சல்
நின்று மின்பால் நெய்சர்க் கரையில்
அண்டிய குட்ட மதிநல மாகும்
கண்டு சர்க்கரை காய்ச்சிய நெய்யில்
உண்டிட உட்டிண வாயுக ளொதுங்கும்
சூதக வாய்வு சுக்குநீர் சீரகம்
பாலுடன் பறங்கிப் பட்டைத்தூள் நெய்யில்
சூலையீ ரொன்பதுஞ் சுகமுடன் தீர
சுருள்ளி சுக்கு மிளகு சீரகத்தில்
தேரிய குழம்பு காசெடை கொண்டிட
பாரிய சூசிகா வாய்வு பரந்திடும்
மூல முளைக்கு முலைப்பா லெண்ணெயில்
காலங் கண்டு கழஞ்சிடத் தீரும்
மூல வாய்வு மூவிரண் டோடப்
பால்நெய் மோரில் பரிகரித் திடலாம்
இரத்த மூல நறுநெய் யதனில்
உத்த பசும்பால் ஓர்கழஞ் சிடலாம்
மூலங் கிராணி முக்குவக் கிக்குப்
பால்நெய் மோரில் பரிகரித் திடலாம்
சீழ்மூ லங்கள் சீறிக் கழிந்தால்
செம்மறி யாட்டுக் கொழுப்புநெய் யதனில்
குழம்பது கழஞ்சு கொடுத்திடத் தீரும்
மூலக் கடுப்பு முளைகள் வீழ்தலும்
ஒக்கவே கோழி யூத்தைகள் போலும்
தாமரைக் காய்போ லுன்முளை வீழ்தலும்
ஆமை யடிபோ லம்முளை கரையக்
கண்டுசீ லைப்புகை காட்டத் தீரும்.
தண்டு தனிலே தாமரைச் சிலந்தி
பண்டு சிலந்தி பவுத்திர ரோகம்
கண்ட மாலை கழுத்திற் கழலை
தொண்டைப் பிளவை தொப்புட் சிலந்தி
அண்டி மார்பி லாணிச் சிலந்தி

பெண்டுகள் மார்பில் பிறக்கும் புத்து
முதிகிற் பிளவை மூலப் பிளவை
பக்கப் பிளவை பளுவாழ்ச் சிலந்தி
கன்னவிப் புருதி கக்கச் சிலந்தி
மூக்குப் பருக்கள் முளையரை யாப்பு
நாக்குப் பிளவை நரம்பு சிலந்தி
ஓடுவிப் புருதி யோனிப் புற்று
இலிங்கப் புற்று நேத்திரப் பிளவை
குவளைவிப் புருதி குழிவாழைப் புண்கள்
தொடைவா ழைக்கடி துள்ளுமரை யாப்பு
கிரந்தி ரணங்கள் கிளர்பல புண்கள்
பச்சைப்புண் கொடியப் பாதசக் கரமும்
ஏறுஞ் சிலந்திக ளெண்பத்து நான்கும்
மதுபுகை பிடிக்க வாங்கு மன்றோ
மூக்குநீர்ப் பாய்ச்சல் முகவாத சந்நி
நாக்கச் சரங்கள் நல்பல் லரணை
பல்லு சந்நிகள் பற்குத்து ரோகம்
மண்டைச் சுரப்பு மாதவ ளுன்கும்
அண்டிய பீநச மதுவிரு நான்கும்
கபால சூலை கன்னக் கிரந்தி
இப்படிக் கொத்த வெழுவகை ரோகமும்
செப்பிய ரோகம் சிரந்தனில் யாவும்
தீரவே சிலையி லெருக்குபா லூட்டியே
சீலை யுலர்த்திக் குழம்பைத் தீட்டியே
திரியாய்த் திரித்து நிம்பநெய் தோய்த்து
நெரிப்பினிற் கொளுத்தி நின்றிடு புகையை
நாசியி லேற்ற நவின்ற பிணிகள்
தீருமே நல்ல கவுசிகன் குழம்பால்
விசைவாய்வு போல வெகுவலி கண்டு
மலசல மடைத்து வாதை மிகுந்தால்
நலம்பெற வேலிப் பருத்திச் சாற்றிற்
கொண்டரைக் காற்படிக் குழம்பிற் றூனே
குன்றிமணி யெடைக் கொடுக்கத் தீரும்
விரைந்து கொள்ள விசைவாயு தீரும்

கூறிய குட்டம் குறைநோய் தீர
கருநொச்சிச் சாற்றில் கலந்தே யுண்டு
பீறிய மருந்தை மேலெங்கும் பூச
பாரிய குட்டம் பதினெட்டும் போம்
தில்லைப்பூ வெல்லஞ் சேர்த்தரைத் துண்ணலாம்
மலமுஞ் சலமு மறித்துநிற் பதற்கு
தலைமயிர் சுட்ட சாம்பல் வெங்காரப்
பொரியுடன் கூட்டிப் புசித்திடத் தீரும்
காமாலை சோகை கனத்த மகோதரம்
ஆமணக் கெண்ணெயும் ஆட்டுக்கோ மயமும்
பண்பு செய்யுந் திரிபலைத் தூளும்
நீண்ட குழம்பு நிறுத்துக் கழஞ்சிட
பூண்ட பாண்டு ரோகம் போமே
வலிப்பு சந்நி மரணவா தங்கள்
சலித்தே யோடத் தழுதாழைச் சாற்றிலுண்
சருவ வாதஞ் சந்துசூ லைக்கட்டு
சிறுகழு தையுட சிறுநீரி லூட்ட
எண்பது வாதமு மிதமுடன் தீரும்
அன்புற்ற கழுதை யதனிடப் பாலில்
தென்புட னுண்ணத் தீருமே வாய்வெலாம்
சந்நி நோய்கள் சார்பதின் மூன்றும்
இஞ்சிச் சாறு மிதமுள சுக்குநீர்
இன்னும் வலிப்பி லிருநான் குள்ளதும்
முன்னகன் றோட முருக்கிலைச் சாற்றில்
நன்றாய் மூன்று நாளது கொள்ளு
எருக்கிலைச் சாற்றி லினிதுடன் கொள்ள
வெறிநரி நாய்க்கடி மிக்க வெலிக்கடி
அரணை செய்யான் அரிவண்டு பூரான்
பொரிவண்டு நீர்வண்டு பொன்வண்டு பூவண்டு
சிறுவண்டு கடியோடு சில்விட முள்ளதும்
தேள்கடி வாயிற் சிறுகப் பூசிட்
வாள்கடி போல வருநட்டுக் காலி
நாவிற் பணவெடை நன்றாய்த் தேய்த்து
கூவிய வெந்நீர் குடித்திடத் தீரும்

ஐயா விடங்க ளறுபத்து நாலும்
பொய்யா வெருக்கம் பழுப்புச்சா றாட்டே
மைபோல் கறுத்த வழலை மயக்கம்
கொம்பேறி மூக்கன் கொடிய விரியனும்
வம்புறு நாகம் மண்டலி புடையன்
தீண்டிய போது சிறுபய றளவு
கண்ணிடு கலிக்கம் கடுக வுள்ளுக்கு
எருக்கிலைச் சாற்றில் இதமுடன் கொடுக்கப்
பறந்துமே விடங்கள் தானது ஓடும்
விரிதலை நாகம் விடமது தீண்டில்
பரிவுடன் வேலிப் பருத்திச் சாற்றில்
கண்ணிற் கலிக்கங் காலுளுந் தளவு
உண்ணக் குழம்பு மொரு குள்றி யளவு
திண்ண விடங்கள் சீர்குலைந் தோடும்
கலிக்க மதனால் கண்வேதனை படின்
சலித்திடாய் கற்றாழஞ் சோறுநீ யொற்றிடே
குழம்பால் வயிறு கடுப்புதான் காணின்
நன்றாய் வயிறு நலிந்துபே தித்தால்
திட்டமாய் மோருஞ் சிறுகிராம் பாவாரைப்
பட்டையால் தீரும் பயப்பட வேண்டாம்
நாற்காற் சீவன் நயமுள்ள மாடு
சோளப் பயிர்தின்று சொக்கிய மாட்டுக்கு
வேலியின் சாற்றில் வராக னெடையாய்ச்
சேர்த்துக் கொடுக்கத் தீர்ந்திடு முடனே
பார்தனில் மக்கட் பயன்பெற வேண்டி
சீர்பெரு கவுசிக குழம்பின் குணத்தை
மொழிந்தனர் கவுசிக முனிவன் றானே

---

## இரசாயனம்.

### கந்தக ரசாயனம்

1. கந்தகம் பலம் 10, 2. அமுக்கிறா பலம் 5, 3. பறங்கிச் சக்கை பலம் 2, 4. கடுக்காய், 5. நெல்லிக்காய், 6. தான்றிக்காய் 7. சுக்கு, 8. திப்பிலி, 9. மிளகு, 10. வாய்விளங்கம், 11. ஏலம்,

12. இலவங்கம், 13. சந்தனம், 14. கடலைப்பருப்பு 15. சேங்கொட்டை, 16. சித்திரமூலவேர் பட்டை, வகைக்கு பலம் 1.

இவைகளைத் தனித்தனி சூரணஞ்செய்து பிறகு எல்லாவற்றையும் ஒன்றுபடக்கலந்து சர்க்கரை, தேன், நெய் கலக்கவும். 10 முதல் 15 குன்றியளவு சாப்பிடவும். **தீரும் நோய்:—**மேகவியாதிகள், மூத்திரக்கிரிச்சரம், மூத்திரச் சிலந்தி, குட்டம், கிராணி, மூலம், குன்மம், வாதம், வீக்கம், முதலியன தீரும்.

## திப்பிலிரசாயனம்.

*  *  *  *

தயவாக வின்னமொரு ரசாயனங்கேள்
காட்டுகிறேன் திப்பிலியும் பலம்பத்தப்பா
கருவான மிளகுசுக்கு பலந்தானஞ்சே
பலமொன்று இருசீர மிரண்டுஓமம்
பாங்கான அரத்தைரெண்டு திரிபலாதி
நலமான லவங்கமுடன் லவங்கப்பத்திரி
நன்மையுள்ள தாளிச பத்திரியுங்கூட்டிப்
பிலமான கொடிவேலி யேலமப்பா
பேசியதோர் பதினைந்தும் பலமொவ்வொன்று
தலமாக விளவறுப்பாய்ச் சூரணித்துத்
தன்மையுட னந்தெடைக்குச் சீனிசேரே.

சேர்த்துமே தேன்விட்டுப் பிசைந்துமைந்தா
திறமான பீங்கானிற் பதனம்பண்ணிக்
காத்துமே தாம்பிரசிந் தூரங்கூட்டிக்
கனமாக வுண்டிடவே காசரோகம்
போத்துமே மந்தார காசங்கூடப்
புலத்தியனே கயமிரும விளைப்புகக்கல்
ஆத்துமே சேத்மமது தொண்ணூற்றாறும்
அகலுமடா மண்டலத்தி லறிந்துபாரே.

---

## குடிநீர்.

### நிலவேம்புக் குடிநீர்.

நிலவேம்பு, வெட்டிவேர், விலாமிச்சன்வேர், சந்தனத்தூள், பேய்ப்புடல், கோரைக்கிழங்கு, சுக்கு, மிளகு, பற்பாடகம் வகை

க்குக் கால்பலமெடுத்து கியாழ முறைப்படி காய்ச்சி கால்முதல் அரை யாழாக்குதர சுரம் நீங்கும்.

## நொச்சிக் குடிநீர்.

நொச்சிக்கொழுந்து ஒரு பிடி, மிளகு கால்பலம், பூண்டு அரைக்கால் பலம், கம்மாறு வெற்றிலை பத்து இவைகளைக் கியாழம் செய்து கால்முதல் அரை யாழாக்கு வீதம் காலை மாலை தர குளிர்சுரம் போம்.

## ஆடாதோடைக் குடிநீர் (1)

ஆடாதோடையிலை இரண்டு அல்லது மூன்று எடுத்துச் சிறுக அரிந்து தேன்விட்டு வதக்கி அதிமதுரம், தாளிசபத்திரி, அரிசிதிப்பிலி வகைக்கு அரைவிராகனெடை தட்டிச்சேர்த்து விதிப்படி குடிநீரிட்டு காலை மாலை கால்முதல் அரையாழாக்கு வீதம் கொடுக்க இருமல், காசம், சுவாசம், பசியின்மை தீரும்.

## ஆடாதோடைக் குடிநீர் (2)

ஆடாதோடையிலை மூன்று அல்லது நான்கு எடுத்துக் குறுக அரிந்து தேன்விட்டு வதக்கி ஏலக்காய், வால்மிளகு வகைக்கு கால் விராகனெடை, கடுக்காய்த்தோல், கடுகரோகணி, தாளிச பத்திரி வகைக்குப் பலம் கால் இவைகளை ஒன்றிரண்டாய் நசுக்கிச் சேர்த்து விதிப்படி குடிநீர் செய்து காலை மாலை கால் முதல் அரை ஆழாக்கு வீதம்தர மேற்குறித்த நோய்களுடன் நீர்க்கட்டு, மலச் சிக்கல், சுரம் நீங்கும்.

## நெருஞ்சிக் குடிநீர்.

நெருஞ்சி, நெல்லிவற்றல், நீர்முள்ளி, பறங்கிச்சக்கை, மணத் தக்காளிவற்றல், சரக்கொன்றைப்புளி, சோம்பு, வெள்ளரிவித்து, சுரைக்கொடி, கடுக்காய், தான்றிக்காய் வகைக்கு ஒரு வராக னெடை எடுத்து குடிநீர் விதிப்படி நீர்விட்டுக் காய்ச்சி வடிகட்டி காலை மாலை அரை ஆழாக்கு வீதம்தர நீரைப் பெருக்கிக் கழித்து, சோபை ரோகத்தைப்போக்கும். நீர்க்கட்டுக்கும் உபயோகிக்கலாம்.

## பிடங்க (புறங்கை) நாறிக்குடிநீர்.

புறங்கை நாறியிலை மூன்று அல்லது நான்கு எடுத்து ஒரு மஞ்சள்-கடுக்காயின் தோல், கறிமஞ்சள் அரை விராகனெடை



இவைகளுடன் சேர்த்துக் குடிநீர் செய்து கால் முதல் அரை யாழாக்குத்தர சுரக்கட்டி (பிலீகவிருத்தி) போம்.

## ஓமத்தீநீர்.

பொட்டு நீக்கிய ஒரு வீசை ஓமத்தை சீலையில் முடிந்து வாலை பாத்திரத்தில் நான்குபடி நீர்விட்டு இரண்டுநாள் ஊறிய பின் வாலையேற்றி எரித்துவரும் திராவகத்தை புட்டியிலடக் கஞ்செய்து கால் முதல் அரையாழாக்கு வீதம்தர வாதக்கிரகணி, ஐயக்கிரகணி, வாதமந்தம், சூலை, வயிற்றுப்போக்கு நீங்கி பசி யுண்டாம்.

## சோம்புத்தீநீர்.

இரண்டு சேர் சோம்பை உடைத்து, பதக்கு நீரில் கலந்து இருதினம் ஊறியபின் வாலைப் பானையிலிட்டு வடித்து அரைக்கால் முதல் காலாழக்கு வீதம் உட்கொள்ள வயிற்றுவலி, அசீரணம், வயிற்றுப்பிசம், சுவாசம், இருமல், அதிதும்மல், பீனசம், சுரம் நீங்கும்.

## ஆடாதோடை மணப்பாகு.

சுத்தமான ஆடாதோடையிலை 20பலமெடுத்துச்சிறுகவரிந்து 4 படி நீரிலிட்டு 1 படியாகச் சுண்டிக் காய்ந்தபின் வடிகட்டி, 20 பலம் சீனிகூட்டி காய்ச்சிப் பதத்தில் எடுத்துக்கொள்க. இதில் கால் முதல் அரை பலமெடுத்து, காய்ந்தாறிய நீர் இரண்டு பங்கு சேர்த்துக் கலக்கி யுட்கொண்டுவர, கபாதிக்கம், வாததோஷம், இருமல், பற்பலசுரம், வயிற்றுநோய் ஆகிய இவைகளை நீக்கும்.

## நன்னாரி மணப்பாகு.

12½ பலம் நன்னாரிவேர்ப்பட்டையை யிடித்து 1½ படி வெந் நீரில் 6 மணி நேரம் ஊறவைத்தபின் காய்ச்சி ¾ படியாய் வற்ற வைத்து வடிகட்டி அதில் 12½ பலம் சருக்கரையைக் கரைத்துக் காய்ச்சி மணப்பாகு பக்குவத்தில் எடுத்துப் புட்டியில் அடக்கஞ் செய்யவும். அரை பலம் மணப்பாகுடன் ஒரு பலம் தண்ணீர்க் கலந்து சாப்பிட்டுவர நீர்ச்சுருக்கு-கட்டு-கடுப்பு-காந்தல், கண் ணெரிவு, நாவறட்சி, தாகம், மேககாங்கை, பிரமேகம் போன் றவை நீங்கும்.

## துருஞ்சி மணப்பாகு.

துருஞ்சி நாரத்தம் பழரசத்தெடைக்கு இரட்டிப்பு சருக் கரை கலந்து காய்ச்சிப் பதத்தில் எடுத்துக்கொள்க. இதில் கால் முதல் அரைபல மெடையெடுத்து தண்ணீர் இரண்டு பங்கு கூட்டி யுட்கொண்டுவர பித்தத்தையும், பித்தத்தை முன்னிட் டுண்டாகும் நோய்களையுந் தணிக்கும்.

## பிரமி நெய்.

பிரமிவழுக்கைச்சாறு படி நான்கு, பசுவின் நெய் இரண்டு படி, பச்சை வசம்புச்சாறு ஒரு படி, சிற்றரத்தைச்சாறு ஒரு படி,பசுவின் பால் நான்கு படி, இவைகளை ஒன்று கலந்தபின், சிவதைவேர்,

சுக்கு, திப்பிலி, நெல்லிவற்றல், விளாவித்து, இந்துப்பு, சீனக்கற் கண்டு, கஸ்தூரிமஞ்சள் வகைக்கு நான்கு விராகனெடை எடுத்து இவைகளைச் சூரணித்து பசுவின்பால் விட்டரைத்து ஒன்றுகலந்த திரவத்தில் கலக்கி எரித்துப் பக்குவபாகத்தில் இறக்கி வடிகட்டிக் கொள்க. காலைதோறும் கால்முதல் அரைபலம் வீதம் உட் கொள்ள பித்தாதிக்கம், சூதகசந்நி போன்ற நோய்கள் தீரும்.

## சேங்கொட்டை நெய்.

சுத்தித்த சேங்கொட்டை ஐந்து பலத்தை சிறு துண்டுக ளாகவெட்டி உட்பருப்பைநீக்கி ஒரு படி பசுவின்பாலை மூன்று பங் காக்கி ஒரு பங்கில் கொட்டையிட்டுக் காய்ச்சி யெடுத்து மற்ற இருபங்கிலும் தனித்தனி இவ்விதங்காய்ச்சி, காய்ச்சி எடுத்த பா லுக்குச் சமவெடை பசுவின் நெய்சேர்த்து நெய்பதம்வரும் வரை காய்ச்சி காசெடைவீதம் காலைமாலை இருவேளை கொடுத்துவர சர்ம சம்பந்தமான பற்பல நோய்களும்,காசம்,சுவாசம்,கயம் இவை களும் நீங்கி உடல் பலமுண்டாம். உண்டுவருங்கால் புளி நீக்குக.

## படிக்கார நீர், வெங்கார நீர்.

படிகாரம், அல்லது வெங்காரம் பலம் ஒன்றுக்கு எட்டுபடி நீர்விட்டு கலக்கிக்கொள்ளவும். வாய் கொப்புளிக்கவும், புண்க ளைக் கழுவவும் உதவும்.

## வீர நீர்.

வீரம் கிரெயின் ஒன்றுக்கு எட்டு அவுன்ஸ் நீர்விட்டுக் கலக் குவதே வீரநீர். பூச்சிகளைக் கொல்லவும் விரணங்களைக் கழுவ வும் உபயோகிக்கலாம்.

## வெங்காரப் பொடி.

பச்சை வெங்காரத்தைச் சாணப்பாலில் தோய்த்துத்துடைத் துலர்த்தி நுண்ணிய பொடிசெய்து, புண்புரை, புடைகளின்மீது தூவ அவைகள் மாறும்.

## புண் பொடி.

சுத்தித்த கெந்தியை ஊமத்தங்காயுட் செலுத்தி சாணத்தால் கவசித்து இரண்டு வரட்டியிற் புடமிட்டெடுத்து சாணத்தையும் காயின்மீதுள்ள முட்களையும் கத்தியால் நீக்கி, நிறுத்து இதன் எடைக்கு நான்கு பங்கு துளசி இலையைச் சேர்த்து நனியரைத்து வெயிலிலுலர்த்தி சொறி, சிரங்குகள்மீது தேங்காயெண்ணெய் பூசியபின் தூவிவர ஆறும்.

## ஒட்டு எருவை.

தேங்காயெண்ணெய் பலம் 10, வெண்மெழுகு பலம் 4 இவ் விரண்டையுஞ்சேர்த்து உருக்கி, அதில் பூரம் பலம் 1, மிருதார் சிங்கு பலம் ½, துருசு பலம் ½ இவைகளைத் தனித்தனியே நுண் ணிய பொடியாகச்செய்து முறையே தூவித்தூவிக் கிண்டி பொங் குதல் நீங்கி எண்ணெய் தெளிந்தவுடன், ஒரு வாயகன்ற மட்பாத் திரத்தில் அரைப்பானை திட்டம் தண்ணீர்விட்டு வாய்க்குச் சீலை

கட்டி அச்சிலேயிற் ஊற்ற, எண்ணெய் கீழிறங்கி சரக்குகள் மாத்திரம் சீலேயிற்றங்கும். இதை எடுத்துக் கலுவத்திலிட்டு வெண் குங்கிலியம் பலம் 4 சேர்த்து ஒரு சாமமட்டும் அரைத்து, பிறகு சுத்தநீர் விட்டு இரண்டு சாமமரைத்து, அந்நீரை வெளிப்படுத்தி மேலும் இவ்வாறுகவே 6 முறை செய்து, எருவையை புட்டியில் அடக்கச்செய்து, வேண்டியபொழுது சீலேயில் தடவி சிறிது அனலில்வாட்டி இரணங்களின்மீது போட்டுவர, அவைகள் ஆறும்.

## பச்சை எருவை.

வெள்ளைப்பாடாணம் பலம் 4, அரிதாரம் பலம் 4, சுண்ணாம்பு பலம் 8, குங்கில்யம் பலம் 16, துருசு பலம் 16, இவைகளை நல்லெண்ணெய்விட்டு மைபோலரைத்து, பிறகு நீர்விட்டரைத்து நீரை வெளிப்படுத்தி மீண்டும் இவ்விதம் ஒன்பது முறை செய்க. இதை ஊன்வளரும் கட்டி, புண் முதலியவைகட்கிட ஆறும்.

## வங்க வெண்ணெய்.

வங்கச்செந்தூரம், மிருதார்சிங்கு வகைக்குப் பலம் ஐந்து, துருசு பலம் இரண்டரை, இவைகளைக் கல்வத்திட்டு நுண்பொடி செய்து ஒரு வீசை வெண்ணெய் சேர்த்ரைத்துக் கொள்க. விரணங்கட்குத் தடவிவர குணமாம்.

## குங்கில்ய வெண்ணெய்.

சுத்திசெய்த குங்கில்யம் பலம் 1, வன்னிலேச்சாறு ஆழாக்கு 1, பசுவின் நெய் ஆழாக்கு 1. இவைகளைக் கலந்து சட்டியிலிட்டு எரித்து சிறிதாறினபின் நீர் நிறைந்த ஓர் வாயகன்ற மட்பானையில் கொட்டி மத்திட்டுக்கடைய கட்டிகட்டியாக வெண்ணெய் திரளும். இதை ஓர் பாத்திரத்திட்டு நீரைக்கொட்டி ஒவ்வொருதினமும் பழைய நீரை நீக்கிப் புது நீர் சேர்த்துவருக. இதில் நாளொன்றுக் கிருமுறையாக கொட்டைப் பாக்களவு கொடுக்க பிரமேகம், மேகவிரணம், கீல்பிடிப்பு, வாதவித்திருதி, காசரோகம், நகங்களைப் பற்றி உண்டாகும் விரணங்கள் நீங்கும்,

## கிளிஞ்சல் மெழுகு.

சிறு கிளிஞ்சலைச் சேகரித்து கரி நெருப்பிற் காய்ச்சி பச்சை நெல்லிக்காய்ச் சாற்றில் துவைக்க. இப்படி மூன்று முதல் ஐந்து முறை செய்து கல்வத்திட்டு சிற்றாமணக் கெண்ணெய் சிறுகச் சிறுக விட்டு மெழுகு பதம் வருமட்டும் அரைக்க. இதை கால் வெடிப்புக்குப் பூசிவரத் தீரும்.

## மிளகு மெழுகு.

பத்து பலம் மிளகை ஐந்து பலம் நெய்விட்டு மைபோலரைத்துத் தடவிவர புடைகள் நீங்கும். தலைவலிக்கும் தடவலாம்.

## மேக விரணக் களிம்பு.

இலிங்கம், சூதம், பூரம், வீரம், பால்துத்தம், மயில்துத்தம், மிருதார்சிங்கு, நீரடிமுத்து, கார்போகரிசி, கசகசா, மஞ்சள் மெழுகு வகைக்கு பலம் அரை, மெழுகு நீங்க மற்றவைகளைக்

கல்வத்திட்டுப் பொடித்து மெழுகு சேர்த்தரைத்து, பிறகு தேங்கா யெண்ணெய் விட்டரைக்க. இதைத் தடிப்புள்ள விரணங்கட்குத் தடவிவரத் தடிப்புக் கரைந்து ஆறும்.

## வாத சுர கஷாயம்.

பெருங்காஞ்சொரி வேர், திப்பிலிமூலம், சித்திரமூலம், சங் கன்வேர், வெள்ளறுகு, நிலவேம்பு, முருக்கம்வித்து, கழற்சிவேர், கண்டங்கத்திரி, பேராமுட்டி, சிற்றரத்தை, மாவிலிங்கவேர், பேர ரத்தை, சிறுகாஞ்சோரி, சதகுப்பை, விஷ்ணுகிராந்தி,சிறுதேக்கு, சுக்கு, திப்பிலி, செவ்வியம், கோஷ்டம் இவைகளை யெல்லாம் நன் ருய் இடித்து இருபத்தோர் பாகங்களாக்கி ஒரு பாகத்திற்கு மூன்று சேர் நீர் சேர்த்து முப்பது நாழிகை ஊறவைத்தபின் அடுப் பேற்றி கால் சேராகச் சுண்டக்காய்ச்சி இறக்கிக்கொள்க. வாத ராக்ஷசக் குளிகை பணவெடை பொடித்து தேன் கழஞ்சு சேர்த்து இழைத்து மேற்படி கியாழத்துடன் இரு நேரந்தர வாத சுரங்களும் நடுக்குவாதமும் போம்.

## பித்த சுர கஷாயம்.

விலாமிச்சை, சிறுகாஞ்சோரிவேர், வில்வவேர், பாதிரிவேர், அதிமதுரம், கோஷ்டம், நன்னாரி, நிலவாரை, சீரகம், கொத்து மல்லி, தும்பைவேர், பேரீச்சங்காய், யானைத்திப்பிலி, நெல்லி முள்ளி, சுக்கு வகைக்கு 1 பலம் எடுத்து இடித்து 16 பங்கு செய்து ஒரு பங்கை 3 சேர் நீர்விட்டு 30 நாழிகை ஊறவைத்து முன் போல் காய்ச்சி கோரோஜனை மாத்திரையை தேனில் இழைத்துக் கொடுப்பதுடன் இக்கஷாயத்தையும் கொடுக்கவும். இதனால் பித்தசுரம் 21-ம் தீரும்.

## கப சுர கஷாயம்.

சுக்கு, திப்பிலி, கிராம்பு, சிறுகாஞ்சோரிவேர், அக்கிராகாரம், முள்ளிவேர், கடுக்காய்த்தோல், ஆடாதோடை, கற்பூரவள்ளி, கோஷ்டம், சீந்தில், சிறுதேக்கு, நிலவேம்பு, வட்டத்திருப்பி, முத் தக்காசு, இவை வகைக்கு ஒரு பலம் எடுத்து இடித்து 15 பங்கு செய்து ஒரு பங்கிற்கு இரண்டுபடி நீர்விட்டு முன்விதிப்படி கஷாழமாக்கி சந்திரோதய மாத்திரை அல்லது கோரோசனை மாத் திரையைப் பொடித்து தக்க அளவில் தேன் சேர்த்து இழைத்து இருவேளை முன் கஷாயத்துடன் தர கபசுரம் அனைத்தும்போம்.

---

# INDEX.

ச

The Kandan Press, 32, Broadway, Madras.

